ஸ்ரீ

# ரமண ஞான போதம்

எட்டாம் பாகம்

# உபதேச விளக்கம்

(இரண்டாம் பிரிவு)

ஸ்ரீ முருகனர்

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

# ரமண ஞான போதம்

எட்டாம் பாகம்

## உபதேச விளக்கம்

(இரண்டாம் பிரிவு)

இயற்றியவர்

ஸ்ரீ முருகனார்

பதிப்பாளர்

ஸ்ரீ ரமண கேந்திரம்—புது தில்லி

1995

கிடைக்குமிடம்:—

ஸ்ரீ ரமணாச்ரமம் புத்தக சாலை,
திருவண்ணாமலை-606 603, தமிழ் நாடு.

Ramana Kendra,
8, Institutional Area,
Lodi Road, New Delhi-110 003.

Sri Arunachalaramana Nilayam,
11, Sri Ramana Nagar,
Tiruvannamalai-606 603, Tamil Nadu.

Ramana Kendra,
No. 11, C. P. Ramaswami Iyer Road,
Madras-600 018.

Ramana Maharshi Centre for Learning,
40/41, II-Cross, Lower Palace Orchards,
Bangalore-560 003.

**விலை ரூ. 10**

மத்திய அரசின் உதவி பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

Published with the Financial Assistance from the Government of India, Ministry of Education & Social Welfare (Dept. of Education.)

This book has been published on the paper supplied by the Government of India at concessional rates.

அச்சிட்டோர்:
விநாயக ஃபைன் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
163, வெள்ளாளத் தெரு, சென்னை-600 084.

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

## முன்னுரை

ஸ்ரீ ரமண பகவானின் உபதேசம் மோன வடிவிலேயே இருந்ததால், அதனை எழுத்து வடிவிலும் சொல் வடிவிலும் நமக்குக் கிடைக்கத் தூண்டுகோலாயிருந்தவர் ஸ்ரீமுருகனார் சுவாமிகள். அவர்தம் ரமணானுபவத்தில் பெற்றதை மற்ற ரமண அடியார்களும் பெற விரும்பி எட்டாம் பாகமாகிய இந் நூலில், ஸ்ரீ ரமண ஞான போதத்தை உளவு, உபாயம், இலக்கணம் என்ற மூன்று தலைப்புகளில் தருகிறார்.

எடுத்த எடுப்பில் ஸ்ரீ பகவானை குருவாக அடையப் பெற்றது எத்துணை மாண்புடையது என்பதையும்,

"சமன மாகாத சமுசாரத் தீச்சே
ரமணமாம் பாழுலகை அஞ்சி—ரமண
வழகனைப்போய்ச் சேர்ந்தா ரவனருளால் வாழ்ந்தார்
தழலுமுத் தாபந் தணிந்து" (638)

"ஆண்டா னருட்சே வடியிலே சற்பத்தி
பூண்டா லதனினுமெய்ப் புண்ணியம் வேறொன்றுமில்லை;
தீண்டாது சற்றுமெந்த தீவினையும் பாழ்ங்கன்மப்
பூண்டா மகந்தையறப் பொன்றக் கெடலாலே." (814)

"அம்மையப்ப னனை வருட்குருவை யன்றியுயிர்க்
கிம்மையே யன்றுமற் றொம்மையினும்—செம்மைசேர்
உத்தமசற் போத வுறுதிசெய்யு நல்லுற்றார்
இத்தரையில் யாரே உளர்." (808)

"ஏதுக்குஞ் சிந்தை யிறைவன்பே ரின்பவரு
ளாதிக்கத் தின்கீ ழடைந்தவர்க்கு—நீர்துக்கஞ்
சற்று முறாதீர் சதாகதியாத் தானுமக்கு
முற்றுமுளான் மோன முதல்." (690)

மேற்கூறிய பாடல்களின் மூலம் ரமண மெய்யடியார்கள் ஸ்ரீ பகவானை குருவாக அடைந்துள்ள பாக்கியத்தையும் சிறப்பிக்கின்றனர்.

சொரூபமே குரு வென்றும், உணர்வு மயமாக உள்ள அத்துணையே பெருந்துணை என்றும் கூறுவதால் பிற துணைகள் வேண்டி உடலுருவோடு வாழும் குருமார்களை நாடத் தேவையில்லை என்று பின்வரும் பாடல்களால் கூறுமல் கூறுகிறார்.

"துணையிலே னல்லேன் சொரூபவருட் சோதித்
துணையே பெருந்துணையா வுள்ளேன்—துணையாமவ்
தாருயிர்க்குக் காப்பா வரண்செய்ய யென்று மெனக்
கோருயக்க மேனோ வுளத்து" (1712)

"உணர்வே யலான்மற் றொருதெய்வ மில்லை
உணர்வேகா னுண்மை யுரு." (777)

உலகியல் தேவைக்காகச் சிறு தெய்வங்களின் பின் அலையாதீர், சொரூபமே அனைத்தும் நல்கும் என்பதை

"கோவிக்கா தென்னைக் குறிக்கொண்டு கேளீர்நுந்
தேவைக் கெனவோர் சிறுதெய்வம் பேணாதீர்
சேவிக்க லுற்றார் சிறப்பளிக்க வல்லதுகத்
தாவிக்கோ ராவியா வார்ந்த சொரூபமே." (10 0)

மிக்க அடக்கமாகவும், திடமாகவும் அறிவுறுத்துகிறார்.

சாதகன் உலகியலில் எப்படியிருக்க வேண்டுமென்பதை

"ஒன்றிலுந் துன்ப முழவாமைக் கேதுவா
என்றென்றும் நல்லோர்க் கியல்பா விருக்குநலன்
அன்றென் றெதையுந்தா மன்று தெவற்றையுமே
நன்றுநன் றென்று நடக்குமனப் பான்மையே." (165)

"தன்சொருப வுண்மைநிலை சார முயற்சிப்போன்
தன்சொருப வுண்மை சகஜமாச் சாரளவும்
தன்சொருப சங்கமே சாதனையாற் சார்தலொழிந்
தன்னியசங் கத்தோ டளாவி லனர்த்தமே." (489)

"இனியனுத் தானிருக்க வேண்டிற் றனக்குத்
தனியனு நிற்கை தரும்." (1000)

மேற்கூறியவாறு அறிவுறுத்துகின்றார்.

சொரூப நாட்டமே சாதகர்களுக்கு மிக இன்றியமை யாதது என்பதை,

"தொழக்கும் பிடத்தக்க சுத்த சொரூபப்
பழக்க முற நாளும் பயிற்றிப் —பழிக்கவே
தக்கவகங் காரச் சதிகார மாயையினின்
றெக்கவுனைக் காத்து நீ யோம்பு." (582)

என்றவாறு இயம்புகிறார்.

ஆண்டவன் (குரு) உள்ளத்தில் எழுந்தருளினலன்றி, நாம் சாதனை செய்து ஆண்டவனை அடையமுடியாது என்பதையும், அவன் நம் உள்ளத்தில் எழுந்தருளவேண்டு மாயின் நாம் சதா அவனை நினைந்து நினைந்து, அவன் பாதத்தில் அதே நினைவாய் நிற்கவேண்டும் என்பதையும்

"ஆண்டவனே யுள்ளத் தவிர்வுற்று லன்றிமற்
ருண்டவனை நம்மா லறிந்தடைய வொண்ணுமோ?
ஆண்டவா வாண்டவா வாண்டவா வென்றுசிந்தித்
தாண்டவன்பா தத்தி லதேநினைவா நிற்போமே." (290)

என்று உளவு கூறுகிறார்.

"தம்மா லியன்றவரை சாதனைதாம் செய்தாரேற்
றம்மா லியலாததைத் தம்மான் சாதிப்பான்;
தம்மா லியன்றதுமே தாம்செய்யத் தப்பினரேற்
றம்மா னருளுக்கோர் சற்றுந் தவறின்றே." (192)

என்று கூறி, திருவருளாலன்றி ஆண்டவன் பாதத்தை யடைய முடியாதென்றும், நம் நாட்டத்தை ஆண்டவனை நோக்கி யிருத்திவைக்க வேண்டுமே தவிர, உலக விவகாரங் களில் விடக்கூடாது என்றும், தனித்துத் தனித்து இருந்து தாப மேலிட்டு ஆண்டவனை எண்ணி உருகினல், திரு

வருளணைப்பைத் தானாய் உணர இயலும் என்றும், திருவருளின் துணை ஒருபோதும் தவறுவதில்லை என்றும் உணர்த்துகிறார்.

ஞானத்தின் இலக்கணத்தைக் கூறும்போது

"இறைவன் பரமா வெலாவற் றையும்விட்
டிறைவு நினை வன்றிமற் றொன்றின்றி—இறைவன்
செயலாக வெல்லாச் செயலுந் தெரியு
மியல்புசிவ ஞான மென் பார்." (1236)

என்று சரணாகதியின் தத்துவத்தை விளக்குகிறார்.

"ஆதிரையின் பின்னா ளவதரித்த வாண்டவன்சற்
போதனையே யுண்மைப் *புலம்." (179)

என்று கூறி, ஸ்ரீ பகவானின் ஒப்பற்ற அவதாரமாகிய சற்போதனைகளே உண்மையான வேதம் என்றும், அதனைக் கடைப்பிடித் தொழுகுதலே நம் உய்வுக்கான நேர்வழி யென்றும், ஆகவே மற்றைய வழிகளில் சென்று காலத்தை விரயம் செய்து வீணாதல் வேண்டாம் என்றும் எச்சரிக்கின்றார்.

இந்நூலைப் பக்குவரோதிப் பயனுறுவாராக.

**N. சங்கரன்**

*புலம்—வேதம்.

# உள்ளுறை

## II. உறுதி யுரைத்தல்

## III. இலக்கணங் கூறல்

பக்கம்

## IV. கதம்பக் கருத்து

V. முடிவுரை

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணசலரமணய

# ஸ்ரீ ரமண ஞான போதம்

## எட்டாம் பாகம்

# உபதேச விளக்கம்

## இரண்டாம் பிரிவு

—o—

### பாயிரம்

#### 1. பாடவருளினன்

(வெண்பா)

1. ஊக்கமா வுள்ளத் தொளிபெருக வாண்டவன்கண்
ணேக்கமெனக் குள்ளே நுழைந்ததால்—வாக்குமிக
நன்கு வளம்பெற்று ஞான விலாசத்தோ
டென்கணியல் கின்ற தினிது.

2. அன்புசிவ மாக வகத்திற் கலந்துமனத்
துன்பசைவு போகத் துரத்தியே—இன்ப
வருட்பணிகற் பித்தா னடியேனுக் காண்டான்
பொருட் புகழ்நான் போற்றும் படி.

3. ஊத்தைநா யாக வுளறுமடப் பேதையேன்
வார்த்தையுளும் மாண்பொருள் சேரவைத்தான்
—சீர்த்திகெழு
தெய்வப் புலவனருட் சிந்மாத் திரசொருபன்
மெய்விப் பிரரமண வேந்து.

## 2. பாடக்கிடைத்த பாக்கியம்

4. ஊமை யுடற்றியென் னுள்ளத் துறுதுணையா
வாழுங் குருமணியை வாழ்த்தலே—ஏழுலகும்
பெற்ருலே போலப் பெருமகிழ்சேர் பாக்கியமா
வுற்றே னுறுதியுற் றேன்.

## 3. ஆண்டவன் சந்நிதி பாட்டுவிக்கும்

(கொச்சகக் கலிப்பா)

5. கம்பன் வீட்டுக் கட்டுத் தறியுங் கவிபாடும்
கொம்பின் மிழற்றுங் குயிலுங் கிளியுங் குருரமண
நம்பன் னமயார் நாவே யன்றி யடிநாயும்
தெம்புற் ருளிர்சச் சிற்பர ஞானத் திறம்பேசும்.

## 4. நூற் பயன்

6. வாதிக்க மூண்டெழுபொய்ம் மாய மதித்திறத்தாற்
சாதிக்கச் சற்றுமொண்ணுத் தன்மையான் சுத்த
[மெய்ஞ்ஞா
ஞதித்த ஞகமெய் யன்பரகப் பாழகற்றும்
பாதத் திறம்பரவிப் பாடுதுங்கா ணம்மாஞய்.

# நூல்

## I. உபாயமுரைத்தல்

### 1. அகங்கார நாசம்

(குறள்)

7. நானென்ற தன்மை நழுவலே சுத்தவருள்
வானென்று வாழ்க்கை வழி.

8. ஈன உடலகந்தை யிற்றுற்பே ரின்பவருள்
வானமா வைகும் மனம்.

9. காய வகந்தையறக் காணிற் கரந்தொழியும்
மாய வுலக மயக்கு.

10. தேகான்ம பாவமறத் தீர்ந்தால் விளங்குமகத்
தேகான்ம வுண்மை யியல்.

11. மோகவகங் கார முனைப்பற் றொழியிலன்றி
யோகங்கை கூடா துயிர்க்கு.

12. அனுமதிக்க வொண்ணு வகப்பேயை யோட்டிற்
றனதியற்கை சாருந் தகைத்து.

13. மோக வகப்பேய் முனைப்பறிலே மூண்டொளிரும்
சோகமோ கந்தீர் சுகம்.

(வெண்பா)

14. கள்ள வகந்தைக் கருத்துக் கிடங்கொடா
துள்ளுணர்வா லென்று மொடுக்குதி—உள்ளுறு
[வெம்
பாசபந்த மான மயற் பாழவிச்சை மாய்க்கவுனக்
கோர்சிறந்த நல்ல வுளவு.

15. அபார சிவத்துக் கடிமையாய் வாழு
முபாயமே தென்னி லுரைக்கேன்—சிவாய
நமவென் றருட்பதத்தே நானென்னும் பற்றற்
றமைவொன்றும் மோன வறிவு.

16. தனுகரண மாகத் தடித்துச் சரிக்கும்
முனேவே யனைத்துக்கும் மூலம் – எனவேயவ்
வற்றமா மோக வகந்தையறத் தீர்ந்தொழிவே
முற்றத் துறக்கும் முறை.

17. இரண்டிலா மோன மியல்பான வுண்மை
இரண்டறிவே மோக வியற்கை—மருண்டுபடு
மூடவகங் கார முனைப்பற் றொழியிலகங்
கூடலுறு முண்மைக் குலா.

18. இயற்கையா வுள்ளபே ரின்பநிலை முற்றச்
செயற்கையே போலமனந் தேறல்—மயற்கைசேர்
பொய்யா முடலகந்தைப் புந்தியே யாகவுணர்ந்
துய்யா சதனை யொழி.

19. ஆனந்த மோன வருட்பதத்தி லன்றியுயிர்க்
கூனந் தவிர வொருஞமையால்—ஈனந்
தருமா ணவமுனைப்பாச சாரு மகந்தை
யுருமாள வேண்டு முளத்து.

20. நிறைபதமா முண்மை நிலையிலே நானற்
றுறைவதுபே ரின்ப வுபாயம்—அறல்வேண்டும்
தேகவகம் புத்திச் சிறையான நானெனும்புன்
மோகவகங் கார முடிச்சு.

21. இன்பமாத் தூன்ற லிரண்டுபடு சிந்தையிறந்
தன்பிலோன் றான வனுபவமே—நன்பதமெய்
யன்பிலே தன்னை யறக்கெடுத்துச் சிந்தையறி
லின்பத்துக் கில்லை குறை.

(கொச்சகக் கலிப்பா)

22. கட்டிக் கரும்பான கைவல் லியவுண்மை
எட்டிப் பிடிக்க வியல்வதன்று, கற்பனையிற்
சுட்டறிவாத் துன்று துடிப்பா மகந்தைமனங்
கெட்டொழியி லன்றித்தன் கேழ்கிளர்மெய்த்
[தன்மையிலே

23. கற்றாலுங் கேட்டாலும் காயசித்தி யோகசித்தி
யுற்றாலும் செய்தவத்தா லூக்கத்தா லோர்புலனும்
துற்றது வாழ்வே துறந்தாலும் பாழகப்பற்
றற்றாலே யன்றி யாருட்பரவாழ் வெய்தாதே.

24. உறவனைத்தும் விட்டுத் துறவுபூண் டுள்ளத்
தறவிரதங் காத்தோம் பாருந்தவஞ்செய் தாலும்
அறிவிலே மோக வகப்பே யணுகா
தறவகற்றி லன்றி யனர்த்தங் கெடாதே.

25. எத்துணைக் கெத்துணை யார்யா ரடங்கினு
ரத்துணைக் கத்துணை யன்னு ரருள்பெறுவர்
அத்தனருட் கைவல்ய மார்வதன்முன் யானெனும்
[பொய்ம்
மத்தவகப் பேய்ச்செருக்கு மாண்டொழிய வேண்
டுமே.

26. விட்டொழியா விஞ்ஞை வெளியிலே கற்பனையாஞ்
சுட்டறிவே பற்றிச் சுழலுமகச் சிச்சடப்பேய்
கெட்டொழிந்தா லன்றிக் கிளர்சொருப வாழ்வான
நிட்டையிலே தன்னியல்பா நில்லாது புத்தியே.

குறிப்பு: விஞ்ஞை வெளி - பரவெளி.

27. உண்மைப் பரமாக வுள்ள சிவத்திலருள்
வண்மைபெறத் தன்னை வளர்த்தி யறிதுயிலின்
ஒண்மையால் யானெனும்பா ழூனவுணர் வைக்
[கெடுக்கிற்
றிண்மைசேர் தன்மெய் சிவோகமாத் தீருமே.

28. மயக்கக் கலக்க மனத்தால் உயிருக்
குயக்கக் கவலை யுறுவதன்றித் தன்னை
யயர்க்கலுற்ற மோக வகந்தையறப் பெற்றாற்
கயக்கமில்பே ரின்பக் களிமயமாம் வாழ்வே.

29. ஏனையபொய்க் கற்பனைகட் கெல்லாமோ ரில்லான
நானெனும்போய்த் தன்மை நலிந்திடலாற் கற்பனை
[தீர்
தானெனுமெய்த் தன்மை தழைத்தொளிரக் காணி
[லன்றித்
தீனமற்ற சுத்த சிவத்துவந்தாஞ் சேர்வரிதே.

30. தெள்ளத் தெளிந்தவருட் செல்வம் பெறவுயிர்க்குக்
கள்ள மனத்தைக் கடியலே தக்கநெறி
உள்ளும் புறமுமொருங் குண்மை கடைப்பிடிக்கில்
வெள்ளவெளி யாக விளங்குந் திருவருளே.

31. கள்ளவெம் பாசக் கலக்கத்தால் யானென்று
துள்ளுமனே வேகத் துடிப்பா மகந்தையற
உள்ளதே வாழ்வா வொளிபெறத்தாங் காணி
[லன்றித்
தெள்ளிதாத் துன்று சிவானந்தஞ் சேர்வரிதே.

32. உதித்த வகந்தை யொடுங்காதோர் வாழ்விற்
பதைத்தலை யாரும் பரிகரிக்க வொண்ணார்
பதைத்து வருந்தாப் பரமோப சாந்தப்
பதத்துக் குபாயமே பாசமுனைப் போய்வே.

33. திரோதமா மாயச் செருக்கே யுயிர்க்கு
விரோதமா வுள்ளூர் விடமப் படிறு;
துரோகவகப் பேயைத்தற் சோதனையா லுள்ளத்
திராதகற்றி லன்றியுயிர்க் கேமமென்று மின்றே.

34. ஊடாட லூற்றபா ழூத்தையகப் பேயையகத்
தூடாட வொட்டா துணர்வாற் கடியினல்லால்
வீடாக வுள்ள விசுத்தவகம் பாழகப்பேய்க்
காடாகும் பாழ்த்த கலக்கமலக் கத்தாலே.

35. அலைதலுற்ற வாசாபா சக்கடலிற் பட்டோர்
தலைதலுற்ற மோகமனச் சர்ப்பனையாத் துன்றும்
முலையுருக்க வொட்டாது மோசித்தா லன்றி
உலைதலற்ற மோனவுணர் வுள்ளத் துறுரே.

36. சாற்ற வொணுதசிவ தற்பரத்தின் மாட்சிநமக்
காற்றவியல் பாக வமைந்தநிக்க சித்தமே;
கூற்றமே யான கொடும்பிர மாதமற
மாற்றியகந் தேரின் மகோதயமா மவ்வியல்பே.

37. இயல்பான வுண்மையா மென்றென்று முள்ளத்
தயலொன் றறவிளங் கான்ம சொரூபம்
மயல்சே ரகங்கார மானுபி மானச்
செயலற் றொழியிலன்றித் தேற வொணுதே.

38. *மொட்டான கட்டின் முடிவிடா மோகமனச்
சுட்டான கற்பனை சொப்பனவாழ் வுண்மையாப்
பெட்டா தரிக்கும் பெருமாயப் பேயகந்தை
கெட்டாலே காணக் கிடைக்கும் பரசிவமே.

*மொட்டான..... மனம் - தாமரைமொட்டின் கட்டுப் போன்ற முடிச்சு விடுபடாத—கிரந்தி பேதிக்கப் பெறாத - இருள் பொதிந்த மனம்.

39. நானென்னும் பொய்ம்முனைப்பு நாணித் தலைசாய
மோனங் கெழுசொருப மொய்ம்பான சுத்தவருள்
யானென் றிதயத் தியல்பா விளங்கிலன்றி
ஊனவகப் பேயை யொழிக்கவல்லார் யாவரே.

40. வெற்றுணர்வா வுள்ள விசுத்தமூ லப்பதத்தி
லற்றொழிந்தா லன்றி யகந்தைமதி யார்க்குந்தம்
முற்றமுடி வான முழு மூதுணர்வா முண்மையமற்
றெத்திறத்தா லுந்தேர்ந் தியைவரிது சற்றுமே.

41. மங்குலாஞ் சிச்சடப்பொய்ம் மாயமறக் கேவலமாத்
தங்கலுற்ற சுத்த சதாசிவமே தன்சொருப
மங்கலவாழ் வாக மடுக்கிலன்றி யுள்ளத்திற்
பங்கமிலாத் துங்கப் பரமார்த்தந் தோய்ந்ததன்றே.

குறிப்பு :—மாயமற மடுக்கிலன்றி என வியையும்.

42. காண வொண்ணாதவருட் கைவல் லியசொருபம்
மாண விளங்கு வசீகரஞா னனுபவம்
தூணமா வூன்று சொரூபவொளிக் *காணவக்கா
ரூணமா வுற்ற வுளத்திலன்றி யொண்ணாதே.
*ஆணவம் - யானென்னுஞ் சீவபோதச் செருக்கு.

43. சுட்டறிவாற் சற்றுந் துலங்கான் சொரூபவருட்
கட்டழகா லென்னைக் கலந்தபிரான் சிச்சடப்
[பொய்க்
கட்டுருவா மோகவகங் காரமறிற் சிற்பரமெய்
வெட்டவெளி யாக விளங்குவான் வேறறவே.

44. திருத்தமா வுண்மைத் திறத்தே முயல்வோர்
விருத்தமாச் சேர்ந்த வெறிசே ரகந்தைக்
கருத்தே கொடும்பாழ்ங் கலியென் றகற்றிற்
றிருத்திசேர் சிற்பர சித்திசேர் வாரே.

45. பரக்கப் பலவிகற் பங்களி லோடி
வெருக்கொளும் மோக வெறிசே ரகந்தைச்
செருக்கறச் சித்தந் தெளிந்திடின் ஞான
வருக்கனு வுள்ளத் தவிரும் பரமே.

46. மோனனு பூதி முகக்கவென் னுள்ளுணர்விற்
றுறு வொளிர்சொருபத் தற்பரன்மெய்ச் சிற்பதத்தில்
நானு னெனக்குளறு ஞானமஞ் ஞானமாப்
போனு லொழிடப் புணர்ந்ததன்று தன்னியலே.

47. ஊனங்க மாக வுருத்துழல்வெம் பாசவுயிர்க்
கியானென்ற சிச்சடக்கட் டிற்றெழியக் கூரறிவாற்
றுனென்ற சுத்தசிவத் தன்மை மலரிலன்றி
மோனங் கிளர்சொருப முத்திநிலை சார்வரிதே.

48. யாவுங் கடந்த வியற்பரமோ னனுபவம்
மேவுங் கருத்தில் விளங்குவது சாந்திபதம்;
ஆர்வங் கிளர்ந்தவரு ளாசையால் யானெனுந்தஞ்
சார்வொடுதாஞ் சாவுற்று லன்றியது சாராதே.

49. ஜகந்தனிலே பட்டுத் தடுமாறும் பாச
வகந்தைமனே வேக மடங்கினு லன்றி
உகந்த சிவானுபவ வூற்றுன சாந்தி
முகந்திடவொண் ணுதகத்து மோனவுணர் வுற்றே.

குறிப்பு:—அன்றி உற்று ஒண்ணுது எனக் கூட்டுக.
உகத்தல் - விரும்புதல்.

50. நீக்கமற வெங்கு(ம்) நிறைந்தவிறை தன்னடியை
ஊக்கமா வுள்ளத் துபாசிக்கும் மெய்யன்பர்க்
கேக்கமில்பே ரின்ப வியற்பதமாத் தானருள்வ
தாக்கமார் சுத்தஞா னுன்மானு பூதியே.

51. புத்திக் கொளியாகப் பொங்குறுசற் போதவருள்
வித்தையே முந்திசேர் வித்தலால் யானென்னுஞ்
சித்தக் கலக்கச் செருக்கற் றெழியிலன்றி
முத்தித் துலக்கமா மோனவுணர் வெய்தாதே.

52. மாறுபி மான மயக்கவிருள் சூழுலகில்
யானென தன்மைகெடத் தானு வொளிர்சொருப
மோனனு பூதி முகப்பதா லன்றியகத்
தானாத சாந்தி யடையவொண்ணு தார்க்குமே.

53. புற்புதமே போலப் புலனும் அகந்தைமனக்
கற்பனையை மாற்றக் கடவரே சுத்தசிவத்
தற்பரமாய் நிற்கத் தலைப்பட்டோர் தன்னிழப்பாற்
சிற்பரவாழ் வோங்கச் செழித்தமோ னப்பதத்தே.

54. மாணவொண்ணு நானெனும்பொய்ம் மாயமகன்
[றலன்றிக்
காணவொண்ணு வுண்மைக் கடவுள் விளங்காது
காணவொண்ணு வுண்மைக் கடவுளியல் காணலுற்
[றோர்
மாணவொண்ணு வச்செருக்கை மாற்றக் கடவரே.

## 2. அகமுகம்

(குறள்)

55. ஒளிவடிவா வுள்ளத் தொளிர்தன் னுருவை
வெளியிலே தேடல் *வெளிறு.

*வெளிறு - அறியாமை; குற்றம்.

(கொச்சகக் கலிப்பா)

56. மனத்தைக் கடந்தபெரு மாட்சியாற் றன்மெய்
யினைத்தென் றறிய வெவர்க்கு மொணுதான்
மனத்தைத் திருப்பித்தன் மாட்டே மடுக்கிற்
றனித்த சொரூபமாத் தானொளிர்கிற் பானே.

57. பொய்த்தன்மை யாலே புறக்கணிப்பாற் சுத்தசிவ
மெய்த்தன்மை தானே விளங்கினும் நாங்
[காண்பதில்லை;
மைத்தன்மை யான மனத்தை விளக்கியகத்
துய்த்திடவவ் வொட்பநுட்பக் காட்சி வெளிப்படுமே.

**குறிப்பு :—விளங்கினும், புறக்கணிப்பால் காண்பதில்லை என வினையும்; விளக்கி வெளிப்படும் என வினையும்.**

58. உள்ளப் புலத்தைநீ யூடுருவி நோக்கினுற்
றெள்ளத் தெளிந்தசிவ வெள்ளக் கடல்விளங்கும்
கள்ளப் பசுபாசக் கற்பனு சொப்பனத்தைத்
தள்ளி யுனையசங்கத் தற்பரமாத் தேற்றியே.

**குறிப்பு :—தள்ளி தேற்றி விளங்கும் என வினையும்.**

59. விவத்தையில் லாத வெறும்பாழ் மயக்க
வவத்தைநோக் கத்தை யகற்றித் துரீய
சிவத்தையே தேறத் தெளிந்துநோக் குற்றோர்
சிவத்தே பரமார்த்த சித்திசேர் வாரே.

60. தெரிவே யுருவாத் திகழ்சொருபந் தானே
குருவா விதயங் குருகுலமாக் கூடிற்
பரமோப தேசப் பயன்பெறுவர் சுத்தத்
துரியானு பூதித் துலக்கஞ்சேர் வாலே.

### 3 அச்சமறல்

(குறள்)

61. சிற்சத்தி யாலகந்தை செத்தாற் றுவிதஞ்சே
ரச்சத் தியற்கை யறும்.

### 4. அடங்கலொடுங்கல்

62. உதித்த விடமே யொடுங்குமிடம்; யான்முன்
னுதித்ததெங் கென்றுய்ந் தொடுங்கு.

63. உண்மையுள வாக வுணர்வொடுங்கி லன்றிமற்
றுண்மையனு பூதி யுறாது.

64. சுத்த வறிவுத் தூணைகொண் டுளத்தொடுங்கின்
மத்தமனச் சேட்டை யறும்.

65. கற்பனை மோகக் கலக்கமறும், நானெனுந்தன்
னுற்பவமோர்ந் துள்ளொடுங்குற் றால்.

66. அடிமை செய்யப் பெற்றமெய் யன்ப ரகத்திற்
படிமயற்பா ழாசை யறும்.

67. ஒடுங்கலுற் றா லன்றி யுணர்வான வுள்ளத்
தடங்குவதன் றாணவப்பாழ்ம் பேய்.

68. உணர்வான வுள்ளத் தொடுங்கிலன்றிச் சற்றும்
புணர்வரிய மோனப் புலம்.

69. சித்திலே சித்தஞ் செறிந்தொடுங்கக் காண்டலே
முத்திசேர் சூக்க முறை.

குறிப்பு:—சித்திலே சித்தம் ஒடுங்கல் எனினும், இதயத்தே மனம் ஒடுங்கல் எனினும் ஒக்கும்; சிவத்திலே சத்தியொடுங்கல் என்பதும் அதுவே—காண்டல் என்னும் குறிப்பால் ஒடுங்கல் விசாரத்தால் எனக் கொள்க

70. வீண்டருக் கத்தை விடுத்திதயத் துள்ளொடுங்கிக்
காண்டலுற வேண்டுங் கதி.

71. அருளும் பொருளு மபேதமாக் காண்டல்
வெருளற் றெழியும் விதம்.

72. திளைத்தலுற வேண்டிற் சிவசொருப சாந்தி
உளத்தொடுங்க வேண்டு முணர்வு.

(வெண்பா)

73. அடங்கி யடங்கி யகந்தை முளைப்பற்
றொடுங்க வொடுங்க வுளத்தே—தொடங்குமடக்
கர்த்தத் துவமாங் கலக்கமறு சுத்தவருட்
புத்தத் துவமாம் பொலிந்து.

74. இறைவ னடியா ரெதிர்ப்படி லன்னு
ரிறைவனுரு வாகவே யெண்ணிக்—குறைவறுமெய்
யன்பு வழிபா டகங்குளிரச் செய்வோர்பே
ரின்பவருள் சேர்வ ரினிது.

(கொச்சகக் கலிப்பா)

75. இடக்கு முடக்கா வெதிலு மிடைப்பட்
டடக்குவ தோநல் லறிவன்று; சான்று
நடக்கு மவற்றை நடக்குமா நோக்கல்
கடக்கு முபாயமாக் காண்பர்நல் லோரே.

குறிப்பு :—நல்லோர் - அறிஞர்.

76. கருத்தை யடக்கிநீர் கண்பிதுங் காதீர்
கருத்தை யடக்கல் கடும்பிர யாசை
கருத்தைக் கருத்தாற் கவனித் திடிலக்
கருத்தின் கதியைக் கடந்திட லாமே.

77. எழுந்த வகந்தை யிதபமூ லந்தேர்ந்
தழுந்த வொடுங்கி யடங்கினு மன்றி,
விழைந்தவருள் வாழ்வான மிக்க சொரூபப்
பழந்தன்மை யாராலும் பற்றற் கரிதே.

78. யாங்கணுமில் லாதபே ரின்ப வியற்பாவாழ்
வியாங்கணுமுண் டாக வியற்பாந்தேற் றங்கணுன்
ஈங்கெனமோ னக்குறியா லீண்ட வுணர்த்தியவொன்
றுங்க வடங்கிலன்றி யாய்ந்தறிய வொண்ணாதே.

79. கலங்கலின் றகக் கருத்தைத் தெளிவித்
தலங்கலின் றகவகத் தாழ்ந்தொடுங்கு மட்டும்
புலங்களைப்பின் பற்றலுற்ற புன்புலவோர்க் குண்மை
நலங்கிளர்மெய்ஞ் ஞானவொளி நண்ணலென்று
[மின்றே.

80. அடக்கி யொடுக்கி யகத்தே யுணர்வை
மடுக்கிற் சொரூப மயமா வழுந்தத்
தடக்க வொண்ணாதசிவ சாயுச் சியவாழ்
வடுக்கு மகத்தே யகப்பொருளாத் தானே.

குறிப்பு :—அழுந்த மடுக்கில் எனக் கூட்டுக.

81. நடுக்க மொழிக்குமெய்ஞ் ஞானப் பதத்தில்
ஒடுக்கமுற் றுயன்றி யூன வகந்தை,
தொடக்குமகப் பாழ்பயக்கத் துன்பப் பிறப்பைக்
கடக்க வொண்ணாது கலைஞானத் தாலே.

82. நித்தியவாழ் வான நிரதிசயா னந்தசுப
முத்தியியல் வித்தகமா மோனமென்பர்; நானென்
புத்தியித யத்திற் பொருந்தவிசா ரித்தொடுங்கும் [னும்
வித்தையா லன்றி விளங்காதம் மோனமே.

83. உதுக்காண் அயற்சுட் டுணர்வற் றொழிய
உதிக்கு முனைப்பை யொடுக்கி யுளத்திற்
பதைக்கு மனத்தைப் பதைப்பறக் காணிற்
பதுக்கமா முண்மைப் பரந்துலங் கும்மே.

84. கள்ளமன மானசங் கற்ப விகற்பமற
உள்ளுணர்வா மோன வொளிசே ருசாத்திறத்தால்
உள்ளொடுங்கி லன்றியுயிர்க் குய்ந்துணர வொண்
[ணாது
தள்ளவொண்ணா முற்றமுழுத் தத்துவமாந் தன்னியலே.

85. அடுக்கடுக்க வுள்ளத் தகந்தை வடிவா
மடுக்கலுற்ற மோக மனங்கெட் டொழிய,
நடுக்கமற்ற மெய்ஞ்ஞான நோக்கமா மோனத்
திடர்க்கலக்க மற்றபே ரின்பமெழுந் தானே.

குறிப்பு :—அடுக்கடுக்க வுள்ளத்து மனங்கெட்டொழிய
எனக் கூட்டுக.

86. கற்பதொன்று மில்லை; கடவதா வேண்டுவது
கற்பனையை முற்றக் கழித்தொழியு மவ்வளவே;
சிற்பரமே தன்சொரூபம்; சித்தக் கலக்கமாங்
கற்பனையை மாற்றிற் கடவுளியல் விள்ளுமே.

87. ஆயகலை யாவு மறிந்தாலும் பூதலத்து
மேயவர சாட்சி விளங்கத்தாம் பெற்றாலும்
மாயமனக் கற்பனையை மாற்றிலன்றித் தோன்றாது
தூயபர மார்த்த சுகமான சாந்தியே.

88. கள்ள மனப்பாழ்ங் கவல்கெடுக்க வேண்டுவோர்
வள்ளற் பிராணைமனத் தெண்ணி நமோநமவென்
றுள்ளத் துணர்வு தெளிய வொடுங்கினல்
வெள்ளமார் சாந்தி விசைத்துமீப் பொங்குமே.

89. தூயதிருத் *தொண்டர்க்குத் தொண்டராம்
[புண்ணியமே
நாயகன்பால் வேண்டினர் நாவுக் கரசரெனில்
நேயரா மன்பர் நிலைபெறப்போற் றக்கடவ
மீயுயர்வாம் புண்ணியம் மிக்கதுவே றில்லையே.

* 'குலம்பலம்பாவரு' என்னும் **திருவாரூர்** திரு **விருத்தப் பதிகம்.**

90. போதானு பூதி பொருந்தலுற்ற புண்ணியர்தம்
பாதார விந்தம் பணிந்துபணி யாற்றுதியேற்
பேதாடு வஞ்சவகப் பேய்ச்செருக்கின் மாயமற
நீதா னதுவான நிஷ்டை துலக்குவரே.

**குறிப்பு:—அது என்பது பிரம்ம வாசகம்; நிஷ்டை -** ஞான **நிஷ்டை.**

## 5. அருட் பார்வை

(குறள்)

91. சுத்தவருட் பார்வை துலங்கிலன்றி மத்தவகப்
பேய்க்கலக்கம் பேரா தொழிந்து.

குறிப்பு :—**பேராதொழிந்து - பேர்ந்தொழியாது.**

92. கடந்தவருட் பார்வை கலந்தால் இதயத்
தடந்தருபொய்ப் பாச மறும்.

**(கொச்சகக் கலிப்பா)**

93. நிரஞ்சனமா மோன நிகழ்ச்சியால் உள்ளத்
திரஞ்சகமா வுள்ளபே ரின்பநிலை தேற்றும்
பரஞ்சோதி யானவருட் பார்வையா லன்றி
விரிஞ்சா தியர்க்குமியல் வித்தகவாழ் வின்றே.

## 6. அருள்

(குறள்)

94. இருள்சூ ழுலகி லிடர்ப்பட் டுழல்வார்க்
கருளேகாண் மிக்க வரண்.

95. மருளிலகப் பட்டு மனங்கலங்க லுற்றார்க்
கருளையலா தில்லை யரண்.

96. கண்டகமா மோகவகங் காரமனக் குத்தவறக்
கண்டனைசெய் கிற்பதருள் காண்.

97. அருள்விளங்க லுற்ற வகத்தே அவித்தை
யிருள்குலைந்து *காணு மியல்.

*காணுமியல் - சொரூபவியல் துலங்கும்.

98. அறிவு தெளியிலகத் தாண்டா னருளாற்
பிறிதலுறும் பேதப் பிழை.

99. திருவருளா லுள்ளந் தெளிந்தால் அகப்பாழ்
வெருவரல்சேர் வேகங் கெடும்.

100. அருள்விளங்கக் காணிலன்றி யாசாபா
ழிருள்விலகக் காண்ட லரிது.

101. வண்மைசேர் சுத்தவருள் வாழ்வலரும் உள்ளுணர்வா
* லுண்மை தெளிந்த வுளத்து.

*உண்மை - தன் பரமார்த்த வுண்மை.

102. மித்தையாத் தோன்று வெறும்பாசம் சுத்தவருள்
வித்தையா லன்றி விடாது.

## 7. அறிவறிதல்

103. அருளா லறிவு விளங்கிடிலே மாயும்
மருளா ணவப்பேய் மயக்கு.

104. அருட்சிற் பரமா வகந்தெளியின் மாயும்
மருட்கற் பனைசேர் மனம்.

105. அறிவு தெளிந்தமைந்தா லான்ம சொரூப
நிறைவு துலங்கு மகத்து.

106. அறிவுருவா முண்மைமையமற் றவ்வறிவா லன்றி
அறியவொண்ணா தன்றியொன்றின் றுல்.

(வெண்பா)

107. அகத்தே யகந்தை யறிவாற் கலங்கி
மிகத்தேம்ப வீணிலே வேண்டா— அகத்தே
யறிவா லறிவை யறிந்தா லுயிர்ச்சுட்
டறிவான பாச மறும்.

(கொச்சகக் கலிப்பா)

108. ஒன்றும் பொருளி னுறுமாயா சத்தியாற்
றுன்று மனந்தவிதத் தோற்றமாங் கற்பனையை
நன்றான தன்சொருப ஞானத்தாற் றன்மயமா
வென்றாலே யன்றி விகற்பமயல் பேராதே.

109. தன்னை யறியத் தலைப்பட்டோர் தன்னையலாப்
பின்னை யறிவுமுற்றப் பேதைமையாத் தள்ளிடுக
பின்னியவெம் பாசப் பிழைசே ரறிவுகளிற்
பின்னியுழல் வாரேல்மெய்ப் பேரறிவு தோன்றாதே.

110. வெறிசே ரகந்தை வியாமோகந் தீர
அறிவேதா னாக வறிதலாற் பேத
வறிவாங் கலக்கமற் றலன்றி உண்மை
நிறைவான மோனநிலை நெஞ்சிற்பற் றாதே.

111. சுத்த வறிவுத் துலக்கமா மெய்யகத்திற்
சித்தக் கலக்கச் செருக்கறத்தாங் காணிலன்றி
நித்தியமா வுள்ள நிரதிசயா னந்தவியல்
புத்திக் கெனைத்தும் புலப்படா தார்க்குமே.

112. அறிவை யறிவா லறிதலால் அந்த
வறிவே யகலா வறிந்தமையுங் காறும்
மறவியா(ம்) மோக மனப்பாழ் கடந்த
நிறைவான மோனநிலை நெஞ்சத் தாதே.

113. உறவுபிற வற்றி லொழிந்தே சொரூப
வறிவான வுண்மைஞா னைசானாற் றேர்க
அறிவு தெளிந்தாலே யன்றியகத் துண்மை
நிறைவாம்பே ரின்பநிலை நேர்படவொண் ணாதே.

114. அறிவா லறிவையே யாராதிக் கின்றோர்
அறிவா விளங்குசொரூ பானுபவஞ் சேர்வார்
அறிவா லயலை யவாவுவோர் உண்மை
யறிவாம் பரத்தை யலட்சியஞ்செய் தோரே.

**குறிப்பு :—அயலை அவாவித்தொழுவோர் அறிவாம் பரத்தை அலட்சியஞ் செய்தோ ராகலின் அவ்வனு பவஞ் சேரார் என்பது குறிப் பெச்சம்.**

## 8. அன்னியம் விடல்

(குறள்)

115. அயல்களை முற்ற வகற்றல் சொரூப
வியலலை வென் றெண்ணத் தகும்.

## 9. அனன்னிய பாவம்

(கொச்சகக் கலிப்பா)

116. மயற்சதி யாம்பிர மாத மறுப்போர்
முயற்சிக் கலக்க முளைப்பற நாளும்
இயற்சிற் பரத்தை யிரண்டற வெண்ணும்
பயிற்சித் திறத்தாற் பயன்பெறு வாரே.

## 10. ஆசையறல்

(குறள்)

117. நயக்கமற் றொன் றுமில்லை நானென்னு மூன
மயக்கமறக் காணும் மனத்து.

118. மெய்வாழ் வகத்து விளங்கவெனின் மோகவகப்
பொய்வாழ்வில் வேட்கை யகற்று.

## 11. ஆண்டவன் பற்று

119. வாழ்வாறு தெய்வவருள் வள்ளலாந் தண்பதத்தூ
*ழேழ்வகையா லொன்ற லுயிர்க்கு.

* ஊழ் - முறை, சிரமம்.

(வெண்பா)

120. இம்மையே யன்றுமற் றேழே ழெழுமைக்கும்
செம்மைசேர் சேம திரவியங்காண்—நன்மைசால்
பேரா யிரமுடைய பெம்மா னெனையாண்ட
பாரா சரரமணன் பற்று.

## 12. ஆண்டவன் சின்முத்திரை

(கொச்சகக் கலிப்பா)

121. பிறிவான மோகப் பிரமாதம் பேர
அறிவான வாசா னறிவிக்குந் தன்மெய்க்
குறியே குறியாகக் கூடிலன்றி ஞேய
நிறைவான வுண்மைநிலை நெஞ்சத் துறுதே.

## 13. ஆன்ம சமர்ப்பணம் செய்தல்

122. உடையா னுளத்தோ டொருப்பட் டொழுகும்
நடையே யடியார் நடக்கக் கடவர்;
இடையிடை நானென் றெழுந்து குறுக்கே
தடையா நிகழார் சரண கதரே.

123. அன்னிய சிந்தை யகன்றறவே முற்றமுற்றத்
தன்னையே யாவர் சரணமாப் பற்றினர்
அன்னவர்தம் யோகக்ஷே மங்க ளனைத்துநிதம்
தன்னவையே யாகத் தலைப்பொறுப்பாத் தாங்கு
வனே.

124. அரண வடைந்தார்க் கபயமா வுள்ளத்
திரண்டற் றொளிர்சொருப வீசனிலுய் வேறாய்
முரண்பட நா னென்றெழுந்த மோக முனைப்பைச்
சரண கதியாற் சமிப்பித்தல் சால்பே.

125. அரனு வதுநமக்கிங் காண்டா னடியே
சரனு கதியே சதாசார மென்று
தரணமா வவ்வடியைச் சார்தலுற்றோர் சச்சிற்
புரணமாப் பொங்குசிவ பூரணஞ்சேர் வாரே.

126. தற்பரமா வோங்கு சதாசிவத்துக் காதரஞ்சே
ரற்புணர்வாற் றன்னையே தாமளித்த புண்ணியருக்
கற்புதமா மோன வருட்பாவாழ் வானநிலை
எப்பொழுது முள்ள வியல்பா விளங்குமே.

127. உன்னதென்ப மட்டுமன்றி யுள்ளத்தில் யானெனு
வுன்னையுமே யுனமெய் யுடையாற் குரிமையா [மவ்
மன்னவே யாக்கில் வளங்களர்கை வல்லியவாழ்
வுன்னியல்பா வோங்க வுதாரசிவம் பொங்குமே.

128. கெட்டொழியி லன்றிக் கிருத்திரிமப் பேயகந்தை
சுட்டறிவாம் மோகச் சுழற்சிசேர் பந்தமுறர்
வெட்டியகப் பேயை விசாரவா ளாலிதயத்
துட்டுரிய தேவதைக்கோ ரூனக வாக்கிடவே.

129. ஊன மனத்தை உடையான்பா லொன்றுவித்தால்
ஞானவடி வான நலங்கிளரும்; யானெனதென்
றீன வகட்பே யிகந்தொழிய வாருயிர்க்கு
மோனவடி வாகவொளிர் முத்தி தலைப்படுமே.

## 14 ஆன்ம ஞானம்

(வெண்பா)

130. தானேதா னைத் தழைக்கிலன்றித் தன்சொருப
வானேற வேறு வழியில்லை—தானுடலில்
ஒன்றியே வாழ்த லொழிந்து சிவசொருப
*மன்றிலே வாழ்கை மதி.

*மன்று - சிற்சபை, சிற்றம்பலம், தகராகாசம், இதய வெளி,

131. சற்கதிதாங் காணத் தலைப்பட்ட சாதகர்க்குத்
தக்கதுநா னற்றொழியத் தன்னிலையிற்—சிக்கெனவே
யூன்றிப் பிறவற் றுதாசீன மாகவுணர்
வான்றவருள் வாழ்வே யறி.

## 15. ஆன்மத்தியானம்

(குறள்)

132. ஜீவன் சிவத்தையே யெண்ணவெண்ணத் தன்பாவே
தேர்வன் சிவசொருபச் சீர்.

133. நலஞ்சேர் பரமார்த்த நாட்டமே பாசச்
சலந்தீர் வுறுசா தனம்.

(கொச்சகக் கலிப்பா)

134. ஏனைத் தலங்க ளெவற்றினுந்தாய் தாமிதயத்
தானத் தியற்றுன்ம சாதனையால் யானெனும்பா
ழூனப் பதைப்பற் றொழியிலன்றி யொட்பநுட்ப
மோனப் பரசொருப முத்திநலஞ் சேர்வரிதே.

135. உள்ளத்தி லன்றிமற் றோர்த்துணர வொண்ணாது
துள்ளு மகந்தைத் துடிப்பறுதன் னுண்மையயல்;
கள்ள வகந்தைக் கருத்தான கட்டுணர்வால்
விள்ளுமோ சற்றும் மிகமிக்க நுட்பமே.

136. கள்ளமால் சேர்ந்தமனக் கற்பனை பாவனைவிட்
டுள்ளமா வுள்ளதோ ரொட்பநுட்ப வுண்மையைநன்
குள்ளலே யோக வுபாசனையா லுற்றிடுக
தெள்ளியமெய்ஞ் ஞானத் திருவருள்கா முற்றோரே.

137. சிவசிவா வென்று தியானித் திருப்போர்
சிவசமா தித்திறங்கூர் திட்பத்தால் யானற்
றவசமா நிற்குமோ னனுபவத் தாழ்ந்து
பவிசின்மே லான பரஞ்சேர்கிற் பாரே.

138. விவாதங் களிலே விடாது மனத்தை
யவாமறக் காக்கு மரன்பா லழுத்திச்
சிவாயநம வென்றே செருக்கழிந்தோ ருள்ளத்
துவாயதிபோற் சேரு முபசாந்த வாழ்வே.

## 16. ஈசன் பரம் தாங்குகிறார்

(வெண்பா)

139. கம்பீர மாகக் கலந்தெல்லாந் தாஞகித்
தன்பார மாவனைத்துந் தாங்குவது—செப்பாக
மானசிவ சத்தி யருட்பரிசென் றோர்ந்தவர்க்கே
தானசைவு நீங்குந் தரம்.

## 17. உபாசனை

140. ஓர்த்துணருங் காறுந்தன் னுண்மையுரு மெய் [கரப்பப்
போர்த்தவுல காதிமெய்யே போலுங்காண் —கூர்த்த
வுபாசனையா லுள்ளாழ்ந் துடையா னருள்பெற்
றபாயமா மோக மறும்.

(கொச்சகக் கலிப்பா)

141. உய்யவே வேண்டுவோர் ஊக்கமா வுள்ளத்திற்
செய்யவே தக்க சிவயோக சாதனையைத்
தொய்ய விடாதுதினந் தோறும் மகிழ்ச்சிபொங்க
ஐய னருளை முன்னிட் டாற்றக் கடவரே.

142. ஆகமகம் புத்திசே ராசாபா சந்தொலைய
ஏகசற் பத்தி யியல்பாகப் பெற்றசிவ
யோகிகளல் லாதமற் றெல்லோர்க்குந் தப்பாது
மோகங் கெடக்கரண (ம்) *மூன்றாலுங் கைதொழலே.

*அமரர் தொழப்படுவானை என்னும் திருவாய்மொழி 3. 5, 9 ஈண்டு ஆராய்ந் தறியத்தக்கது.

143. மருள்வடி வாக மயங்குறு ஜீவர்
தெருள்வடி வான சிவத்தை யுபாசித்
தருள்வடி வாக வகந்தெளி வுற்றால்
இருள்கெட் டொழிய விசும்பா மாமே.

144. கள்ளமகே றே வேகக் கலங்காமறக் காதலா
லுள்ளியுள்ளிச் செய்யு முபாசனையாற் பக்குவமாய்
உள்ளுணர்வா மோனவொளி யுற்ற வுளத்திலன்றித்
தெள்ளியசற் போத சிவானுபவஞ் சேராதே.

145. நன்றிசே ருண்மையே நாமடையத் தக்கவருள்
வென்றிசேர் வாழ்வு; விழைவுசேர் காதலா
லொன்றியிருந் துள்ளத் துபாசனைசெய் யுள்ளு
லன்றியா ராலு மடைய வொண்ணாததுவே. [ணர்வா

146. பொய்வர்த்திக் கும்புலத்தோற் றத்தினின்று தம்
[மைத்தா
மும்வித்துக் கொள்ளுமுணர் வுற்றோர் சிவசொருப
தெய்வத் திருவருளைச் சிந்திக்கிற் சிற்பரமா
மெய்வித் தகவுணர்வு வீடா விளங்குமே.

147. உளைவுறு பாச வுலகியல் வாழ்விற்
றளர்வுறு சிந்தைச் சலஜீவர் தெய்வ
வொளிபெற வுட்கூ றுபாசனையாற் சித்தந்
தெளியிலன்றிச் சிந்தைதீர் சாந்திசே ராரே.

148. செப்பமுறத் தூய்நாத் தெளிந்தசித் தந்தேறக்
கற்புறுமெய் யன்புக் கசிவான காதலாற்
சிற்பரமாத் துன்று சிவத்தை யுபாசிப்போர்
தற்பரமெய்ஞ் ஞானந் தலைப்பட் டொளிர்வரே.

149. மூர்க்க வகந்தை முனைப்பறச்செற் றுண்டவனை
ஊக்கமா வுள்ளத் துபாசிப்போர் மற்றெவர்க்கும்
வாய்க்க வொண்ணாத வளஞ்சே ரருள்வாழ்வு
தேக்கலாற் சிந்தையறச் செம்மாந் திருப்பரே.

18. உண்முகம்

(வெண்பா)

150. நூலறிவு சென்று நுழையாத மோனவருள்
வாலறிவே யுண்மை வடிவாகும்—மாலறிவா
மைம்புலத்து வாயி லடைத்துள்ளே நோக்கலுற்றுற்
செம்பொருளே தானாஞ் சிவம்.

19. உண்மையுணர்வு

(குறள்)

151. ஒன்றான வுண்மை யுறைக்கிலன்றி யுள்ளுணர்விற்
றுன்றாது சாந்தி சுகம்.

152. ஒளிசேர் பரமார்த்த வுண்மையுணர்ந் தாலே
இளிசேர்வெம் பாச மிறும்.

153. ஒன்று வியல்சொருப வுண்மை யுணர்விலன்றித்
துன்றறிது சாந்தி சுகம்.

154. அடிப்படையா வுள்ள வதீதவுண்மை காணிற்
படைப்பினது மாயம் படும்.

(கொச்சகக் கலிப்பா)

155. உள்ளதோ ருண்மையை உள்ளத் துணர்வொடுங்கி
உள்ளவா றோர்த்துணர்ந்தா லன்றி யனுபவமாக்
கள்ளமனோ வேகக் கடுஞ்சுழலாங் கற்பனையிற்
றுள்ளுமகப் பேயாற் சுருண்டொழிய வேண்டுவதே

156. துலங்குமகப் பேய்முனைப்பின் சூதற் றொழிய
உளங்கலந்த தன்மெய் யுசாவாற் றெளிவா
விளங்கிலன்றி யுண்மை விசுத்த சொரூப
வளங்குலவு மாட்சிசேர் வாழ்வு மடாதே.

157. உளவுசொன்ன வாண்டா ஞெளிநெறியால் உண்மைத்
தெளிவு பிறக்கிலன்றிச் சிற்பதத்தில், மாயக்
களிசேர்ந்த மோகக் கனவுலகிற் பாழா
விளிவதினின் றுய்திபெற வேறுவழி யின்றே.

158. பழிப்புறுவெம் பாசபந்தப் பாழ்முளையென் [றுன்றோர்
இழிப்பவெழு பொய்ந்நா ளிகப்பத்தற் றேர்வால்
விழிப்பளவுந் தன்சொருப மெய்ப்பதத்தில் யார்க்கு
மழிப்பரிது யோக வனர்த்தப் பிறப்பே.

159. பல்யாக வேள்வி பயனொன் றுத்தசிவக்
கல்யாண போனவருட் கற்பகமாஞ் சிற்பதத்தைத்
தொல்யாணர்* ஞான சொரூபானு பூதியாக்
கல்லாத காலுங் கலக்கமறப் பேராதே.

*யாணர் - அழகு.

160. ஒன்ருகத் தம்மை யுதாரப் பரசிவத்தோ
டென்றே யிதயத்திற் றன்னிழப்பால் யார்காண்பார்
அன்றே யவர்க்கே யாதுமார் ருர்க்குமில்லை
தொன்ருக வுள்ள சுவாராச் சியத்திருவே.

161. பரமான சுத்தவருட் பத்தியால் உள்ளத்
துரமான வுண்மை யுணர்வுதிக்கு மன்றித்
திரமா விளங்கு சிவானுபவ மோனப்
பரமார்த்த வாழ்வெவரும் பற்றவொண் ணுதே.

162. வன்மைசேர் வஞ்ச மயக்கவகங் காரமறத்
தன்மெய் யுணர்வு சகிர்படவுற் ருலன்றிப்
பன்மைசேர் மோகவிகற் பக்கலக்கம் பாருது;
கன்மவே கக்கடுப்போர் காலுங் கழலாதே.

163. தவத்திலே மிக்க சமர்த்தரா மேனும்,
அவத்தைசேர் மோக வகந்தையறப் பொங்கு
சிவத்திலே யுண்மை தெளியிலன்றிச் சேராய்
சுவத்தவியல் பான சொரூப நிலையே.

164. திருவிலா வஞ்சச் செருக்கா லவிச்சைக்
கருவிலே யாழ்ந்து கமங்கலுற் ருநக்
கொருமைசே ருண்மை யுணரிலன்றி யுள்ளத்
தருமைசேர் சாந்த வருட்பெருவாழ் வின்றே.

## 20. உபேக்ஷை — உதாசீனம்

165. ஒன்றிலுந் துன்ப முழவாமைக் கேதுவா
என்றென்றும் நல்லோர்க் கியல்பா விருக்குநலன்
அன்றென் றெதையுந்தா *மன்ரு தெவற்றையுமே
நன்றுநன் றென்று நடக்குமனப் பான்மையே.

*அன்றுதல் - பகைத்தல், வெறுத்தல்.

## 21. உள்ளத்திலொடுங்கல்

(வெண்பா)

166. யோகவுணர் வூற வொடுங்கின் னுள்ளத்து
டேகசிவ போக வியல்வெளியாய்—ஆகமகம்
புத்தியற மோனவருட் பூரணசற் போதசிவ
சித்தியுண் டாகுஞ் சிறந்து.

## 22. ஊறுதல்

(வெண்பா)

167. சாட்சியா வுள்ளவருட் சார்புபற்றி லன்றியுயிர்
* மாட்சிபெற வேறு வழியில்லை ஆட்சிசெய்
யாண்டவன்சற் போத வருட்கசுந்தை யூறுகக்
காண்டலே காண்சற் கதி.

*மாட்சி - சிறப்பு.

168. தெய்வத் திறத்தாற் சிறக்க வொளிர்வதன்றி
யுய்வதற்கு மற்றோ ருபாயமில்லை—செய்வதற்குத்
தாமாரே தெய்வவருட் சத்தியின்றித் தாமூறுஞ்
சாமாறே யாற்றுஞ் சதிர்.

(கொச்சகக் கலிப்பா)

169. சேஞுர் சிவசுதிசேர் சாதனைசா திப்பார்க்கு
மாறு வகந்தையைத்தம் மாட்சிசே ராண்டவன்
கூறு வொழித்தலே யுத்தமசற் பத்தியென்பர்; [ருட்
காறாத சுத்தவருட் கைவல்யங் காட்டுமதே.

170. கள்ளக் கரவாங் கலக்கமற வேண்டுமேல்
உள்ளத்தை யாண்டவனுக் கூறுக வுய்த்திடீர்
தெள்ளத் தெளிந்த சிவானுபவ வாழ்வுநுமக்
குள்ளத்தே சுத்த வுணர்வெளியாப் பொங்குமே.

171. மோன வியற்பரமா வுள்ள முழுமுதல்காண்
ஞான சொரூபகுரு நாதனெனத் தேர்தலால்
ஊன வகந்தை யுணர்வையவன் சிற்பதத்துக்
கானவூ றாக்கில் அபரிமித மாண்புறுமே.

## 23. கண்ணோக்கம்

(குறள்)

172. நுட்பமா வுள்ளாழ்ந்து நோக்குவோர் தேக்குவார்
ஒட்பமா நுண்மை யுணர்வு.

## 24 கழலே கதி

(வெண்பா)

173. அழல்சே ரகந்தை முனைப் பற்றொழியக் காணுங்
கழலே கதியாகப் பற்றில்—உழல்சேர் வெம்
பாச மயக்கப் பரிதாபப் பாழகந்தை
மாசற் றொழியும் மனத்து.

## 25. கலக்கமறல்

(குறள்)

174. வீண்கலக்கம் பொன்ற விழுப்பதமாப் பொங்குசிவ
மாண்கதிக்கே யாகும் மனம்.

175. சித்தக் கலக்கமறத் தேறத் தெளிவிலன்றி
அத்த னருள்விளங்கா தங்கு.

176. அறிவிற் கலக்க மகற்றல் சொரூபஞ்
செறிவதற் கான திறம்.

## 26. காண்பானைக் காண்க

177. காட்சியைக் கண்ணி லொடுக்கின்றன் மயமா
மாட்சியால் விண்ணேயாங் கண்.

178. பொய்த்தோற்ற மான புலப்பாழ் புலங்காண்பான்
மெய்த்தேற்ற முற்றால் விடும்.

## 27. குரு சொல்லே மகத்து

179. ஆதிரையின் பின்னொ ளவதரித்த வாண்டவன்சற்
போதனையே யுண்மைப் *புலம்.

* புலம் - வேதம்

180. உண்மைப் புலமா மொளிர்சொருபக் காட்சியின்றி
உண்மையல் போகா துயிர்க்கு.

## 28. குரு பக்தி

181. நயக்க நயக்கமெய்ஞ் ஞானப் பிரானை
மயக்கமறும் பாச மனம்.

182. பிரானருளா லன்றிப் பெறலரிது ஞானப்
பராபரமா முண்மைப் பதம்.

(வெண்பா)

183. ஈச சொரூபமா மெய்ஞ்ஞான தேசிகன்கூர்
பாச வியோசவருட் பார்வையின்றி—ஈசன்
முதுபுணர்ப்பா முப்புடியின் மூழ்கலுற்ற ஜீவர்க்
கதுபுணர்ப்பென் றுய்த லரிது.

(கொச்சகக் கலிப்பா)

184. முட்டுப்பாட் டாலே முடங்கி வருந்திமிகக்
கட்டப்பட் டாரேனுஞ் சிந்தை கலங்காது
பட்டப் பிரானடியே பற்றுக்கோ டாகமனஞ்
சிட்டப்பட் டாரேற் சிவப்பட் டொளிர்வாரே.

185. வடிவாக வுள்ளவருள் வாலறிவா லன்றிக்
கடிய வொணுது கலக்க வவிச்சை;
உடையானை யுள்ளியுள்ளி யோலமிட்டா லுள்ளத்
தடியரகப் பாழ்செற் றருள்கிளருந் தானே.

186. மருத்துவனு வுள்ளவருள் வாலறிவன் மோன
குருத்துவத்திற் கூடிக் குலவுமினே! முற்றத்
திரத்துவமார் சுத்த சிவத்துவஞ்சேர் வேட்கை
யுரத்தலுற்றால் வீடு முடலூகைக் காழ்ப்பே.

187. ஓடுவா ரோட வுலகியலை நோக்கிமற்
றீடுபாட் டோடே யிதயம் புளகமாய்க்
கூடுவா ராகி லருட் கோமான்பாற் பேரின்ப
வீடுபேற் றுட்சி விளைந்திடுவ துள்ளத்தே.

188. வீணிற் பிறந்திறந்து வெந்துழலுஞ் சீவரகம்
மாணக் கலந்த மகிழ்ச்சிசேர் மெய்யன்பாற்
பேணக் கிடைக்கவருட் பெம்மானைத் தன்னடியிற்
காணக் கிடைப்பரருட் கைவல்யக் காணியே.

**குறிப்பு :—பெம்மானைப் பேணக் கிடைக்கில் எனக் கூட்டுக; வேதல் - சம்சார தாபத்தாற் றவித்தல்.**

189. சுத்தமா மோனந் துலங்கு சமாதியாற்
சித்த விருத்தி சிவமயமாத் தீர்ந்தொளிர்வால்
ஒத்த சமத்துவநோக் குற்ற வுணர்விலன்றி
மித்தையறி வான விகற்பமயல் போராதே.

190. தீர்த்தமா முற்றத் தெளிந்தவருட் சிற்பதநற்
கூத்தென் னுயிரிற் குயிற்றுபெருங் கோமான்றாட்
காத்தராய் நாளுமெய் யன்பா லகமுருகி
யேத்துவார்க் கென்றும்பே ரின்பமன்றித் துன்ப
[மின்றே.

191. முனிநா யகமான மோனப் பிரானுந்
தனிநா யகனருட் சார்புற்ற வாற்றல்
இனிநா னினியா வியற்பரவாழ் வான
அனுபூதி யுள்ளத் தவிர்தலுற் றேனே.

## 29. குருவருள் மாட்சி

192. தம்மா லியன்றவரை சாதனைதாஞ் செய்தாரேற்
றம்மா லியலா ததைத்தம்மான் சாதிப்பான்;
தம்மா லியன்றதுமே தாஞ்செய்யத் தப்பினரேற்
றம்மா னருளுக்கோர் பற்றுந் தவறின்றே.

193. உலகக் கொளாமோ ருடையான் புலத்தாற்
கலகப் படாத கருத்தா டியல்வான்
குலவுமெய் யன்பாற் குருவருள் பெற்றால்
உலகமயற் பாழற் றொளிரும் பரமே.

194. சுத்த வறிவே சொரூப வருள்வாழ்வா
வித்தகமோ னந்தலங்கல் வீடுபே றென்பரால்;
புத்தகஞா னத்தாற் புணர்வதன்றவ் வுண்மைநிலை
அத்தனருட் சத்தி யகங்கிளர்ந்தா லன்றியே.

195. கேவலமாத் துன்றுசிவக் கேமநிலை நல்லவருட்
காவலனைத் துன்றுஞா னாரியனைக் காயஜட
ஜீவனமா மோகச் செருக்கற் றொழியிலன்றிச்
சார்வரிது தற்போத சாதனையா சற்றுமே.

196. நிர்க்குணமா மோன நிலைசேரப் பெற்றதால்
எக்குணமும் பற்றா வியற்கையே யுண்மைநிலை
*அர்க்கஞா னான்ம வருட்குருவா லன்றிவெறுந்
தர்க்கவிதர்க் கங்களாற் சாதிக்க வொண்ணாதே.

*அர்க்கஞானான்ம வருட்குரு - ஆன்மசொரூப ஞான சூரியனான அருட்குரு.

197. புத்திக்குட் போதமாப் பொங்குந் திருவருளாற்
சித்தக் கலக்கமறத் தேறத் தெளிந்திடலோ
சுத்தப் பரசிவமே சொந்த சொரூபமா
முத்தித் துலக்கமுறும் முப்பாழும் பாழ்படவே.

## 30. கைவல்யம்

(குறள்)

198. கைவல் லியசொருபக் காட்சியா லன்றிமற்
றுய்வில்லை மோக வுயிர்க்கு.

199. கரவகன்ற சுத்தவருட் கைவல்யங் காணில்
விரவலுற்ற பாசம் விடும்.

## 31. சரணாகதி

(வெண்பா)

200 தன்னை யறிந்தோ வலறித் தனையிறைக்குத்
துன்னியவொ ஞைக்கியகந் தோய்தலோ — என்னும்
இரண்டிலே யொன்றை யிறுகக்கைக் கொள்ளின்
மருண்டயல் போமுய மலத்து.

(கொச்சகக் கலிப்பா)

201. காணாந சுத்தவருட் கைவல்யப் பேரின்பத்
தூணாக வுள்ளான் சொரூப சுயஞ்சோதி;
ஊணாக வுன்னைநீ யுய்க்கிலன்றி யவ்விறைபால்
வேணாசை மிக்க விருப்பங்கை கூடாதே.

## 32. சற்சங்கம்

(வெண்பா)

202. அடக்கமிக்க வான்றோ ரடிக்கீழ் வணக்க
வொடுக்கமுறப் பண்பட் டொழுகின்—மடுக்கத்
தெளிந்தசித் தத்தாற் சிறந்த*தெய் வீக
வளந்ததும்பு வாழ்க்கையுண் டாம்.

*தெய்வீக வளம் - தெய்வ சம்பத்து.

(கொச்சகக் கலிப்பா)

203. திருப்பாத சிந்தையே தீவினையைத் தீக்கு(ம்)
நெருப்பாக நெஞ்சத்து நீடுசிவ பத்தர்
விருப்பா லளித்த விபூதியாற் பாவ
நரிப்பா னவைகெட்டு நன்மையுண் டாமே.

204. சவட்டுமன மாயைச் சதிரழியச் செற்றோர்
சுவட்டையே பற்றித் தொழுதொழுகப் பெற்றால்
தெவிட்டாப்பே ரின்பரசச் சித்தோப சாந்தி
உவட்டா வமுதா வுயிர்க்குவிருந் தாமே.

205. அறிவாக வுள்ளத் தடங்கினார் தம்மோ
டுறவா வொழுகினால் உள்ளமைதிச் சார்பாற்
பிறவா விறவாப் பெருமைசே ருண்மை
நிறைவான நேயமொளிர் நிஷ்டையுண் டாமே.

206. ஊடுருவப் பெற்ற வுணர்வால் இதயத்து
நீடுபரந் தானா நிலைக்கப்பெற் றோரடியிற்
கேடுபடா வுண்மைக் கிளர்ச்சி கிடைக்கிலன்றி
மூடுயனத் தோருக் குறுதிசேர் சாந்தியின்றே.

207. தீர்ந்தொழியப் பெற்ற செருக்காற் சிவோகவுணர்
வார்ந்தொளிரப் பெற்றேர் அரியரினும் மிக்கரியர்
சேர்ந்த*வருட் புண்ணியத்தாற் சேரிலவர்
[கூட்டுறவு
சார்ந்தொழுகப் பெற்றேர்க்குத் தத்துவஞா
[னந்தருமே.

குறிப்பு :—அருட்புண்ணியம் - சிவபுண்ணியம்.

208. பந்தித்த மோகவகப் பாசமறப் பாற்றலாற்
சிந்திக்க வேண்டுசிவச் சிற்சொருபச் செம்பதந்தாம்
வந்தித்து வாழ்த்தி வழிபடுமெய் யன்பினர்சம்
பந்தமே பந்த மறுக்கு முபாயமே.

209. எம்மா னளித்தருபே ரின்பவருட் சீர்வரிசை
தம்மா வகங்கிளர்மெய்த் தக்கோர்தஞ் சார்புபோற்
பொய்ம்மா லகன்றொழியப் பொங்குசிவ போதசுகச்
செம்மாண் பளிப்பதொரு தெய்விகச்சார் பில்லையே.

210. குலஞ்சே ரடியர்தங் கூட்டுறவாற் பாசச்
சலஞ்சே ரகந்தைச் சதிர்குலையத் துன்று
நலஞ்சே ரனுபவமெய்ஞ் ஞானத்தா லன்றி
வலஞ்சேர் சொரூபவியல் வாழ்வுநண் ணுதே.

211. திகைத்தே யுழலுஞ் செகத்தோர் மனத்தை
யுகைத்தே பரத்துக் குரன்செய் யுபாயம்
மகத்தான சுத்த மவுனனு பூதி
அகத்தே மலர்ந்தமெய் யான்றேர்தஞ் சார்பே.

212. உணர்வுதெளிந் தான்ற வொழுக்கமுடை யான்
[றேர்ப்
புணர்வுறுசங் கத்தாற் பொலிவுறுசித் தத்தோர்
அணவுறுமெய் யன்பா லருள்விளக்கஞ் சேர்சற்
குணவராய் ஞானக் குலாநலஞ்சேர் வாரே.

213. நிரந்தரமா மோன நிலைபெற்ற ஞான
துரந்தார்பா லன்புத் தொடர்புற் றெழுகில்
ஒரந்தரமின் றுக வுதார சொரூபப்
பரந்திகழ்ஞா னுனுடவம் பற்று மகத்தே.

214. கள்ளமனே வேகக் கலக்கமாம் பாசமற
வுள்ளந் தெளிந்த வுணர்வோ ரொடுபுணர்ந்தோர்
துள்ளுமகங் காரச் சுழற்சியற வுள்ளத்து
வெள்ளவருள் வாழ்வு விளையப் பெறுவரே.

215. தொக்க சொரூபத் தியான தூரந்தரரோ
டொக்க வொருப்பட் டொழுகுவோர்க் கவ்வினை [பால்,
சொக்குபுலப் பாழ்மயக்கச் சூதாட் டொழிந்துமனஞ்
சிக்கெனவுள் ளாழ்ந்து சிவத்தி லழுந்துமே.

216. அறிவுறுந் தன்னை யறியலுற்ற வாற்றாற்
பிறிதொன் றிலாத பிரம்ம சொரூப
நிறைவொன் றறிவா நிலைப்பட்ட நெஞ்சர்
உறவுபோ லுய்வார்க் குறுதிவே றின்றே.

குறிப்பு :—அறியலுற்ற வாற்றால் அறிவா நிலைப்பட்ட என வியையும்.

217. பொல்லா மயக்கமற்ற புண்ணியராப் பொங்குகுண
நல்லோர்தஞ் சார்புமிக நண்ணினோர் யாதுந்தாங்
கல்லா ரெனினுங் கலக்கந்தீர் காட்சியால்
அல்லா ணவப்பா ழகன்று விளங்குவரே.

218. ஒட்பநுட்ப மாக வுளந்தெளிந்த மோனவருட்
பெட்புடைய வுண்மைப் பெரியர்பாற் கேட்கிலன்றி
விட்பரமாந் தன்மெய் விளங்காது சுட்டறிவாற்
கொட்புறுபொய்ம் மோகவகக் கோசப் பிழையாலே.

குறிப்பு :— விட்பரமாந் தன்மெய் - பரவிண்ணுருவான தன் பாரமார்த்திக வுண்மை.

219. பிறிதா வெதுவுந்தாம் பேணர் சொரூப
நிறைவான மோன நிலையிலே சுத்த
வறிவா விளங்கு மனுபூதி சான்றோர்
உறவே சிறந்த வுபாயந்தே ரீரே.

## 33. சித்த சுத்தி

220. அருளும்பே ராசை யகம்பொங்க வாண்டவனை
யுள்ளுந் தியான வுணர்வாற் கசிந்துருகி
யுள்ளந்தூய் தாகு லொழிய வகந்தைமனக்
கள்ளங் கழியவருட் கைவல்யங் காணுதே.

221. சித்தந் தெளியிலந்தச் சித்தமே சுத்தவருட்
புத்தகமா வுண்மைப் புலந்தெரிக்கு மாதலாற்
பத்தியா லுண்மைப் பரிபாக முண்டாகச்
சித்தந் தெளிவீர் சிவஞானஞ் சேர்வீரே.

222. கூர்மைசே ருண்மைக் குலாவான ஞானவருட்
சீர்மையாற் சித்தஞ் சிவமயமாத் தீரிலன்றிக்
கூர்மைசேர் பாசமனக் கோட்டமெவ் வாறகலும்
பார்மயநோக் கத்தாற் பதைக்கலுற் ருருக்கே.

குறிப்பு :—சுத்தவருள் எனவும் பாடம்.

223. கள்ளமகல் சுத்தவருட் கைவல்ய வாழ்வொருவ
ருள்ளத்தி லன்றி யுணர்ந்தனுப விக்கவொணு
உள்ளியுள்ளி யுண்மை யுணர்ந்துணர்ந்து நானறக் [கெட்
டொள்ளிதாம் மோன வுணர்வில் விளங்குவதே.

குறிப்பு :—உண்மை - தன்னுண்மை, சொரூபவுண்மை; விளங்குவதாகிய வாழ்வு என வியையும்; அது உள்ளத்திலன்றி உணர்ந்தனுபவிக்க வொணுமையால், எவ்வாற்ருலும் உள்ளத் தூய்மை யுண்டாக வேண்டும் என்பது எச்சப் பொருள்.

## 34. சிரவணம்

224. கலங்கு மனத்தாற் கடவுள ரேனும்
விலங்கினுங் கேடா விளிவர் அதான்று
விலங்குந் தெளிந்த விசுத்த மனத்தால்
இலங்கொளி சான்ருேங் கியவுள ராமே.

225. கடமையுணர் வேய்ந்தவகங் காரக் கலக்கம்
படரு மகண்ட பரப்பிரம்ம மாகச்
சுடருமெய்ஞ் ஞான சுயானுபவத் தாலே
கெடுமலால் வேறெத் திறத்துங் கெடாதே.

226. இருள்சூ ழுலகத் திடைப்பட்ட மாந்தர்க்
கருட்சீ ரமுதவொளி யார்ந்தோ ரனும்
பொருட்பொலிவு சேர்ந்தசெம் பொன்மொழியா
மருட்பாழ் மயக்கமற மாற்ற வொணுதே. [லன்றி

227. சித்தமலங் கெட்டறிவாச் சித்தந் தெளியிலன்றி
மத்தவகப் பேய்மனத்தில் வாய்க்குமோ மெய்யு
[ணர்வு
சித்தசுத்தி மிக்ககலைத் தேர்ச்சியினும் மாண்புடைத்
எத்தகைய சாதகர்க்கு மின்றி யமையாதே. [தாய்

## 35. சிவ சிந்தனை

(வெண்பா)

228. அரந்தையால் வாடி யழுங்குமுயிர் சிந்தை
பரிந்திரங்க லாற்பயனென் றில்லை –வருந்தலறச்
சிந்தனையை மாற்றித் திருத்திற் சிவபதத்தே
வெந்தொழியும் முந்தை வினை.

## 36. சிவ தியானம்

229. தெளிதருமெய் யன்பாற் சிவபதமே சிந்தித்
தொளிதரவுட் கூடி யுவத்தல்—எளிதிற்
பெயர்க்கலா காத பிறவித்தா பத்தால்
வெயர்க்கலற்று வாழும் விதம்.

## 37. சிவ பக்தி

(குறள்)

230. கனந்தருமெய்ஞ் ஞானக் கடவுளியல் சார்வ
தனந்தசிவ புண்ணியத் தால்.

231. சிவபுண் ணியத்தாற் றெளியவிளங் குண்மைத்
தவநண்ணி னோர்தன் னியர்.

232. சிற்பரா னந்த சிவானுபவத் தாலழியும்
கற்பனை பேதக் கருத்து

(கொச்சகக் கலிப்பா)

233. தெருமரல்சேர் மாயச் செருக்கின் முனைப்பாற்
கரும கதியிற் கலங்கி வருந்தும்
அருமந்த வாருயிருக் கற்புதமெய்ஞ் ஞானப்
பரம சிவத்திலன்றிப் பாதுகாப் பின்றே.

234. உவலைசேர் யாக்கை யுவப்பால் உலகூ
டவலவாழ் வற்பட் டழுங்கு மனத்தைச்
சிவசொரூ பத்திற் செறிக்கிலன்றிப் பொல்லாக்
கவலைசேர் சிந்தை கடக்க வொண்ணாதே.

235. தாவங் கெடவகற்றுந் தண்ணென் குளிர்மலைபோல்
நோவும் பிணியுமற நூக்குவதா யுள்ளத்து
மேவும் பரமசிவ வேட்கைமீக் கூருணர்வால்
வீயும் மனமயக்க வேட்கைப் புலன்களே.

236. சிவபத்தி நீர்மை தெளிந்திடின்மெய்ஞ் ஞானத்
தவமுத்தி யான சதாசிவவாழ் வுண்டாம்
பவவித்தா(ம்) மோகமனப் பாழகந்தை சுத்த
சிவபதத்துக் கூனைக செத்தொழிவ தாலே.

## 38. சிவப்பற்றினால் பொய்ப்பற்றறும்

(வெண்பா)

237. வாக்குக் கடந்து மனங்கடந்து சுட்டுபுல
நோக்குக் கடந்தபர நுண்ணுணர்வாய்ப்—போக்கு
[வாத்
தற்றவருட் பூரணமா யன்புசிவ மாவொளிர்மெய்ப்
பற்றறியிற் பொய்ப்பற் றறும்.

238. சதாசிவமே மிக்கபெருந் தாரகமா வோங்கு
சதாசிரய மாகவகஞ் சாரின்—சாதாசிவமாம்
போதவருட் பார்வையாற் பொய்ம்மயல்சேர் கற்
பேதவறி வோயப் பெறும். [பனையாம்

## 39. சுட்டறல்

(குறள்)

239. மனத்துக்கெட் டாதசிவம் மாணத் துலங்கும்
மனச்சுட் டறிவொழிந் தால்.

240. விடய மனைத்தும் வெறுங்கற் பனையாக்
கடியில் விளங்குங் கழல்.

## 40. சுபேச்சை

(கொச்சகக் கலிப்பா)

241. அருட்பரத்தைப் போன்று வரும்பொருளோன்
விருப்பதன்பேற் பற்றலே மிக்க சுபேச்சை [நில்லை
மரிப்பதான் மற்றெல்லாக் காமனையு மந்த
விருப்பால் அகத்தில் விளங்குமது தானே.

242. வியன்சிற் பரசொருப வேட்கையால் உள்ளத்
தயன்பத(ம்)முன் னை வனைத்துப் பதமும்
பயன்படவொண் ணைக்கற் பனைஜால மாக
நயன்படவொண் ணுது நழுவலுறுந் தானே.

## 41. சும்மாவிருத்தல்

243. நுனித்தவறி வான நொசிப்பா கைக்துத்
தனித்த முழுமுதலாத் தானெனிர்மெய்த் தன்மை
நினைத்து நினைத்து நினைக்கவொணு நோய்ந்த
மனத்தி லருள்வடிவா வாய்க்கப் பெறுமே.

குறிப்பு :—நொசிப்பு - சமாதி.

## 42. செருக்கறல்

(வெண்பா)

244. விருத்தி யெழாத விசுத்தமா மோனக்
கருத்திலே யுள்ளான் கடவுள்—கருத்தைத்
திருத்தி யகந்தைச் செருக்கறுத்தா லாங்கே
விருத்தியற்று மேவும் பரம்.

## 43. சொரூபம் வரித்தல்

(குறள்)

245. நோக்குவா னில்லைசுட்டி நோக்கப்படுவதில்லை
நோக்கமே யுண்மைநுனித் தோர்

246. துன்றுமெய்ஞ் ஞான சொரூபானு பூதியா
லன்றிமனத் துன்ப மறுது.

247. சிவமே சொரூபமாத் தேர்ந்தாலே தீரும்
பவமான மோகவகப் பாழ்.

248. சுத்தவறி வான சொரூபானு பூதியாற்
பொய்த் தொழியும் மாயைப் புணர்ப்பு.

249. சொருபமா வுள்ள துலக்கத்தால் உண்மைத்
துரியமோ னனுபவந் தோய்.

குறிப்பு :—துலக்கம் - உண்மை விளக்கம், இருப்
புணர்வு.

250. நலங்கிளர்வாழ் வானமெய்ஞ் ஞானனு பூதி
துலங்கலுற்றால் வீயுந் துயர்.

251. நண்ணின வன்றிமெய்ஞ் ஞானனு பூதியுளத்
தொண்டுமோ சாந்தி யுணர்வு.

252. களிவளர்வே கங்கழன் றேயும் சொரூப
வொளிவளரப் பெற்ற வுளத்து.

253. தன்னியல்யா தென்றுசாட் சாற்கரித்தா லன்றியரு
தென்னது நா னென்னும் மயல்.

254. ஆனந்த மோன வருட்சிற் பதத்திலன்றி
யூனந் தவிரா துயிர்க்கு.

255. தன்சொருபங் காணிலன்றிச் சாவாது நானெனும்
வஞ்ச மயக்க மனம். [பாழ்

256. சொந்த சொரூபந் துலங்கலன்றிக் கற்பனை
தொந்ததுக்கம் மாறா துயிர்க்கு.

(கொச்சகக் கலிப்பா)

257. சச்சித்தா வுள்ள சதாசிவமே தன்மெய்யா
நிச்சித்தா லன்றித்தன் னெஞ்சத் தனுபவமா
மிச்சைத்தா தாடு விபரீதப் பாசபந்தப்
பிச்சத் தனவெறிமற் றெத்தாலும் பேராதே.

குறிப்பு :—நெஞ்சத் தனுபவமா நிச்சித்தாலன்றி எனக் கூட்டுக ; நிச்சித்தல் - நிச்சயித்தல், தீர்மானித்தல் ; தாது - தாதத் தன்மை, அடிமைத்திறம்; பிச்சத்தனம் - பைத்தியம்

258. தொந்தமறத் துன்று துரீய சொரூபவருள்
விந்தையா லுண்மை விளக்கமுற்று ளுள்ளத்திற்
பந்தமென்று மற்ற பராற்பரமோ னனுபவச்
சந்தமார் வாழ்வு சகஜமாப் பொங்குமே.

259. புக்கொடுங்கி யுள்ளத்திற் பொற்பவருட் சீர்விளங்கத்
தொக்க சொரூபசாட் சாற்காரந் துன்றிலன்றி
வற்கடமா மோக வறட்பாலை வெஞ்சுரத்து
மைக்கனவா நீடு மயற்புலவாழ் வோயாதே.

260. கள்ள வகந்தைமனக் கற்பனையிற் காதலாற்
றுள்ளித் துடித்துச் சுழல்கின்ற வாருயிருக்
குள்ளத்தே யுள்ள வொளியான தன்னுருவைத்
தெள்ளத் தெளியிலன்றித் தீரா திடர்ப்படரே.

## 44. சொரூப ஞானம்

(வெண்பா)

261. தோற்றமறை வற்ற சொரூபநிலை கண்டறிந்து
போற்றலுப சாந்தி பொருந்தலே—ஆற்று
முபாயமகங் கார வுணர்ச்சியற்ற மோன
* விபாசமற் றல்ல பிற.

*விபாசம் - பந்த மோசனம்.

## 45. சொருபமே மருந்து

(வெண்பா)

262. வண்மைசே ரத்துவித மாண்பாலே கைவல்யத்
தண்மைசேர் சாந்த சதாசிவமாய்—உண்மை
யறிவுநிறை வான வருட்பதமே துன்ப
மறவியற மாற்றும் மருந்து.

## 46. தன்னாட்டம்

(குறள்)

263. இருப்புணர் வான விதயமாந் தன்னிற்
கருத்தைப் பொருத்தல் கதி.

264. கேவலசத் தாகக் கிளர்சொருப நாட்டமே
வாழ்வலரக் காணும் வழி.

265. சதாசார மேஞான சாதகர்க்கு மற்றை
மதாசாரத் தின்மாண் புடைத்து.

குறிப்பு :—சதாசார மெனினும் ஞானசாரமெனினும் ஒக்கும், சத்தே சித்தாதலால்.

266. சுத்தவருட் போக சொருபானு சந்தானம்
முத்திபெறப் பேணும் முறை.

(வெண்பா)

267. கருத்தை யயல்விடயக் கற்பனையிற் சேரா
திருத்திலுணர் வாந்தன் னிடத்தே—திருத்தமாச்
சித்தமலங் கெட்டுத் தெளிந்த சிவானுபவப்
புத்தமுத வாழ்வாம் புவி.

## 47 தன்னறிவு

(குறள்)

268. எழுந்த வகந்தை யிறுது தனைத் தேர்ந்
தழுந்திநு லன்றி யகத்து.

269. சுத்த சொரூபத் துலக்கத்தாற் பொய்த்தொழியும்
மைத்தவகங் கார மனம்.

270. தீதிலா வுண்மைத் திறந்தேர்ந் தறிந்தக்காற்
பேதியா நிற்கும் பிறப்பு.

குறிப்பு :—உண்மை - தன்னுண்மை.

(கொச்சகக் கலிப்பா)

271. உள்ளமே யாகத்தன் னுண்மை யொளிர்தலுற்றுந்
றுள்ளு மகப்பேய்ச் சுழற்சியறச் சூனியமாக
கள்ளமன மாயங் காந் தொழியும், பேரின்ப
வெள்ளவெளி யாக விளங்கு சொரூபத்தே.

### 48. தன்னறிவே பாழைக் கடக்கும்

(குறள்)

272. வாழி சொரூபவருள் வாலறிவே, மோகவகப்
பாழைக் கடக்கும் பரிசு.

### 49. தன்னுணர்வு

273. சுட்டற்ற சுத்த சொரூபவுணர் வாலன்றிக்
கட்டற் றெழியாது காண்.

### 50. தன்னையறிதல்

274. தானுன வுண்மை சதிர்க்கிலன்றித் தீராது
நானென்னு மோக நவை.

(கொச்சகக் கலிப்பா)

275. உளந்துலங்க வுள்ளுணர்வா வொட்பநுட்ப மாக
விளங்கலுற்று லன்றித்தன் வித்தகமெய் யார்க்கும்
களங்கவகங் காரமனக் கற்பனையிற் சிக்கித்
துளங்கலற்ற சுத்தசிவத் துப்புரவெய் தாதே.

276. பின்ன வறிவனைத்தும் பேதைமைசேர் கற்பனையாத்
தன்னறிவின் மாட்சி தலைப்படத்தாங் காணலன்றி,
அன்னவற்று வென்று மலைப்புண் டழுங்குறுதம்
கின்னமனக் கேதமறக் கெட்டொழிவ தெவ்வாறே.

277. தொன்மைசேர் சுத்த சொரூபவருட் சத்தியால்
வன்மைசேர் மாய மனச்செருக்கின் மையலறத்
தன்மையி னுண்மை சதிர்த்தோர் சமரசச் செம்
பொன்மயமெய்ஞ் ஞானு பூதி புணர்வரே.

## 51. தன்மெய்யுணர்வு

(குறள்)

278. நானற்ற தம்முண்மை நன்குணர்தல் சுத்தவருள்
வானப் பரஞ்சேர் வழி.

279. உண்ணுணுகித் தன்னை யுசாவிற் பாமோன
விண்ணுருவிற் காணுந்தன் மெய்.

280. அருள்வெளியாத் தன்மெய் யவிர்ந்தாற் கரக்கும்
மருள்வலையாத் தூன்றும் மனம்.

281. களிசே ரகப்பேய் காக்குங்காண் தன்மெய்
யொளிவிளங்க லூற்ற வுளத்து.

282. ஏக சொரூப வியல்விளங்கிற் பொன்றலுறும்
மோகமுனைப் பான முரண்.

குறிப்பு :—மோகமுனைப் பானமுரன் - (முரணான
மோகமுனைப்பு) - சிச்சடக் கிரந்தி வடிவான
மொக முனைப்பு

## 52. திருவடி சார்தல்

(வெண்பா)

283. பாதவருட் பார்வையொளி பற்றினு லன்றியுளத்
தேதமனப் பான்மை யிகவாதே—ஆதலால்
ஆண்டகுரு நாத னருட்பாத மேகதியாப்
பூண்டடைக சாந்திப் பொலிவு.

## 53. திருவடித் தியானம்

(குறள்)

284. அண்ண லருட்சே வடியை மகிழ்கூர
வெண்ணுவார்க் கில்லை யிடர்.

285. திருவடியிற் சிந்தைசேர் வுற்றோர் உலகில்
வெருவலுற்று மாழ்க லுறார்.

286. நினைந்துநினைந் தந்த நினைவுமுற்றக் கெட்டால்
அனந்தசிவம் பொங்கு மகத்து.

287. நயப்பான சுத்தமெய்ஞ் ஞானனு பூதிக்
*கயர்ப்பறவேண் டுந்தன் னகத்து.

*அயர்ப்பு - மறதி, பிரமாதம்.

288. துப்பறிவாந் துங்க சொரூபானு பூதியெழில்
வெப்புறுசந் தாபம் விடும்.

(வெண்பா)

289. கருமபந் தத்திற் கழன்றுவாழ் மோட்ச
மருமந் தெரியின் மனத்தே—பரமன்
அடிப்பற் றடைவே யகிலமாம் பாசம்
விடுப்புற் றொழியும் விதம்.

(கொச்சகக் கலிப்பா)

290. ஆண்டவனே யுள்ளத் தவிர்வுற்று லன்றிமற்
றாண்டவனை நம்மா லறிந்தடைய வொண்ணுமோ?
ஆண்டவா வாண்டவா வாண்டவா வென்றுசிந்தித்
தாண்டவன்பா தத்தி லதேநினைவா நிற்போமே.

291. எத்திறத்தா லேனு மிறைவனைச்சிந் தித்திருக்கிற்
குத்திரமா மோகக் குடிலவகப் பேயகலும்;
மெய்த்தவவாழ் வோங்கவருள் வித்தகத்தா லுள்ளத்
பொய்த்தகலுங் கற்பனை பேதப் புலன்களே. [திற்

292. தெய்வப் பிரானடியைத் தேரச்சிந் தித்தலன்றி
யுய்வதற்கு மற்றோ ருபாயமெங் கெங்குமில்லை
தெய்வப் பிரானிறைநீர் சிந்திக்குஞ் சிந்தையினின்
றுய்விப் பதங்கோ ருணர்வொளியாத் தோன்றுமே.

93. ஊத்தை யகந்தையற வுள்ளந் தெளியிலன்றிக்
கூர்த்தமெய்ஞ் ஞானக் குறிதுலங் காமையால்,
தூர்த்த வகந்தைமனச் சூதாங் குழப்பமறத்
தீர்த்த னருட் பதத்தைச் சிந்திக்க வேண்டுமே.

294. சித்தங் கலங்கிற் சீரழிந்து பாழ்க்கையுறும்;
சித்தந் தெளிந்தாற் சிவானுபவ மாட்சியுறும்;
சித்தந் தெளியத் திருவருளை யெண்ணியெண்ணிப்
புத்தமுத போகப் பொலிவுறுவர் புண்ணியரே.

295. குற்றங் களுக்கெல்லாங் கொள்கலமா வுள்குறுமவ்
வற்றமறு சுத்த வருட்பாத சிந்தனையால்
அற்றொழியக் காணிலன்றி யாற்றியதோர் பாவத்துக்
கெற்றென் றிரங்குவதால் யாதுபயன் காண்பரே.

குறிப்பு:—எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று - என்பது
வள்ளுவர் வாய்மொழி.

296. விளக்கலுற வேண்டில் விளக்கத்த சிவத்தை
யுளங்கனிந்து மோன வுரம்பெறநன் குள்ளாய்;
களங்கறைந்து சுத்தக் கடவுட் பரமாத்
தெளிந்தொளிருஞ் சித்தஞ் செருக்குழனைப் பற்றே.

குறிப்பு:—உள்ளாய் - உள்ளுக.

297. கள்ளந் தவிரக் கருதிக் கருத்தன்பா
லுள்ளந் தெளிந்த வுணர்வுடையோர் சுத்தவருள்
வெள்ளத் தியல்பா விளங்குசிவச் செம்பதத்திற்
பிள்ளலற்ற வாழ்வு பிறங்கப் பெறுவரே.

298. குய்யம் படுபொய்க் குடிலமைப் பாசமற
ஐய னருட்பேற்றுக் காராமெய்க் காதலொடு
செய்யும் பரிசு சிவாயநமச் சிந்தனையென்
றுய்யுங் கருத்துடைய ருள்ளத்திற் கொள்ளுமினே.

299. சித்தந் தெளியச் சிவாயநம வென்றுசிந்தித்
தத்தன் றிருவடிக்கே யார்வமிக் கூர்ந்துற்றோர்
நிர்த்தொந்த மான நிஜானுபவஞ் சேர்ந்தொளிர்வர்
சித்தஞ் சிவமாச் செழித்தொளிர்மோ னப்பதத்தே.

300. கட்டுக் கடங்காக் கடவுளைக்கட் டுக்குள்ளாக்
கட்டிப் பிடித்துக் கலந்து களிக்கலாம்,
பட்டி மனக்கற் பனையடங்க வுள்ளொடுங்கிச்
சிட்டப் பிரானடியைச் சிந்தித் திருக்கிலே.

301. பங்கமில் வாழ்வு படைக்க விரும்புவோர்
எங்கள் பிரானை யிதயத் திருத்திடிற்
றுங்கமெய்ஞ் ஞான சொரூபானு பூதியாற்
பொங்கிப் பொலிவர் சிவபூ ரணத்திலே.

## 54. தீரம்

302. மயல்பா யகந்தை மனப்பாழுக் கப்பால்
இயல்பா விதயத் திருந்தொளிர்சற் போக
வியல்வாழ்வு கைவல் லியவாழ் வெனக்கண்
டியல்பார தீரருக் கன்றி யொண்ணாதே.

குறிப்பு :— **வியல் வாழ்வு - பெருவாழ்வு;**
**பார தீரர் - பெருந்தீரர்.**

## 55 நானறல்

(வெண்பா)

303. வெறுத்தக்க வூன வினையுடலே நானென்
றிறத்தற் கெதுவா வெழுந்தோன்—மறித்து
முனைப்பா மகந்தையைத்தன் மூலத் தொடுக்கல்
வினைப்பற் றொழியும் விதம்.

குறிப்பு :— **எது - ஏது என்பதன் குறுக்கல்;**
**நானென்று எழுந்தோன் என இயையும்.**

## 56. நிட்டை

(குறள்)

304. ஆழ வருட்பதத்திற் சிந்தை யழுந்திலன்றி
யூழைக் கடக்க வொண்ணாது.

305. மெய்ஞ்ஞான நிஷ்டை விளைந்தாலே யாருயிருக்
கஞ்ஞான துக்க மறும்.

306. நன்றா வவிர்சொருப ஞானானு பூதியுளத்
தோன்றாதார் சாந்தி யுறார்

307. சாதனையா லுள்ளந் சுரித்தலே வாதனையான்
மாழ்காது வாழும் வழி.

308. சுத்த வறிவாத் துலங்கலாற்றால் யானெனும்பொய்ம்
மத்தமனப் பீழை யறும்.

309. ஏதமில்சற் போத வியலறிந்து நிற்கினல்லாற்
பேதமயற் பீழை பெரிது.

310. மனத்தை யுளத்தே மடுத்தால் விளங்கும்
இனைத்தெனவொண் ணாத்தன் னியல்.

311. ஊன்றிநின் றாலன்றி யுள்ளத் துணர்வுறவா
வான்றபர மாட்சி யரிது.

312. அரிதோ வெளிதோ வவரவர் தேர்க
துரிய சொரூபத் *துணை.
*துணை - அளவு.

313. பரத்திலே சித்தம் பதிந்தால் விளங்கும்
குருத்துவா மோனக் குலா.

314. திருந்தத் தெளிந்த சிவத்தியா னத்தாற்
பொருந்துமின்ப நிட்டைப் புலன்.

315. சித்தஞ்சித் தின்கட் செறிந்தொடுங்கக் காணிலன்றி
மத்த மனோமயமே வாழ்வு.

316. ஆழ வகத்தழுந்தற் றாலன்றிப் பாசவகப்
பாழறிவைத் தாண்ட லரிது.

317. நிட்டானு பூதிக்கே ஞேயமா மன்றிமற்
றெட்டாது தன்மெய் யியல்.

318. இறைவன் சொரூபம் இதயத்தே யன்றி
யறியவொணா நுட்பவொட்ப மாம்.

319. அறிவா விளங்கிலன்றி யாருயிர்க்குச் சற்றும்
பிறியாது மாயப் பிறப்பு

320. இயற்சிற் பரமா மிதயத் தமுந்தின்
மயற்கற் பனைமாய் வுறும்.

321. ஊடுருவி யுள்ளத் துணர்வா வுறையிலன்றிக்
கூடரிது மோனக் குலா.

322. ஊன்றிநின் றுலே யுளத்தா டுணர்வாக
மூன்றுமொன்று மோனமுற் றும்.

323. உள்ளத் துணர்வாக வூன்றலே சிற்பரத்தை
யுள்ளுவத னுண்மை யுளவு.

(வெண்பா)

324. இருப்பதா வுள்ள வியற்செம் பதத்து
விருப்பமீ டேற விரும்பில்—திருப்பி
மனத்தைத்தன் பாலே மடுத்துமற் றொன்று
நினைத்தலற நிற்கை நெறி.

325. இறைவனருட் காட்சியா லென்று மிதயத்
தறிவான சாந்தி யடையக்—குறியா
நினைப்புமறப் பற்ற நிலையூடு நிற்க
மனத்தைப் பயிற்றல் வழி.

326. உழப்பதாந் துன்ப வுணர்ச்சி விகற்ப
விழிப்புமா மோக விளைவே—விழிப்பு
டருட்கே வலத்திலமுந்தலே மோக
மருட்கே வலந்தீர் வழி.

327. ஒன்றியா வுள்ள வுணர்வொளியாந் தன்சொருப
வென்றிசேர் ஞானநிட்டை மேவிலன்றி—ஒன்றை
மிகப்படவாக் காட்டி வெருட்டுமயக் கத்தி
லகப்படா தூய்த லரிது.

328. வாழ்விலே தாழ்வு வரவுயிர்க்குக் காரணம்பா
ழூழ்வகையென் றோர்ந்த வுணர்வுடையோர்—வாழ்வு
வொட்டா நடுநிலையூ டூன்று முறுதியால் [தாழ்
ஒட்டா தொழியுமுளத் தாழ்.

(கொச்சகக் கலிப்பா)

329. துட்ட மனத்தைத் துரிய சொரூபமெய்ந்
நிட்டையா லன்றி நிராகரிக்க வொண்ணுமோ?
இட்ட மனிட்ட மிரண்டுமறத் தன்றுசம
நிட்டையிலே யூன்றிநீர் நித்தமுத்தி காணீரே.

330. சுட்டறிவை நம்பிச் சுழலாதீர்; சுட்டறிவு
மட்டிலா வஞ்ச மயக்கமனக் கற்பனைகாண்;
சுட்டறிவா லாயிற் றுலங்காது, சுட்டறத்தன்
னிட்டையிலே வெற்றறிவா நிற்கிலன்றித் தன்னியலே.

331. அணவு மகந்தைமதி யயம்புலத்தை விட்டுத்
துணிவா வருளைத் துணைகொண்டு சுத்த
வுணர்வான வுள்ளத் துறைக்கிலலலாற் சற்றும்
புணர்வரிது மோனனு பூதிசேர் வாழ்வே.

332. ஊடறுக்க வொண்ணு வொளிவெளியே தன்னுருவா
நீடலுற்ற வுண்மைநிலை நஷ்டானு பூதியென்பர்;
கூடலுற்ற லன்றிக் குருவருளா லந்தநிலை,
மூடலுற்ற பாழிருளின் மோசனமோர் காலுமின்றே.

333. படிப்படியா வாற்றும் பயிற்சியா லுள்ளத்
தடிப்படைவாழ் வானசுத் தான்மவுணர் வூற்றுத்
தடைப்படா தென்றுமொரு தன்னியல்பா நீளக்
கிடைப்பதா லன்றிக் கிடையாது வீடே.

334. ஒள்ளியவாழ் வாகவுயிர்க் குள்ளுணர்வா வுள்ளதைநீ
யுள்ளலற வுள்ளாழ்ந் துணர்ந்தொடுங்கி நிற்கி [லன்றித்
துள்ளி யெழுந்துழல்பொய்ச் சூதா மகந்தைமனக்
கள்ளமயல் வாழ்வின் கலக்கமறப் போகாதே.

335. நிதித்திரளா வுள்ளசிவ நேய வுணர்வு
சதிர்த்தனா னனுபவ சாரமா மோனம்;
உதித்த விடத்தி லொடுங்கி யிருக்கும்
மதித்தெளிவா லன்றி மடுப்பரிதவ் வாழ்வே.

336. கன்றுமகங் காரமனக் கற்பனை பேதமற
வொன்றிநீ ருள்ளத் துடையானை யுள்ளுமினோ;
ஒன்றினா லன்றி யுருதுகா னுள்ளுணர்வில்
வென்றிசே ருண்மை விளக்கமாந் தன்னியலே.

337. யாதேனுந் தொற்றுமற்றென் றில்லா வியற்பரமே
நீதேர்ந்து நின்னுருவா நெஞ்சத்தே யூன்றிநிற்கிற்
சூதே யிலாமெய்த் துரீய சொரூபவியற்
போதானு பூதி புணர்ந்திடுமுன் னுருயிர்க்கே.

338. கண்மயலா வேயுமனக் கற்பனையென் றென்றுமற்ற
வுண்மையைநன் கோர்த்திதயத் தூன்றி யுரைத்த
[லன்றி
வண்மைசேர் வாழ்வுக்கு மற்றோ ருபாயமில்லை;
நுண்மதியா லுண்மையைநீர் நோக்கியுளத் தூன்
[றீரே

339. மூலப் பரமான முத்தி சொரூபத்துக்
கேலக் கருத்தை யிதயத்திற் சேர்க்கிலன்றிச்
சாலச் சிறந்தசாட் சாற்கார மோனவுணர்
வேலப் படைத்த லெவர்க்கு மரிதரிதே.

340. சுட்டப் படாத சொரூபத்தைச் சுட்டுணர்வால்
எட்டிப் பிடித்ததா வெண்ணிமனப் பால்குடிப்பர்
துட்டவகப் பேய்முனைப்புஞ் சுட்டுணர்வாங் கற்பனை
[யும்
விட்டிதயத் தொன்றிலன்றி விள்ளாது மெய்யுணர்வே

341. ஒவ்வியுமொவ் வாது முறழ்விகற்ப கற்பனையூ
டெவ்வெதுவு மல்லா வியற்சிற் பரசொருபத்
தவ்வகமே நாமா வறிந்தடங்கி நிற்றலன்றித்
தவ்வலரு சுத்தசிவத் தற்பரத்தை யெண்ணொணுதே.

342. உள்ளதா முண்மையைத்தன் னுள்ளுணர்வா
[லுள்ளத்தே
உள்ளவா றோர்ந்துநிலை நிற்கிலன்றி யுய்தியில்லை
கள்ளமாஞ் சித்தக் கலக்கமறக் கூறுணர்வாற்
றெள்ளிதா மோனந் திளைத்திடல்காண் மெய்ப்
[பதமே.

343. உணர்விற் பிரிந்த வுடல்களே உண்மை
தணவுற் றுழல்சிச் சடமடவோர் தன்மை;
உணர்வே சொரூபமா முண்மையுணர்ந் துள்ளத்
தணவிற் பரசிவவாழ் வாரநுகர் வாரே.

344. நிறைவான மோன நிலையே சொரூப
வறிவின் பரமார்த்த மாக வகத்திற்
செறியவே சித்தஞ் சிவமா விளங்கும்
கறைசே ரகந்தைமனக் கட்டறிவு கெட்டே.

345. அறிவாக வுள்ள வனந்த சிவத்திற்
பிறிதான வெவ்வறிவும் பேதைமையாத் தீர
நிறைவா வொளிர்சொருப நிஷ்டானு பூதிச்
செறிவிலன்றிக் கைவல்யஞ் சேரவொண் ணாதே.

346. அன்று வனைத்து மகற்றியருட் கேவலமா
நின்று ரகத்துமெய்ஞ் ஞேயந் துலங்குமென்பர்
பொன்று விசுத்தவருட் பூரணவாழ் வாவதகத்
தொன்று வொளிர்சொருப வுண்மையாந் தற்பரமே.

347. உள்ள பொருளி லுணர்வைப் பதித்துவிடில்
கள்ளவகங் காரமனக் கற்பனைபொன் றக்கரையத்
தெள்ளத் தெளிந்தவருட் சித்தோப சாந்தசுக
வெள்ளமா மோன விசுத்தசிவம் பொங்குமே.

348. ஆன்றபர முத்தி யறிந்தடைய வேண்டுவோர்க்
கேன்றெழுந்த தன்பிறப்பெங் கென்றோர்ந் தொடுங்கி
தூன்றினு லன்றி உலகுருவ முப்புடியாத் [யுளத்
தோன்று மகந்தைமனச் சூதற் றொழியாதே.

349. ஒன்றினு லன்றி யுளத்திற் பரசொருப
வென்றிசே ருண்மை விளக்கமா மோனநிலை,
கன்றியபொய்ம் மாயமனக் கற்பனைசேர் புன்கலக்
துன்றியவெம் பாசச் சுழலற் றொழியாதே. [கந்

350. கலக்கமற்ற சுத்தவியற் கைவல்ய வுண்மைத்
துலக்கமே சாந்த சொரூபாநு பூதி
கலக்கமுற்ற பாசவகங் காரமறத் தானு
நிலைக்கிலன்றித் தன்னகத்து நேர்வரிதவ் வாழ்வே.

351. ஒற்கமுற வுள்ளத் தொடுங்கிமுனைப் பற்றொழிய
நிற்கலுற்று லன்றிமெய்ஞ் ஞேயப் பதத்துநிஷ்டை
கற்குறுமெய்ஞ் ஞானக் கலைஞானங் கொண்டு
[மட்டிற்
றெக்கபர மார்த்த சொரூபசித்தி கூடாதே.

352. செருக்கா மகந்தைமனச் சேட்டையற வுள்ளத்
தொருக்கமா மூழ்கி யுரன்சே ருணர்வாற்
றரிக்கிலன்றிக் கூர்த்த சமாதியிலே தன்மெய்
யுருக்கிளர்ஞா னானுபவ வொட்ப முறாதே.

353. முடங்கலுற மோக முனைப்பறவே யுள்ளத்
தொடுங்கலுற்ற மோன வுணர்வோரே யன்றித்
திடங்கெழுமெய்ஞ் ஞான சிவானுபவஞ் சேரார்
அடங்கியகத் தூன்றல் அருட்பெருவாழ் வாமே.

354. துள்ளு மகந்தைத் துடிப்பற்ற நிட்டையால்
உள்ளதொன் றேயென் றுணர்வில் விளங்கலுற்றும்
கள்ள மனோமயமாங் கற்பனையே யாவுலகைத்
தள்ளலன்றிப் பின்னுந் தடுமாறல் கோழைமையே.

355. தொன்றான வுண்மைத் துரியமா மோனத்து
நின்றாலே ஞேய நிலைவிளங்கக் காண்பதன்றி
ஒன்றிரண்டா வெண்ணி யுழும்புமனக் கற்பனை [யாத்
துன்றுமதிக் குச்சற்றுந் தோன்றவே தோன்றாதே.

356. தன்னையொரு சற்றுந் தணவாப் பரசொருபந்
தன்னை யுணர்ந்து தரிக்கிலன்றித் தானதுவா,
அன்னியம்போற் றோன்று மகந்தைமனச் சிச்சடப் [பொய்ப்
பின்னலாம் பாசப் பிணக்கறநே ரேதுவின்றே.

குறிப்பு :—நேரேது - நேர்சாதனம்; பரம்பரையா னன்றி நேரடியான வுபாயம்.

357. ஒடுங்கி யுளத்தி லுறங்கா துறையில்,
மடங்கெழுவிட் சேப மனத்தை மிதித்து
நடங்கிளர்மெய்ஞ் ஞானகுரு நாதன் பதத்தி
லடங்கி யழியு மகப்பேய் முனைப்பே.

குறிப்பு :—மடங்கெழுவிட்சேபம் - ஆவரணம் சேர்ந்த விட்சேபம்; மயக்கம் சேர்ந்த விகற்பம்.

358. அறிவா யியன்ற வமைதியே யுண்மை
நிறைவான முத்தி நிலையென்பர்; சற்றும்
பொறிவாயி லோடிப் புலம்பாது தன்பாற்
செறிவாக வூன்றிடுதல் செய்சா தனையே.

359. உள்ளலற்ற சுத்த வொளிவெளியா முள்ளத்திற்
றெள்ளவே சேர்ந்து சிறக்க வுறைக்கினல்லால்
விள்ளரிது சற்றுமே மெய்போல் விசைத்தெழும்பொய்க்
கள்ளவகங் காரமனக் கற்பனை பந்தமே. [பொய்க்

360. மயக்க வகந்தை மனத்தால் விளைந்த
வுயக்கமற வேண்டில் உடற்பா ழகந்தை
யியக்கமற வாராய்ந் திருப்புணர்வாந் தம்மெய்
யியற்கணே யூன்றி யிருக்கைநன் றாமே.

361. உணர்வுரு வான வுளத்தே மனமவ்
வுணர்வுரு வாக வொடுங்கி யுறைத்தால்,
அணவிய மோக வலமரல் பொன்றப்
புணர்வுறும் மோனப் புரணமெய் வாழ்வே.

362. மான்றவகங் கார மயக்கமுனைப் பாலெதிரத்
தோன்றுபுலப் பாசமனச் சுட்டறவிட் டுள்ளொடுங்கி
ஆன்றசிவ சிந்தையின்மெய் யன்புணர்வு பொங்க [வகத்
தூன்றிலுப சாந்தவுணர் வூற்றெடுக்கு முள்ளமே.

363. அறிவுருவே யானபர மான்மாவை அந்த
வறிவளவா வுள்ளத் தவிர்சுத்த மோனச்
செறிவி லழுந்தித் திளைத்தலன்றி வேறு
வறிவதெவ் வாறுசுத் தாத்துவித மெய்யே.

364. இதயமா வுள்ளபே ரின்ப விறைவன்
புதியனல்லன் யார்க்கும் புராண சொரூபன்;
மதியை மடக்கித்தன் மாட்டுப் பதிக்கில்
இதய சொரூபன்பே ரின்பமுற லாமே.

365. கன்மாதி யாதே கடைப்பிடித்துச் செய்யினுந்தாம்
தன்மாத் திரசொருப சாட்சாற்கா ரஞ்சேரார்
சொன்மா னதமெய்த் தொழில்விட் டுணர்வோடு
தன்மாத் திரமாத் தரிக்கிலன்றி யுள்ளத்தே.

366. ஒற்கமுற வுள்ளத் தொடுங்கிமனப் பீடையற
நிற்கினன்றி மெய்ஞ்ஞான நிட்டையிலே, கூரறிவாற்
கற்கலுறு ஞானக் கலைமட்டில் யாதுபயன்?
சிற்குறியா லார்க தியான சமாதிகளே.

367. எண்ணவொண் ணாத வியற்பரமா முண்மையை
றெண்ணி யறிந்தபி ரின்புறலாம், அப்பரத்தை மற்
யெண்ணுறு நா னென்னுமுனைப் பிற்றெழிய
[வெற்றறிவாய்
எண்ணமறச் சும்மா விதயத் துறைந்திடிலே.

368. அன்றுநா னன்றுநா னென்றென்றே ஆணவமாந்
துன்றுமகப் பேயைத் துரத்திமெய்ஞ் ஞானத்தால்
என்றுமொன் றுக வியல்சிற் பரசொருபத்
தொன்றினு லன்றி யுபசாந்த போகமின்றே.

## 57. நேதி நேதி

(கொச்சகக் கலிப்பா)

369. உய்த்துணர்புத் தித்திறத்தா லுள்ளுணர்வு தெள்ளி
தாய்த்
தத்துவப்பொய்க் குப்பைகளைத் தானன்றுத் தள்ளி
[லன்றிச்
சித்துவக்கை வல்யச் சிறப்பாத் திகழ்சொருப
வித்தகவாழ் வான விமுத்திநிலை சேர்வரிதே.

## 58. பக்தி

(குறள்)

370. சுத்தவெளி யான துரீய சொரூபவருட்
பத்தியாற் பற்றும் பரம்.

(வெண்பா)

371. கடவுளையே நாடுங் கருத்திலே யுண்மைக்
கடவுளருட் காட்சி கலக்கும்—கடவுளைத்தாங்
காணலுற வேண்டிற் கசிந்துருக வேண்டுமனம்
வேணவாப் பூண்டு விழைந்து.

372. ஈடு மெடுப்புமிலா வீசனருட் செம்பதத்திற்
கூடுமெய் யன்புணர்ச்சிக் கூர்மையால்— நீடும்
பழுதுபட்ட மோகப் படையின் வலியற்
றழிதலுறத் தோன்று மறிவு.

373. ஈசனருட் பத்தி யிதயத்திற் பெற்றவருக்
காசைமனப் பான்மை யகன்றொழியப்—பாசவிருட்
பாழ்வெளியைத் தாண்டிப் பராற்பரமாந் தன்
வாழ்வொளிரக் காணப் படும். [சொருப

374. கடவுளே யுண்மைக் கடைப்பிடியாக் கண்ட
திடவுணர்வு சான்றமனத் திட்பம்—இடர்களை
வெல்லாநிற் கின்ற விறல்சான்ற சாதனங்க
ளெல்லாவற் றுள்ளுந் தலை.

375. கருதலரு மோனக் கடவுளாந் தன்பாற்
பிரிதலரு மெய்யுணர்ச்சி பெற்றால்—இருதலையு
மொப்பதா வுள்ளூன் றுபசாந்த போகமுயிர்க்
கற்புதவாழ் வாகு மகத்து.

376. துன்பமொரு சற்றுந் தொடராத சாந்தப்பே
ரின்பமய மானை வியற்கையால்—அன்பா
லருளிற் கலந்தார் கலந்தார்மற் றல்லா
ரிருளிற் கிடந்துழல்கின் றார்.

377. காணும்பே ரன்பாற் கருத்தழுங்கிக் கர்த்தன்பால்
வேணவாக் கொண்டு விதும்பலுற்று—நாணமிகந்
தோலமிடு வுள்ளத் துணர்வுருவாய் மோனவருட்
பாலனஞ்செய் தோங்கும் பரன்.

(கொச்சகக் கலிப்பா)

378. சுத்தவறி வாகத் துலங்கு சொரூபமே
பத்திசெயத் தக்க பரமார்த்த தெய்வமென்று
சித்தமல மான செருக்கறுமாற் றுணர்வை
உய்த்தொடுக்கி யுள்ளத் துபாசிப்பர் நல்லோரே.

379. போத சொரூபந்தாம் போற்றுது கற்பனை
பேதமே நோக்கியகப் பேய்மனத்தாற் கன்றலுற்று
வாதமே செய்யு மதோன்மத்தர் மெய்யுணரார்;
காதலா லுண்மை கடைப்பிடிப்பர் நல்லோரே.

380. அனங்கமதன் காமக்கோ லாகலஞ்சே ராட்சி
வனங்கலந்த மங்கையராற் செய்யும்வை யத்தில்
மனங்கலந்தா ரன்றியிறை மாண்பதக்தே மற்றோர்
கனங்குழையார் காதலின்மெய்க் காவலிலார் தாமே.

குறிப்பு :—மாண்பதத்தே மனங்கலந்தார் எனக்கூட்டுக.
'அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்
லாற், பிறவாழி நீத்த லரிது' என்னும் (1-8)
குறள் ஈங்கு நோக்கத்தக்கது.

381. உண்மையே காண்க வுறுதிசேர் வாழ்வுமற்றவ்
வண்மைசேர் வாழ்விடமாய் மற்றெல்லாங் கற்பனை
[யே
எண்மையா வன்னவற்றை யெள்ளுமனப் பான்மை
[யில்லார்
திண்மைசேர் சித்தி சிவசொருபத் தெய்தாரே.

382. எங்கு(ம்) நிறைந்துறைவான் எங்கும் புலப்படான்
சங்கந் தணந்துசங் கற்பவிகற் பங்கழன்று
பங்கமறச் சிந்தை பரிந்துருகும் மெய்யன்பர்க்
கிங்கிதா வென்றிதயத் தெம்மான் வெளிப்படுமே.

383. தெருமரல் சேர்ந்த செருக்கு மனத்தர்
குருவருள் கூட்டிடு லன்றிக் குருட்டு
வெருவர லற்று விகக்கமெய்ஞ் ஞானத்
திருவருள் வாழ்வு திளைக்க வொண்ணாதே.

384. பாச வுணர்வொழியப் பாற்றுவது சுத்தசிவ
நேச வுணர்வேநின் னெஞ்சிலுறப் பற்றிலது
கோசமாம் பாசக் குடிலவகப் பேயுணர்வை
நாசமுற ஞானவருட் கூர்வாளா லெட்டுமே.

385. நீர்மைசே ரன்பான நேயத்தாற் சிந்தைகசிந்
தோர்மைசே ருள்ளுணர்வா லுள்ளியுள்ளி யொட்டப
[நுட்பக்
கூர்மைசேர் மோனக் குலாச்சேர்ந்த சித்தத்திற்
சீர்மைசேர் சுத்தவருட் சிற்பரவாழ் வோங்குமே.

386. கருமசம் பந்தக் கறையைக் கழுவும்
பரமசிவ புக்தியாற் பாவமறக் கெட்டுத்
தரும சொரூபசிவ தத்துவமெய்ஞ் ஞானத்
திரயவுன வாழ்வு செழிக்கப் பெறுமே.

387. உள்ளம் பரமா வுருகி யுருகிமுற்றக்
கள்ளமனக் காடின்யத் தன்மை கரையிலன்றித்
தெள்ளமுத மான சிவானுபவம் பொங்கவருள்
வெள்ளமா மோன வியோமவியல் சேர்வரிதே.

388. ஆதரா வைம்புலப்பா ழாசையூ டாழ்ந்தழுங்கா
தேதமில்பே ரின்ப விறைவனை நீ ரெண்ணி
[யெண்ணிக்
காதலாற் சிந்தை கசிந்துள் ளுருகிலருட்
போதவாழ் வுள்ளமெழப் பொங்கும் பொலியவே.

389 துன்றியார் பேணத் துலங்கு சொரூபனது
வென்றிசேர் சுத்தவருள் வேட்கையாற் சிந்தைகசிந்
தொன்றினு லன்றி யுணர்வோ டிதயத்து
நன்றிசேர் சாந்தி நலந்துலங்கக் காண்யரிதே.

390. மெய்யன் புணர்ச்சி விளைந்திடிலே யுள்ளத்திற்
குய்யம் படுபொய்க் குடிலவெம் பாசமறும்;
செய்யும் பரிசு சிவன்கழலிற் சிந்தையொன்றி
உய்யும் படியன் புணர்வுள்ளம் பற்றலே.

391. புள்ளுவஞ் சேரைம் புலவுலக மோகமயற்
கள்ளங் கலந்த கருத்தைத் திருத்திநீ
ருள்ளன்பு செய்யி னுடையான்மாட் டின்பவருள்
வெள்ளம் பரக்க விளையு மிதயத்தே.

**குறிப்பு :—புள்ளுவம் - வஞ்சகம்.**

392. தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரமா னுனுபவ
வெள்ளந் திளைக்க விரும்புகின்றோர் வேட்கையா
லுள்ளத் திலேறவனை நன் குள்ளியுள்ளி யானொனும்
[பொய்க்
கள்ளமனம் பொன்றக் கரைந்தொழிய வேண்டுமே.

393. துரும்பா வுலகைக் துறந்து சிவத்தை
விரும்பியே சாதனையில் வேரூன்றி நின்றோர்
பரம்பாய வூற்றவருட் பார்வையால் இன்பக்
கரும்பா விளைவர் கனிந்தமனத் தாலே.

394. திரிசியப்பா ழாசையறத் தீர்ந்தொழிந்தா லன்றிப்
பரசிவப்பே ராசைப் பயன்பெறுமா றில்லை;
அரசியற்பே ராசை யடைந்தோர் விடய
வுருசியிற்சே ராசையொழிந் தொண்பரமோர் வாரே.

குறிப்பு :—அரசியல் - பாரமார்த்திக சுவாராச்சியம்
ஓர்வார் - ஓரவேண்டும் என்பதாம்.

395. துராலெனமற் றெல்லாந் துறந்து சொரூபப்
பிரானருளே தாரகமாப் பேணுவோர் உள்ளத்
தொராறென்றெருதன் னுண்மை யுணர்வொளிசேர்
[சுத்தப்
பரானுபவ மோனப் பயன்சேர்கிற் பாரே.

*துரால் - செத்தை.

396. ஊத்தை மலப்பா ழுலகப் புலன்களினின்
றீர்த்து மனத்தை யிறைவனருட் சிற்பதத்திற்
சேர்த்தலே சாதனையாத் தேர்ந்தியற்ற வல்லார்க்குப்
பேர்த்தியற்ற வேண்டா பிறிதோர் பெருந்தவமே.

397. வையம் படுமாய வாழ்வி லுழல்வார்க்குக்
குய்யம் படுபொய்க் குடிலமற வுள்ளத்து
மெய்யன் புணர்வு விளங்கிலன்றி வித்தகப்பே
ரையன் சொரூப வருள்விளக்கஞ் சார்வரிதே.

398. அந்தணனு லாண்ட வகத்தீசன் றன்னுண்மை
முந்து சொரூப முழுமுதலாத் துன்றலால்
எந்தை பதத்தை யிதயத் திருத்திலருள்
விந்தையாற் றானே விளங்கும் பிரம்மமே.

399. அற்றமற்ற வாலறிவா வாண்டான் சிவரமண
நற்றிருப்பே ரோத்தான நல்லதிரு மந்திரங்காண்
கற்றுப் பயிற்றக் கடவதாத் தேறித்தற்
பற்றினர் தன்மைப் பராங்கதிசேர்க் கும்புணையே.

400. நேரியதோர் நல்ல நெறிப்பட் டொழுகினுந்தாம்
வீரியமெய்ஞ் ஞான விசாரத்தா லாணவந்தீர்
ஆரியனு லன்றி அகப்பா மூவிச்சையுரர்
கூரியமெய் யன்பாற் குருபரன்றாள் பற்றுகவே.

401. யாதொன்றும் வேண்டா இதயத் திறைரமணன்
மீதன்பு நன்கு விளங்கத் திளைக்கலுற்றால்
ஏதங் கலந்த வெதிர்ப்புலத்து மோகமறக்
காதுங் குடாரி கருத்தனருட் காதலே.

402. ரமணனையே யெண்ணி ரமித்தலாற் சித்தஞ்
சமனமா(ம்) மோன சதாபத்தி சான்றோர்
எமனென் றெருருவ னிருப்பதாக் காணார்
அமணமாம் பாழ்விட் டகன்றவாற் றலே.

## 59. பகவானிடம் ஆற்றுப்படுத்தல்

(வெண்பா)

403. பேச்சற்ற மோனப் பிரான்பதத்து நேர்முகமாய்ப்
போய்ச்சற்று நின்று பொருள்காண்மின்—நாச்
|செற்று
நானென்னும் மோக நவைசே ரகஞ்செற்றுத்
தானுந்து மத்தத் துவம்.

404. ஆமாறு சொல்லுகே ளண்டான் குருரமணக்
கோமான் பதத்திற் குடியேறிற்—காமாதிப்
போராட்ட நீக்கியருட் போகமார் சாந்தியுறச்
சீராட் டுறுவான் சிவத்து.

405. அமைவிலா மோக வகந்தை மணமே
எமவா தனையுழத்தற் கேது—ரமண
னடிச்சுவடு பற்றி யறிவொழுக்கங் கைக்கொண்
டிடிற்சிதையும் யானென் செருக்கு.

406. வண்மைசேர் ஞான வளவன் குருரமணக்
கண்மணியை முற்றக் கடைப்பிடிப்பின்—உண்மைத்
திறப்பாடு சான்றவருட் சிற்குறிப்பா லண்டான்
பொறுப்பாளி விட்டின் பொருட்டு.

## 60. பாசமறல்

(குறள்)

407. அருள்வலத்தா லுள்ளத் தடங்கலே பாச
வெருளியற்கை தீரும் விதம்.

408. ஓர்த்தறியத் தக்கதுதன் னுண்மையே யாகவகங்
கூர்த்தறியிற் *கோட்ட மறும்.

* கோட்டம் - பாசச்சிறை, பாசபந்தம்.

409. உள்ளந் தெளியவிளங் குண்மையுணர் வேயழிக்கும்
கள்ளவெம் பாசவகக் கட்டு.

410. வெளியே வழுவா விளங்கலுற் றுவே
இளிசேர்வெம் பாச மிறும்.

411. சிற்பரமா முண்மை தெளிந்தவிடத் தற்றொழியும்
கற்பனையா மோகவகக் கட்டு.

412. மோகவகக் கட்டு முசிக்க வொளிர்ந்ததகத்
தேக சொரூப வியல்.

## 61. பிறவியறல்

413. யானென் புதன்மெய் யியல்விளங்கி லன்றிமற்
றூனங் கழியா துயிர்க்கு.

## 62. மயக்கமறல்

414. இரண்டிலா வுண்மை யியல்கண் டுணர்ந்தால்
மருண்டமனோ மாய மறும்.

415. மாயக் கனவா மதித்தலே பேதமயல்
வியலுறக் காணும் விதம்.

## 63. மனச்சலனமறல்

416. துவிதமனப் பாசச் சுழற்சியற்றோர் ஞானத்
தவமெளிதின் முற்றுவர் தாம்.

## 64. மனத்துறவு

417. மனத்தைக் கடக்கின் மனமன்றி யில்லா
வனைத்துங் கடந்ததே யாம்.

## 65. மனோநாசம்

418. பொங்கு சொரூபவருட் பூரணம்புக் காலன்றி
மங்கரிது மாய மனம்.

419. தற்பரஞா னானுபவஞ் சாரளவும் பொன்றாது
கற்பனைசேர் மோகக் கருத்து.

420. மோனானு பூதி முயங்குமகம், யானெனும்பொய்ம்
மானுபி மானமற் றால்.

421. மனக்கூற் பஞ்சத்தி மாய்ந்தொழிந் தாலே
அனர்த்தப் பிறவி யறும்.

422. அருட்காட்சி யாலே யகந்தெளியின் *மாயும்
மருட்காட்சி யாம்பொய்ம் மனம்.

*மாய்தல் - கரத்தல், மறைதல்.

423. உள்ளமெழு வுண்மை யொளிரிலன்றி மாயாது
கள்ளவகங் கார க் கருத்து.

### (வெண்பா)

424. உண்மைசேர்மோன வொளிப்பதத்திற் சிந்தையறில்
வண்மைசேர் வாழ்வு மடுப்பதன்றிக்—கண்மயல்சேர்
புத்திக் கலக்கமறப் பொங்குசிவ போகவுணர்
வெத்திறத்து மில்லை யுயிர்க்கு.

### (கொச்சகக் கலிப்பா)

425. முயற்சிசேர் மோக முனைப்போடு வஞ்ச
மயக்கப் பனைசேர் மனங்கெடக் காணிற்
கயக்க வுயக்கங் கவல்கெடத் தன்மெய்
யியற்சிற் பரவாழ் விதயத் தெழுமே.

## 66. மோனம்

(குறள்)

426. மோன வுணர்வாலே முத்தி திளைக்கிலன்றி
ஏனையெத னலு மிலே.

427. மோனத்தா லன்றி முகப்பரிது சுத்தவருள்
வானமாந் தன்மெய் வடிவு.

428. நல்லசுப மோனமே ஞானமா வுள்ளலரின்
மல்குமனு பூதி மனத்து.

429. ஒன்றிஞ லுள்ளத் துறுவதுகாண் சுத்தவருள்
வென்றிசேர் மோன விறல்.

430. கடக்க வொண்ணுத கடுந்திறல்காண் *உள்ளத்
தொடுக்கமுற்ற மோன வுரன்.

***உள்ளத் தொடுக்கமுற்ற மோனம் - மனம் உள்ளத் தொடுங்கலால் உற்ற மோனம்.**

431. மோன வருட்பார்வை முற்றிஞ லுள்ளத்தில்
வானவடி வாகும் மனம்.

432. மோன வுணர்வு முகக்கிலன்றி யுள்ளத்து
ஞான நிலை நண்ணியதன் ருமம்.

(வெண்பா)

433. அறிவான தன்னி லனைத்துமொன் ருகச்
செறிவான மோனந் தெளிந்தால்—சிறவாத
பாசவிஞ் ஞானமறப் பார்வை பராற்பரமாய்க்
கோசவகங் காரங்கெடும்.

434. மோனமே யன்றி முழுமுதற் செம்பொருளை
யூனமறத் தேற வுபாயமில்லை—ஞான
சொரூபமா முண்மை துவிதபுத் திக்குத்
துரூகமென்ப தான்ருேர் துணிபு.

(கொச்சகக் கலிப்பா)

435. காணுதே காணிலன்றிக் கண்ணுன தன்சொருபம்
மாணு மடக்கமே மற்றுடல்போற் கண்டிடிலோ;
ஊணுன மோன வுணர்வுக் கொளிர்வதன்றிக்
காணுது காண்டலகங் காரமதிக் கோர்வரிதே.

குறிப்பு :—காணுது காண்டல் என்னுஞ் சொல்லின்
பொருளே சுட்டுணர்வான அகந்தை
மதிக்குத் துலங்கா தென்பதாம்.

436. முனைப்புற்ற நானெனும்பொய்ம் மோகமனப் பாச
நினைப்பற்ற மோன நிகழ்ச்சியா லன்றி
எனைப்பற்று மற்றெளிர்பே ரின்பவெளி யாகத்
தனிப்புற்ற சுத்தசிவ தத்துவங்கூ டாதே.

437 தெளிந்த சிவானுபவத் திட்பமா மோனம்
அளைந்தா லமைதி யடைவதன்றி, நானென்
றுளைந்துழல்வெம் பாச வுணர்வா மகந்தை
விளிந்தொழியு மட்டுமன்றே வேக மறுதே.

438. வென்றிசே ருண்மை விளக்கமா மோனவரு
ளொன்றினு லன்றி யுளத்தே, கடுவிடம்போ
* லன்றியே தம்மை யலைக்குமகப் பேய்மனப்பாழ்
பொன்றியே சாந்தசிவ பூரணந்தாஞ் சேர்வரிதே.

* அன்றுதல் - பகைத்தல்.

439. நானென்ற மோக நவைசே ரகங்கார
வூனமொன் றற்ற வுதாரப் பரசொருபம்
யானென்ற சேட்டை யிதயத் திறக்கவொளிர்
மோனமொன்று லன்றி முயங்கவொணு தார்க்குமே.

440. ஆனந்த மான வருட்சிற் பரத்திலன்றி
ஈனந் தவிரவுயிர்க் கேதுவில்லை யென்றறிந்து
தீன மயக்கச் செருக்கா மகந்தைதீர்
மோனந் தெளிய முயற்சிப்பர் நல்லோரே.

குறிப்பு :—முயற்சிக்க வேண்டு மென்பதாம்.

441. முற்றமுழுத் தன்மையா மோனத்தே மூண் [டொளிர்வ
திற்றெனவொண் ணுத்தன் னியல்பான வுண்மை [யென்பர்;
சுற்றுமுற்று நோக்கிச் சுழலா துளத்தொடுங்கிப்
பற்றிடுக சுத்தவருட் பார்வைசேர் மோனமே.

442. தானு வொளிர்சொருப சாட்சாற்கா ரத்திறத்தால்
ஆனுத சுத்த வருள்வெளியே தம்முருவா
மோனனு பூதி முகக்கிலன்றி யுள்ளத்து
மானுபி மான மனக்கலக்கம் மாருதே.

443. துன்றக் கடவதுசற் போத சொரூபமே
யென்று தெரிந்தோர் இதயத்து மோனவுணர்
வொன்றே யுறுதுணையாப் போற்றி உபாதியுணர்
வென்றமனக் கற்பனையை யின்று வொழிப்பரே.

## 67. விசாரம்

(குறள்)

444. அயல்போ யலமரா தாய்வீரேல் உள்ளத்
தியல்பாக வுள்ளா னிறை.

445. ஆயலுற்ற லன்றி யருது விசித்திரப்பொய்ம்
மாயவலை யான மனம்

446. மாயமா மோக மனப்பாழ் கடக்கநேர்
வாயிலாந் தற்றே ருசா.

447. சுத்த விசாரந் துலங்கி லகந்தை மனப்
பொய்த்தவறு காணுது போம்.

448. எண்ண வொணுநின் னிரண்டற்ற வுண்மையை
துண்ணுணுகி யாராய்ந் துணர். [யோய்ந்

குறிப்பு :— ஒய்ந்து - மனோவியாபாரமான சங்கற்ப விகற்பங்களினின்று நீங்கி; ஆராய்தல் - நுண்ணுணர்வான மோனத்தால் என்க.

449. வானேறச் சேரும் வழியேல் இதயத்தில்
யானா ரெனச்சேர்ந் திடல்.

450. தானா ரெனவகத்துத் தன்னைத்தான் றேர்ந்
தேனே வதுநா னெனல். [துறைக்கா

451. தனித்தொளிர்மெய்த் தன்மை தழைக்க வுளத்துத்
தனைத்துருவல் சற்சா தனை.

452. கூர்த்தமதி யாலுளத்துக் கூடியே நானாரென்
றோர்த்துணர்க தன்மெய் யுரு.

453. மயக்கமார்க் கென்றுதன்மெய் யோர்த்தலே தன்
மயக்கமறக் காணும் வழி. [பொய்ப்

454. இன்றியமை யாத்தன் னியலோர்த் தறிந்தகத்து
நின்றிடலே ஞான நெறி.

455. அண்டா தகப்பே யகலவிசா ரித்துத்தற்
கண்டா லகலுங் கலி.

(வெண்பா)

456. வந்தவழி யேயொருவன் போனாலே யன்றித்தன்
சொந்த சொரூபந் துலங்காது—வந்தவழி
எந்தவழி யென்றாய்ந் திதயத் தகமுகமாப்
புந்தியையுட் போக்கல் புலன்.

457. அயலறிவோ டாசை யகங்கார மோகச்
செயலறவே சித்தந் திரும்பி—முயலுண்
ணியலைநீ சோதித் திதயமுறி லுண்மைக்
கயிலையாங் கேவலமடையுங் காண்.

458. உள்ளத்தே புக்கு வுணர்வாலே நானெனும்பொய்க்
கள்ளக் கலக்கங் கழியிலன்றி — வெள்ளக்
கடலனையா னன்றங் கடைப்பிடித் தாலு
முடலகந்தை தீரா துளத்து.

459. நன்றிசே ரான்மகுரு நாதன்பே ரின்பவருள்
வென்றிசேர் வாழ்க்கையுற வேண்டிஞல்—ஒன்றி [யுளத்
தூடுருவித் தன்சொருப வுண்மையைநா ஞரென்று
நாடுவது நல்ல நெறி.

நாடுதல் - நாடியடைதல்.

460. அறிவாந் தனேயே யறிய வொஞ்ஞவவ்
வறிவறி யாமையே யன்ரே—அறிவுபிற
சுட்டலுறு முன்பு சொரூபமாந் தன்னேயே
சுட்டிலறி வுண்மைதுலங் கும்.

461. இறப்பாம் பிறப்புக் கினித்திரும்பி வாராச்
சிறப்பாம் பரமார்த்தச் சீர்மை —மறப்பாம்
பிரமாதப் பாழை விசாரத்தாற் பேதித்
துரமாக வூன்று முணர்வு.

462. உளவாக வுள்ளதுயிர்க் குள்ளேநா னென்று
கிளர்வதா மேகக் கிரணம்—தளர்வின்றி
யந்தக் கிரணமூ லத்தையகத் தொற்றிஞற்
பந்தமறக் காணும் பரம்.

463. இறந்தொழிவோ மேயென் றினேந்தழுங்கும் மாந் [தர்
பிறந்தவர்யா ரென்றகத்திற் பேணிற்—பிறந்த
வுடலகந்தைச் சாவா வுறுவர் சொரூப
திடவுணர்வாற் சாவாத் திறம்.

464. உண்மையிலே யன்றி யுயிருக் குறுதியில்லே
வண்மையுறு வரழ்வு மடுக்கவெண்ணில்—நுண் [மையா
வோர்த்துணர்ந்து தன்சொருப வுண்மைநிலே பேரா
காத்தலுற வேண்டுங் கருத்து. [மற்

465. உள்ளத் தொடுங்கித்தன் ஞற்பவ(ம்)நன் குய்த் [துணர்ந்து
தெள்ளத் தெளிந்தவியற் சீர்மையே—கள்ளமனக்
கற்பனேயி னீங்கிக் கடவுட் பாசொருபச்
சிற்பதமெய் சேருந் திறன்.

466. உள்ள பொருளை யகத் தூய்ந்துணர்ந்து புத்திமிகத்
தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரத்தில்—கள்ளமனக்
காரகந்தை வெள்கிக் கரந்தொழியிற் கைவல்யச்
சீரகந்தா னுவொளிருஞ் சீர்த்து.

467. உள்ள பொருளை யுளத்தே யுறுதிபெறத்
தெள்ளத் தெளிந்தகமாத் தேறிலன்றி—அள்ளும்
பிரமாத மாமரணப் பீழையறக் காணார்
*திரமான தெய்வத் திறம்.

*திரமான தெய்வத்திறம் - சாசுவதத்தன்மையான அமிர்தத்துவம்; சாவா நிலை.

468. கற்பனையா லேங்கிக் கலங்குமுயிர் கற்பனைவிட்
டுற்பவமோர்ந் துள்ளத் தொடுங்கலாற்—சிற்பரத்தே
மங்கியொழிந் தாலகந்தை மாட்சிபெறத் தன்மய
பொங்குஞ் சிவச்செம் பொருள். [மாப்

469. கற்பனையூ டாடக் கழியாது சிந்தைதன
துற்பவமோர்ந் துள்ளத் தொடுங்கலுற்றால்—அற்ப
[மன்றித்
தானே யகில சராசரமாச் சேர்ந்தொளிரவ்
வானு வளரும் வடிவு.

470. நெற்குற்றுப் போல நிகழ்விசா ரத்தாலே
தற்கற் றறியத் தலைப்பட்டோர்—தொக்க
திரிசியமாந் தேகத் திரய மகற்றி
யரிசியாத் தம்மையறி வார்.

471. மூர்க்கவகங் கா ரம் முனைக்கலுற்ற மூலமெங்கென்
றோர்க்கலே யுண்மை யுசாவுருவாம்—ஆர்க்கு
மகந்தைவடி வானநா னுரென்று தன்மெய்
யகந்தெரியக் காண்டலா மஃது.

472. சித்த மலங்கெடிலச் சித்தமே சிற்பரமா
அத்தனரு ளங்கு வெளிப்படுங்காண்—சித்தமுனைந்
தற்றமறத் தன்னுருவை யாய்தலாற் பாழ்த்தமல
மற்றொழியப் பாச மறும்.

5

473. பந்த வகந்தையனப் பாழறிவு கெட்டொழிய
விந்தைசே ரான்ம விசாரமே—சொந்தவியல்
யாதெனத்தாம் வந்தவழி யேகித்தம் முள்ளம்புக்
கோர்தலா லாற்ற லுணர்வு.

குறிப்பு :— கெட்டொழிய, ஏகி புக்கு விசாரமே ஆற்றல் எனக் கூட்டுக.

474. காரணமா மோகங் கழன்றொழியிற் கற்பனைதீர்
பூரணமெய்ஞ் ஞானு பூதியுண்டாம்—*பாரணவுஞ்
சிச்சடமா மோகத் தெருமரல்சேர் தன்னுருத்தேர்
விச்சையான் மோகம் விடும்.

* பார் - உலகம், உலகநோக்கத்துக் காகுபெயர்.

475. இதசத் துருவா வெழுந்த வகத்தை
யதிசத் துருவா வறிந்து—சதசத்
துசாவா லதன்மெய் யுணர்பதத்திற் பொய்யாம்
பசாச வகந்தை படும்.

476. தெளிவார் சொரூபவருட் செம்பொருளை வஞ்சக்
களவுகொள்ளு மோகக் கருத்தைத்—தெளிவாக
அவ்வப் பொழுதே யகங்கூர் விசாரணையாற்
றெவ்வென் றறவே சிதை

477. அகந்தை முனைத்தலெங்கென் றுய்ந்தகத்து மூழ்கி
முகந்தமுந்த மூலத்தே மூண்டால்—அகந்தை
முனைத்தலற்றமோன முழுமுதலாப் பொங்கும்
மனத்துருவே யாண்டான் வடிவு.

478. அகந்தைமதி நட்டமா யற்றொழிந்தா லன்றி
முகந்திடவொண் ணாதுசிவ முத்தி—அகந்தைவே
றெங்கென் றுசாவி யிதயம்புக் குண்மையுணர்ந்
தங்கொன்றி லப்பொய் யறும்.

479. ஊன வகந்தை யொழிதலை தன்னுண்மை
யான சொரூப மடைதலாம்—நானென்
றெழுபவனா ரென்றாய்ந் திதயமுறப் புக்கா
லொழிவதா மப்பொய் யுணர்வு.

480. உள்ளதுயா தென்றுளத்தா டோர்க்கலுற்ற வவ்வு
[ணர்வே
யுள்ளதா முண்மையென் றுள் னாய்த்துணரிற்—
[கள்ளமனச்
சஞ்சலமாம் பேதச் சதிரழிந்து சாந்தநிஷ்டை
நெஞ்சுருவா நிற்கு நிலைத்து.

481. காணப் படுமுலகைக் காணுந்தா னாரெனவுட்
பேணுமெய்ஞ் ஞான விசாரத்தால்—ஆணவஞ்சே
ரற்பமன மான வகந்தைமுடிச் சற்றொழியிற்
சிற்பரவாழ் வோங்குந் தெளிந்து.

482. உள்ளந் திறக்கிலன்றி யுள்ளத் தொளிர்சொருப
வெள்ளந் திளைக்கவழி வேறில்லை—உள்ளமாஞ்
சிச்சடம்பே திக்கச் சிறந்தவழி தன்னுருத்தேர்
விச்சையொன்றே **மிச்சை பிற**.

483. அருட்போ தனைமிக் கனுபூதி யாக
விருப்பா விசாரித் திடலே—இருப்புணர்வா
வுள்ளத் தொளிர்மெய் யுடையான் சொரூபவருள்
வெள்ளந் திளைக்கும் விதம்.

484. வந்த வரத்தை மறந்துவழி தட்டுக்கெட்
டுந்திமனஞ் சிந்து முயிர்த்தொகைக்கு—விந்தைசே
ருள்ளூராந் தன்சொருபத் துள்ளூர வுய்க்குமுசா
வுள்ளூரக் காண்ட லுணர்வு.

485. யானா ரெனத்தன் னிதயத்து மோனமா
ஆனா விசாரத் தழுந்தலே—தானா
வொளிர்சொருப மான வுயர்பதத்தைச் சேர
உளதா மொரேமெய் வழி.

(கொச்சகக் கலிப்பா)

486. முக்கியமா மற்றவற்றின் முற்படத்தாஞ் சோதிக்கத்
தக்கதுதம் முண்மையெனச் சாற்றுங் குருமொழி
சிக்கெனவுள் ளத்திற் செறியீர் மறவாதீர்; [யைச்
தொக்கபர மார்த்தந்தற் சோதனையா லன்றியின்றே.

குறிப்பு :— மற்றவற்றின் முற்பட - மற்றவற்றைச்
சோதிக்கத் தொடங்கு முன்பு; இன்று -
அறிந்தடைய வொண்ணாது.

487. மித்தைதீர் மெய்தெரிய வேண்டுவீர் நானெனும்
மத்த வகந்தையற மாற்றியே யோர்த்திடீர்; [பொய்ம்
தத்துவமா வுள்ள விறை தன்னியலே யானவருட்
சித்துவத்தா லன்றித் தெரியவொண்ணு ஞர்க்குமே

488. உள்ளதனை யுள்ளபடி யுள்ளத்தே யோர்த்துணரார்
கள்ளவகங் காரமனக் கட்டறுமார்க் கங்காணுர்;
தள்ளியே மற்றனைத்துந் தாமாரென் ருேர்மனத்தா
லுள்ளத்தா டாழ்ந்தாழ்ந் துசாவுகதம் முண்மையே.

489. தன்சொருப வுண்மைநிலை சார முயற்சிப்போன்
தன்சொருப வுண்மை சகஜமாச் சாரளவும்
தன்சொருப சங்கமே சாதனையாற் சார்தலொழிந்
தன்னியசங் கத்தோ டளாவி லனர்த்தமே.

490. தன்னிலையி னின்று தணந்தார்க்கு மெய்யுணர்வாற்
றன்னிலைசார்ந் துள்ளந் தரிப்பளவும் கற்பனைசே
ரன்னியமாம் யாதோ ரடைவாலும் சிந்தையற்ற
நன்னயமார் சாந்தியொளி நண்ணவே நண்ணுதே

491. ஐயுறுந்தன் னுண்மையைநன் காராய்ந் தறிகிற்பின்
ஐயுறுநா னென்னு மகந்தைமய லற்றொழிவால்
ஐயமொரு சற்றுமின் றாக வகத்தகமாத்
துய்யபரந் தானேதா னாகத் துலங்குமே.

492. தற்போது நீரெங்கோ சார்ந்ததாய் மெய்ப்புகலா
வெப்போதும் மீளாப்பே ரின்பவீ டாராய்வீர்
இப்போ திருக்கு மிடந்தேர்ந் துணரில் அதே
சற்போத மான சதாமுத்தித் தானமே.

493. மங்களவாழ் வானபெரு மாண்பதமெய்க் காட்சி
கெங்களம் மானுக் கிருக்கை யிதயமே [வழங்
வெங்களவு போக விசாரித்துத் தானுரென்
றங்கடையி லன்றியரி தாண்டவன்மெய்க் காட்சியே.

494. கலகலெனும் பல்கலையின் கற்றைகளைக் கைவிட்
டுலகியல்வெம் பாசவுணர் வோயவுளங் கூடி
அலவலறத் தன்னுருத்தே ரான்மவிசா ரத்திற்
குலவுறும்மெய்ஞ் ஞானவருட் *கோலவியல் வாழ்வே

* கோலம் - வடிவு, சொரூபம்.

495. தீனமா மோக வகந்தைச் செருக்களவே
யானவெம் பாச மகன்றொழியத் தன்னகத்து
மோன வருள்வெளியா முற்றிக கிடந்தசிவ
ஞானந் துலங்கவுற நாடுகதன் னுண்மையே.

496. நிந்தைசேர் மோக நிசித்த வகந்தைகெட
விந்தைசே ரான்ம விசாரத்தாற் சிற்பரமே
சொந்த சொரூபமாத் துன்றுதோ ருள்ளத்தில்
அந்தமில்பே ரின்ப வழிவில்வீட் டாட்சியின்றே.

497. யானென் பவனு ரெனவுளத்தாழ்ந் தாராய்வால்
நானென்னும் மோக நடலைக்கூத் தாடிதன்
ஊனென்று கோச வுருவைக் களைந்தொழியில்
தானென் றொளிர்சொருபத் தத்துவந்தான் காண்
[பனே.

498. குருவருளே தாரகமாக் கொண்டுமனம் தன்னைத்
துருவலாற் சுட்டறிவு கெட்டொழியத் துன்றும்
பரவெளியே தம்முருவாப் பற்றிலன்றி மோன
வுரவொளிசே ருண்மைநிலை யுள்ளத் துறுதே.

499. மேதக்க ஞான விசாரத்தால் அஞ்ஞானச்
சூதற் றகந்துலங்கு சுத்த சொரூபவருட்
போதத் தெளிவாப் பொருந்திலன்றி நானென்னும்
பேத வகந்தைமனப் பேய்க்கலக்கம் பேர்வரிதே.

500. உளவறிந்து செய்யு முசாவால் உடப்பிற்
களிவளர்பொய்ம் மோகவகங் காரமறத் தன்மெய்த்
தெளிவு பிறக்கிலன்றிச் சிற்பரமா மோன
வொளிவெளியாங் கைவல்ய வுண்மை யுருதே.

501. மெய்த்தவமா வுள்ள விசாரத்தா லுள்ளஞ்சேர்
தத்துவஞா னத்தாற் றலைப்பட்டா லன்றிமற்
றெத்தகைமா யோக மியற்றினுந்தன் னுட்பநுட்பச்
சித்துவமா முண்மைநிலை சேர்ந்து திளைப்பரிதே.

502. விசாரதரா வோங்குபர வித்தகர்பாற் றேர்ந்த
விசாரணையா லுண்மை விளங்குற்று லன்றி
நிசாவியல்வெம் பாசஞ்சேர் நீசமனப் பாழில்
அசாவிளைவாம் பேயகந்தை யாட்ட மருதே.

503. ஊடுபா வாகவனைத் தூடுருவ லுற்றவொளிப்
பீடுசால் சுத்தப் பிரம்மங்காண் சொச்சொருபம்
நாடுமா நாடிற்பொய்ஞ் ஞானவகப் பேய்நசிக்கக்
கேடுபடா வுண்மையாக் கேழ்கிளருந் தன்னியலை.

504. சொப்பனத்தே போலச் சுழல்விப் பிரமங்கூர்
விற்பனராஞ் சீவர் விசாரணையாற் கேவலசச்
சிற்பரமாத் தம்மைத் தெளியிலன்றி மோகமனக்
கற்பனு சம்சாரம் சற்றுங் கழியாதே.

505. சாதகரா வெண்ணிச் சரிக்குந்தாம் யாரெனவுள்
ளாய்தரலால் ஊன வகந்தைமுனைப் பற்றொழியச்
சார்தருமோ னுபவத் தன்மைசால் கேவலசற்
போத சொரூபவருட் பூரணவாழ் வெய்துவரே.

506. அறிவான வுண்மை யளவாக வுள்ளத்
துறைவாக வென்னை யொடுக்கினேன் காட்டும்
நெறியாலே யன்றி நிருவிகற்ப மோனச்
செறிவாம் பரசொருப சித்தி யுருதே.

507. சித்திரமாங் கற்பனையிற் சேர்முப் புடிபேதம்
பொய்த்தொழியப் பொங்குசிவ போதவருட் பூரண
சுத்தக்கை வல்ய சொரூபானு பூதியின்றி [மாம்
மத்தவகங் கார மனக்கலக்கம் மாருதே.

503. தானென்ற மோனந் தழைத்து விளங்கிலன்றி
நானென்ற மோக நவைசே ரகந்தையருர்
நானென் றுடல்வடிவு நண்ணுது வெற்றறிவே
தானென் றமலான்ம சாதனைசா திக்கவே.

509. முற்றமுழுப் பார்வையாம் மோனங் கலக்கவெனிற்
குற்றவகப் பேய்ழுனைப்பாங் கோட்ட மறல்வேண்டும்
பற்றிலருட் பாதப் பரசொருப பாவனையை
அற்றொழியக் காணலாம் ஆணவப்பே யாட்டமே.

510. திரமான முத்திநிலை தேர்வார்க்கு வேதச்
சிரமான வுண்மை செருக்கழிவா(ம்) மோனம்
பரமா வியல்சொருப பாவனை நம் முள்ளத்
துரமாக பற்றிலவ் வுண்மையொளி நாமே.

511. விளைந்தபரி பாக விசேடத் திறத்தால்
தளைந்த வகந்தைமயற் றன்மைகெட வாராய்ந்
தளைந்தபசு பாசப்பா ழாசையற்று என்றித்
தெளிந்த சொரூபசிவச் சிற்பரவாழ் வின்றே.

512. தற்பரமா வுள்ளசிவ தத்துவத்தாள் சாதிப்போர்
விற்பனரா னுலும் விசாரத்தால் யானெனுந்தம்
முற்பவமெங் கென்றுய்ந் தொடுங்கிலன்றி யுள்ளத் [திற்
கற்பனைதீ ருண்மைக் கழல்விளக்கங் காணுரே.

513. உள்ளலற்ற வுள்ளுணர்வா வுள்ளொடுங்கித் தற் [றேர்வால்
உள்ளப் படாததோ ரொண்பொருளே தன்னுருவா
நள்ளட்பெற் றுலன்றி ஞானு பூதியாற்
கள்ளமனக் கற்பனைதீர் கைவல்யங் காண்பரிதே.

514. துன்றியநா னென்னுஞ் சோதனையா லுள்ளாழ்ந்து
கன்றியபாழ் மோகாகங் காரமறக் காண்டலாற்
றென்றுதொட்ட சொந்த சொரூபமாந் தற் [பதத்தோ
டொன்றுபட்டா லன்றி யுணர்வுநிலை கொள்ளாதே.

515. நுட்பவொட்ப மானபர நோக்கந் துலங்கிலன்றித்
தட்புறுவெம் பாசத் தடையறுத் தன்மைபோல்
உட்பகையா வுள்ளத் துதித்த வகந்தையுணர்
வுட்புக் குசாவிலன்றி *யொட்பநுட்ப மெய்தாதே.

* ஒட்பநுட்பம் - நுட்பவொட்ப நோக்கம்.

516. யானெனும்பொய்த் தன்மை யிறந்தொழிந் தாலன்றித்
தானெனுமெய்த் தன்மை தலைப்பட் டொளிராது;
யானென்ப தேதுமற் றெங்குதித்த தென்றிதயத்
தானந் தெரிந்தொடுங்கிற் சாவதாம் பொய்முனைப்பே.

517. பூத வெளிக்குளநுட் போதவெளி யாவொளித்த
சூதனையார் காண்கிற்பார், சோதனையா லுள்ளாழ்ந்து
பேதமனக் கற்பனைக்கோர் வித்தான நாளுமென்
றேர்தரலாற் றம்மெய் யுருக்காணி னல்லாதே.

குறிப்பு :—சோதனை - ஆன்ம விசாரம்; மெய்யுரு - பரமார்த்த சொரூபம்.

518. யானெனு வுள்ள வியற்செம் பிரானையவ்
வியானு ரெனநன் னிதயத் துசாவிலன்றித்
தானென மோன சமாதியாத் துன்றுசிவ
ஞானனு பூதி நமக்கடைய வொண்ணாதே.

குறிப்பு :—உசாவல் - விசாரித் தறிந்தடைதல்.

519. உதயத் தலமெங்கென் றோர்ந்துணர்வால் அந்த
விதயத் தியல்பா விருந்தொளிர்சற் போதப்
பதியிற் கருத்தைப் பதிக்கிலன்றிக் கன்மச்
சதியிற் கலங்குவோர் தற்பதங்கா ணாரே.

520. என்னதியல் யாதென் றிதயப்புக் காய்தலாற்
பின்னமற்ற சுத்தப் பிரம்மமே தன்னதியல்
வன்னமாய் மோனவருள் வாழ்வு மடுக்கிலன்றிப்
பன்னலரு சுத்தப் பரமார்த்தம் பற்றரிதே.

521. புத்தியையுள் ளத்துட் பொருத்தியே தானென்
றுய்த்துணரத் தேரு முசாவால் அகந்தையறச்
செத்தொழியக் காணிலன்றித் தேறவொணு தொட்ப
முத்தியுணர் வாக முயங்குசிவத் தன்மையே. [நுட்ப

522. பிறபிறவே தேருமகப் பேயுதித்த தெங்கென்
றுறுதிபெறத் தேரு முசாமுறையா லொற்றி
அறிவொளியா முண்மையகத் தாழ்ந்தொடுங்கி [லன்றி
நிறைவெளியாந் தன்மெய்ந் நிலைநேர் படாதே.

523. எண்ணுவோ ஞனநான் யாரேயென் றுள்ளொடுங்கி
எண்ணமற்ற மோன விதயத்தில் வாலறிவா
நண்ணலுற்ற வுண்மையே நாமாகக் காணிலன்றி
எண்ணுமனத் தாலிறையை யாவர்தேர் கிற்பரே.

524. அனுபவமாத் தன்னுண்மை யாய்ந்தறிந்தா லன்றித்
தனுகரண மோகந் தணவாதே; தானு
ரெனவிதயத் தாழ்ந்தாழ்ந் திருந்தொளிர்தன் [னுண்மை
இனையதெனக் காணி லிகக்குமகப் பேயே.

525. ஆன்றபெருந் தக்கோர்பா லாராய்ந்து சிச்சடமா
மான்றவகங் கார மயக்கமறக் காணிலன்றி,
ஏன்றதவ மெவ்லா மியற்றிடினும் கற்பனையாத்
தோன்றியவெம் பாசமனத் தொந்தபந்தம் போகாதே.

526. நித்தமா மோன நிலைகண்ட சுத்தவருள்
வித்தகன்மெய்ஞ் ஞான விசாரத்தால் யானறத்தீர்
சுத்த வறிவு துலங்கப்பெற் றலன்றி
மத்தமனக் கற்பனு மாயங் கழியாதே.

527. தேற்றமாத் தம்முண்மை தேர்ந்தறிந்தா லன்றி [யுளத்
தேற்றபெற்றி யாவரே காண்பா ரிறைவனியல்?
ஊற்றமாத் தம்மையுளத் தோர்த்தாலோ நானுகத்
தோற்றியது தானேயாத் துன்று மிறையியலே.

குறிப்பு :—தானேயா - ஆன்மாவேயாக.

528. உணர்வுருவா வுள்ளதம் முண்மையினைத் தாமவ்
வுணர்வொளியா லேயுய்த் துணர்ந்துகொண்டா
தணவுறுமான் மானுபவத் தாலே யலாமற் [லுள்ளத்
புணர்வரிதா லான்றசிவ பூரணமெய் வாழ்வே.

529. தொன்றுன சொந்த சொரூபசாட் சாற்கார
மொன்றே யுயிருக் குறுதி பயத்தலால்,
குன்றுத மோகக் குடிலவகப் பேய்மனப்பா
ழின்று விசாரித் திதயத் தொளிர்கவே.

530. உள்ளதொன் றன்றி யிரண்டில்லை; நானென்று
துள்ளுமகங் காரத் துடிப்பறவுள் ளாழ்ந்தொடுங்கி
நள்ளிதயத் தாடுதன்னை நானென் றுய்தலுற்றால்
விள்ளுமது நுட்பவொட்ப வெற்றவெளி யாகவே.

குறிப்பு :—வெற்றவெளி - வெறுவெளி சுத்தவெளி.

531. தேட வொணுமெய்த் திரவியமா வுள்ளத்து
நீடலுற்ற சிற்பரமே நிஷ்டையால் விள்ளுவது;
மூடலுற்ற மோக முனைப்பா மகந்தைமதி
வீடலுற வேண்டில் விசாரிக்க வேண்டுமே.

532. என்றுமொன் றாக வியல்சொருப வுண்மையுணர்
வொன்றுசுப வேட்கையோ ருள்ளுணர்வாற் றன்
[னுருவை
மன்ற விசாரிக்கின் மாய்ந்தொழியும் பேய்போலத்
துன்றுமகப் பாழ்ங்கலக்கச் சூதா மகந்தையே

533. யானென்ற வொன்ற னெதார்த்தந் தெரியலன்றி
யானிதுவென் றேய்ந்த வெளவறிவுங் கற்பனையே;
ஊன மயக்க வுணர்வா மகந்தையைவ்
வூனமற வுள்ளத் துசாவீர்யா ஞரென்றே.

534. ஞான விசார நலங்கூர் திருவருளாற்
ருனேமெய்த் தத்துவமாத் தாங்கண் டுணராதோர்
ஊன வுருவெளியாத் தோன்றுலகக் கற்பனையில்
யானே யெனதேயென் றேங்கிக் கழிவரே.

குறிப்பு :—தானே மெய்த் தத்துவமா - மெய்த்தத்து
வமே தன் னுருவாக.

535. வஞ்சச் செருக்கான மாயப்பா ழாசுரப்பேய்
துஞ்சிடிலே சொஸ்த சொருபவியல் வாழ்வடையும்
விஞ்சைசே ரான்ம விசாரவருட் கூர்வாளால்
முஞ்சவே வெட்டுமினம் மோகவசுப் பேயையே.

536. உறழ்ந்த விகற்பவுணர் வோய வுளத்திற்
சிறந்த வுபாசனையாற் சித்த மொருங்கிற்
றிறம்படக்கூர் தேர்வெளிதிற் சேரத்தம் முண்மை
திறந்தவெளி யாகவொளிர் சித்தியுண் டாமே.

குறிப்பு :—தேர்வு - ஆன்ம விசாரம்; சித்தி - சொரூப சித்தி.

537. மறந்தெழுந்த வாணவப்பேய் மாய்மாலம் பேரச்
சிறந்த விசாரணைதாஞ் செய்யாமல் யாரும்
பிறந்தபயன் சேரார்; பிரம்மத்தே நானென்
றுறழ்ந்தெழா தோர்ந்தொடுங்கவ் யோகந்தே ரீரே.

குறிப்பு :—விசாரணை - ஆன்ம விசாரணை; யோகம் - ஞானயோகம்.

538. ஆக்கமா வுள்ள வருட்செம் பொருளையகத்
தூக்கமாத் தேடியுற்ற வொள்ளியோர் தெள்ளுவார்
ஏக்க மனக்கலக்க மில்லா நிரதிசய
மோக்கவாழ் வானசுப மோனனு பூதியே.

குறிப்பு :—நிரதிசய மோனனுபூதி என்க

539. சொற்பனமே மெய்போலச் சோதிப்போன் சுட்டற [விட்
டுற்பவங்கூர்த் தோருந்தற் சோதனையா லுள்ளொ
கற்பனு மோகங் கழன்றொழியக் கைவல்யத் [டுங்கிற்
தற்பரமாந் தன்சொருபத் தன்மைசார் கிற்பனே.

540. மதித்திடவொண் ணாதமனோ மாயா விலாசச்
சதித்திறத்திற் பட்டுச் சதிரழிந்து மாழ்கார்
எதிர்த்துப்போ ராடி யினையா திலேசிற்
குதித்திடுவர் தற்குறியிற் கூர்த்தவுணர் வோரே.

541. சொற்பொருளே கற்கிற்றற் சோதித் தறியாது
தற்பரமா முண்மை தலைப்படுமோ? தக்காங்கு
முற்படவே யுள்ளாழ்ந்து மோனவருட் கூர்மையாற்
பொற்பவிசா ரிக்கிலகம் பொங்குந்தற் பூரணமே.

542 சொந்த சொரூபந் துலங்கிலன்றி ஆருயிருக்
கந்தமில்பே ரின்பநிலை யார்த லருமையால்
வந்தவழி யாலே *மடுத்தகத்துத் தன்னதியல்
விந்தையா லோர்ந்து விலங்குகதன் னுண்மையே.

* மடுத்தகத்து - இதயத்தடைந்து.

543. நித்தமா முத்தி நிலைகண் டறியிலன்றி
வித்தகமெய்ஞ் ஞானம் விளைந்ததன்று; நானென்
றுய்த்தறிந்தா லுள்ளத் தொளிர்சொருப சித்தியாற்
பத்தனெ னென்றமயற் பான்மை கழியுமே.

544. எல்லாமுந் தானெ வியல்சொருப வுண்மையைமுற்
கல்லா தொழிவோர் கடைப்பட்ட பேதையரென்
றெல்லோ ருரைத்தலால் யாமாரென் றாழ்ந்திதயத்
தல்லார் மயக்க மறக்காண்பர் நல்லோரே.

குறிப்பு :—எல்லோர் - அறிவொளி சான்ற ஆன்றோர்;
காண்பர் - காணவேண்டும் என்று கருத்து.

545. சிக்கலா வுள்ள செருக்கற் றொழியிலன்றிப்
பொய்க்கனவா மோகப் புலப்பாழிற் றீர்வரிது
மிக்கவிசா ரத்தால் விவேகித் திதயத்திற்
சிக்கெனவே தன்னுண்மை தேர்ந்தாற் செருக்
[கறுமே

546. மனத்துருயா தென்று மடுக்கவுற்று றுள்ளத்
தனர்த்தமா மோக வசந்தையறச் சாய்ந்து
கனத்த சொரூபக் கடவுள் வடிவாத்
தனித்தொளிரும் அந்தமனத் தன்மைதான் றனே.

547. தெள்ளத் தெளிந்தசிவச் சிற்பரமாந் தற்பரத்திற்
கள்ளமனக் கற்பனையாற் கண்கலங்க லுற்றவுயிர்
உள்ளுணர்வே பற்றித்தன் னுண்மை யுசாவலுற்
வெள்ள வருள்வெளியா விள்ளும் பரசிவமே. [றால்

548. புத்தகஞா னத்தாற் புலம்புமட்டும் புத்தியிலே
வித்தகஞா னுபவ மெய்ம்மை விளங்காது;
செத்தொழிய மோகச் செருக்கான பேய்முனைப்பை
உய்த்திதய மூலத் துசாவாளால் வெட்டுகவே.

குறிப்பு :—இதயமூலம் - இதயமாகிய மூலம்.

549. ஒருதானே யாகவுளத் துள்ளொளிருந் தன்னை
இருவேறு போல வியல்வுறக்காண் மாயப்
பிரமாத மானவகப் பேய்ப்பிழைப்பற் றுய
வுரமாக வுள்ளத் துசாவுகதன் மெய்யே.

550. களிமயக்க மானவகக் கட்டறத்தா னென்
றொளியுணர்வுண் டாக வுசாவியுளஞ் சேரில்
வெளியொளியா யோங்கு விசுத்த சொரூபத்
தெளிவுணர்வே மோனமாத் தேர்வரறிந் தோரே.

551. வித்தாரம் பேசுமட வீணரொடு சாதகர்மற்
றெத்தாலுஞ் சேரா திதம்பெறக்கூ றுள்ளுணர்வால்
முத்தாப மோகமற மூழ்கியகத் தாராய்ந்து
நித்தாப ரோட்ச நிகழ்வுண்மை தேர்கவே.

552. மோன வியற்பரத்தை மோகமுனைப் பற்றொழிந்த
ஞானத் தெளிவிலன்றி நண்ணவொண்ணுத்
[தன்மையால்
ஏனையவற் றுக்கோர் முதலான யானெனுமவ்
வூனமுனைப் பற்றொழிய வுள்ளத் துசாவுகவே.

553. ஒழுக்க முயிர்க்குத்தன் னுண்மை யுணர்வே;
இழுக்க * லிறப்பாம் பிரமாத மென்பர்;
வழுக்கிமன மாயை வலைப்பட்டோன் தன்னுட்
செழிக்க வுசாய்த்தெரிய வேண்டுந்தன் மெய்யே.

* இறப்பாம் பிரமாதம் - மறதிவடிவான மரணம்.

554. ஊடறுக்க வொண்ணுத வுண்மைப் பரசொருப
வீடடையக் கூர்த்தசுப வேட்கையோன் அன்னியமே
நாடலுற்ற நானு ரெனத்தன்னை நாடிலகத்
தூடழியப் பாசவுணர் வுள்ளொளிரும் முத்தியே.

555. சுற்றுமுற்று(ம்) நோக்குமனச் சுட்டறிவுக் கேது
[வாம்
அற்றமறத் தன்னை நன் காராய்ந் தனுபவமாக்
கற்றுத் தெளிந்த கருத்திற் கலக்கமற
முற்றத் துலங்கும் முழுமுதலா மோனமே.

556. துருவினு லன்றித் துரிய சொரூபந்
தெரிய வொண்ணமையாற் சீரியோ ருள்ளத்
துருவிநா னுரெனக்கூ ரோர்மதியா லாழ்ந்து
தெரிவளவா வுள்ளதனைச் சேர்ந்திடுக தேர்ந்தே.

குறிப்பு :—ஆழ்ந்து தேர்ந்து சேர்ந்திடுக என வியையும்.

557. உண்மை யுணர்வா லுறுதிபெற வுள்ளத்தில்
வண்மைசே ராண்டான் வகுத்தா *னறிவுநெறி
நுண்மைசேர் மோனங்கூர் நோக்கால்யா னுரென
[வே
திண்மையா வோர்வார் சிவசொருபஞ் சேர்வாரே.

*அறிவுநெறி - 'நான்யார்' ரென்னும் ஞான விசார வழி

558. யானென்ற தன்னை நீ யாரென்றுள் ளேமுடுக்கி
ஊனென் றகந்தைமுனைப் போய்ந்தொழிகா
[றுந்தேர்ந்தால்
வானென்ற நுட்பவொட்ப மாட்சிசே ரான்மவுருத்
தானென் றுளிருமதி சாந்தசிவ மாகவே.

559. சொந்தமெய்ஞ் ஞான சொருபமே சிச்சடமா
முந்துமகங் கார முனைப்பான மோகவியற்
பந்த மறுக்குங்கூர்ப் பட்டயவா ளாதலால்
விந்தைசே ரான்ம விசாரமீக் கூர்கவே.

560. மட்டிலாத் தன்சொருப மாட்சியைப்பா ழாக்கியது
பட்டியகங் காரமனப் பான்மையென் றோர்ந்த
[கத்துத்
திட்டியைத்தன் பாலே செலுத்து முசாத்திறத்தாற்
பட்டிமனங் கெட்டுப் பரசொருபந் தோன்றுமே.

561. அற்றங் கடிதலே யாற்றக் கடவசிவப்
பற்றின் பரமார்த்தம்; பாசப் பழிபாவக்
குற்றங்க ளெல்லாங் குலைந்தொழியும் யானெனும்பா
முற்றங் கடியுஞா ஞன்மவிசா ரத்தாலே.

562. எண்ணும் வினைமுதலா யானென்போ னுள்ளவரை
எண்ணவே வேண்டுமென் றெண்ணுவோர் எங்கி
[ருந்தவ்
வெண்ண மியல்வதென வேகாக் கிரநோக்கா
லுண்ணுணுக வோர்ந்தங் குரம்படுமா றான்றுகவே.

563. மதித்திடவொண் ணாது மனத்தால் மனத்தைப்
பதித்திடலா லன்றிப் பரத்திலே; நானென்
றுதித்தவிட மெங்கென் றுசாவியுளத் தாழ்ந்தாற்
பதித்திடலா மந்த மனத்தைப் பரத்தே.

564. அவத்தைகளின் மூழ்கி யலமந் துழலும்
அவத்தவுடற் பற்று மகப்பே யுணர்வை
விவத்தைசே ரான்ம விசாரத்தாற் போக்கிற்
சிவத்துவமே யாவிளங்கும் ஜீவத் திறமே.

565. மூடியபா ழாவரண மோகப் பிறவியற்று
வீடுபெற வேவிரைந்த வேட்கையோர் தாமாரென்
றூடுருவி யுள்ளத் துசாவுவரேற் றம்மியல்பாப்
பீடுபெறு சுத்தப் பிரம்மபதங் காண்பரே.

566. ஆதரமாத் தன்னையகத் தாராய்ந் தொடுங்கலால்
ஆதன்மை யான வகந்தை மூனைப் பற்றிடலிற்
பேத மயக்கமறப் பேர்ந்தொழியத் தன்சொருப
வேதகமா முண்மை வெளியா விளங்குமே.

567. அனந்தசிவ மானபர மாத்துவி தத்தை
நினைந்திடவொண் ணாது; நினையப் புகும்அம்
மனந்தன்னை யாய்ந்து படுத்தவகந் தானு
அனந்தசிவந் தன்னை யலர்விக்குங் காணே.

568. யானென்னும் மோக வியற்கையறத் தீவிரமா
யானு ரெனநன் கிதயத் துசாவலாற்
றானே தனக்குறவாச் சார்ந்து தரித்தவகந்
தானே சதாசிவமாந் தன்மை தலைப்படுமே.

569. தகத்தெளிந்த மெய்ஞ்ஞான சாதனையின் மாண்
றெகத்துலங்கு சொந்த சொரூபமா வொன்ற [பாற்
அகத்தே விளங்கிலன்றி யாதார வுண்மை
முகத்தலரி தொட்பநுட்ப மோனவியல் வாழ்வே.

570. ஈனச் சடவுடலே யானென் றெழுமயக்க
வூனப் பிறவி, உசாவித்தன் னுண்மையுணர்
ஞானத்தா லன்றி நசியாதேற் றன்சொருப
ஞானமெவ் வாற்றாலு(ம்) நண்ணக் கடவதே.

571. ஒன்றான தன்மெய் யுணர்வாலே யன்றிமற்
றென்றாலும் மன்னுயிருக் குய்வுறுதி யில்லை
[யென்பர்
நன்றாகக் கூர்த்தமெய்ஞ் ஞானவிசா ரத்திறத்தால்
இன்றாகக் காண்கவெம் பாச வியற்கையே.

572. சாரக் கடவ சதாசார ஞானநிஷ்டை
சேரக் கிடைக்கிலன்றிச் சித்தோப சாந்தியில்லை
பேரத் துரத்திலகப் பேயை விசாரத்தாற்
கூரியமெய்ஞ் ஞானநிஷ்டை தன்னியல்பாக் கூடுமே.

குறிப்பு:—விசாரத்தாற் றுரத்தில் எனக் கூட்டுக.

573. தாயகமா மூலத் தடஞ்சேர நானென்
றுயலுறிற் றன்னை யகமுகமாக் கூரறிவால்
மாயவகங் கார மதோன்மத்தப் பேய்கரக்க
ஞாயிறுபோற் றன்சொருப ஞானந் தலைப்படுமே.

574. அடக்க வொணாத வகந்தை முனைப்பை
ஒடுக்கவே முற்பட் டுழப்பது வீணாம்
நடக்க மறக்கூர்த்து நோக்கில் அகந்தை
முடக்க முறுங்காண் முனைப்பறத் தானே.

575. சற்போத மாட்சி தலைப்பட்டா லன்றிமற்
றுற்பாத மோகமுனைப் போயாது நானென்
றெப்போது மாராய்ந் திதயத் தழுந்து நிஷ்டை
தப்பாத சற்போத சாதனமாச் சார்கவே.

576. உள்ளத்தே யுள்ளமா வுள்ள சொரூபத்தைத்
தெள்ளத்தாந் தேறிற் செருக்கான பாசபந்தக்
கள்ளமனக் கட்டறத்தாங் காணலாம் புத்தியைத்
தெள்ளிதா வுள்ளத்திற் சேர்க்கிலருள் வாய்க்குமே.

577. *புரத்திரய மோகமறப் பொன்றிடிலே சுத்தப்
பரத்துரிய மானசிவ பாவம் பலிக்கும்
சிரத்தையால் வஞ்சச் செருக்கறநா ளூரென்
றுரத்துணிவோ டோர்க்கிலுளத் தூண்மயக்கம்
[போமே.

* **புரத்திரயம்** - ஸ்தூல ஸூக்ஷ்ம **காரண சரீரங்கள்.**

578. தேகாத் தியாசச் செருக்கா வகத்துமுளேத்
தாகாத் தியஞ்செய் யகப்பே யறக்கெடஉள்
ளேகாக் கிரமாத்தேர்ந் தியானு ரெனத்தன்மெய்
*யோகாப் பியாச வுளவா லுறுகவே.

***யோகாப்பியாசம் - ஆன்மவிசார வடிவான ஞான யோகப் பயிற்சி.**

**68 வைராக்யம்**

**(குறள்)**

579. சொரூபமய மாகத் துலங்களவும் யாவும்
விரோதமே யாக விலக்கு.

580. உறவு பிறவற் றொழியளவுக் கேற்ப
அறிவுநிலே யாரு மகத்து.

581. யானற் றொழிந்தா லிதயத்தே சுத்தசிவந்
தானுற் றொளிருந் தழைத்து.

# II. உறுதி யுரைத்தல்

## 1. அகங்கார தோஷம்

(வெண்பா)

582. தொழக்கும் பிடத்தக்க சுத்த சொரூபப்
பழக்கமுற நாளும் பயிற்றிப்—பழிக்கவே
தக்கவகங் காரச் சதிகார மாயையினின்
றொக்கவுனைக் காத்துநீ யோம்பு.

(கொச்சகக் கலிப்பா)

583. கற்றிடினும் காயக் கிலேசத்தால் வற்றிமற்றெக்
குற்றங் களுந்தவிரக் கோடிதவஞ் செய்திடினும்
இற்றெனவொண் ணாத விருள்சே ரகங்காரக்
குற்றந் தவிரிலன்றிக் கூடாது சற்குணமே.

584. ஒன்றையிரண் டாக வுறமுமகப் பேய்மனத்தா
லன்றியில்லை யார்க்கு மனர்த்தமாம் பாசபந்தம்;
என்றுமொன் றாக வியல்சொருபத் தன்மையை [யோர்ந்
தொன்றிஞ லன்றியுளத் தோயா தனர்த்தமே.

585. சிவத்திலே தம்முண்மை தேர்ந்த மனத்தர்
அவத்தையை மெய்யென் றலமர மாட்டார்
பவத்திலே மாழ்கிப் பரிதபிக் கின்றோர்
அவத்த வுடலி லகந்தைகொண் டோரே.

586. நானற் றெழுந்தமெய்ஞ் ஞான சொரூபவருள்
வானத் துருவாக வைகும் பரமவுனம்
ஊனப் பழிசே ருடலுருவா வுற்றெழுபொய்ம்
மானக் களிசேர் மனத்தில் மலராதே.

587. உருவுதிண்ணி தாத்தோன் றுலகை அருட்சிற்
பரவெளிக்கூ ணாமற் பாதுகாக் கப்பாழ்ங்
கரவுசேர் மோகமனக் கற்பனைக்கே யல்லா
துரவலிசே ரும்பர்தம் மாலுமொண் ணாதே.

588. ஏனையுற வெல்லா மிகப்பினுமவ் வேற்றமுயிர்க்
கூனமனப் பாச வுறவொழிவின் காற்காலே
மான மயக்க மனமேகாந் கட்டன்றி
ஏனை யெதுவுமற்று வின்னுயிரைக் கட்டாதே.

## 2. அகந்தை யொழிவு

(குறள்)

589. அங்கமகம் புத்தி யகன்றால், விளங்கலுறும்
பங்கமில்பே ரின்பப் பரம்.

590. காண்டலரு சுத்தவருட் கைவல் லியந்துலங்கும்
மாண்டிடில்யா னென்னும் மயக்கு.

591. கோச வகந்தை குலையுமட்டும் பொன்றுது
பாச மயக்கப் படர்.

592. ஊன மயக்கமற்று வுள்ளம்பே ரின்பவருள்
வானமா வைகும் மலர்ந்து.

593. பதச்சீர்மை காணப் பரிந்தோ ரகந்தை
மதச்சார் பொழிக மனத்து.

594. எள்ளி யிகழ்ந்தொழிக யானெனன் றுடல்வடிவாத்
துள்ளு மகப்பேய்த் துடிப்பு.

595. துடிப்பற் றியல்பாத் துலங்கமைதி வாழ்விற்
கடைப்பிடிக்கை நல்லோர் கடன்.

596. யான்றேன் றளவு மிறைதோன்றுன், தோன்றுருவ
நாய்காணிற் கற்காணு வாறு.

குறிப்பு :—யான்றேன் றளவும் - யான் என்பது மெய்
யாகவே ஓர் முதலாகத் தோன்றிக்கொண்
டிருக்கும் வரையில்.

597. எனுதுநா னற்றால் இயன்றிடு வாழ்வே
சனுதன வுண்மைத் தவம்.

குறிப்பு :—யானற்றியல்வது தேரின் எனவரும் உபதேச
வுந்தியார் செய்யுள் 30 ஈண்டு ஒத்து நோக்
கத் தக்கது.

598. மருள்சே ரகந்தையற மாய்ந்தோர் மடுப்ப
*தருள்சேர் சொரூப வரசு.

* அருள்சேர் சொரூபம் - அறிவொளி வடிவான சொரூபம்.

599. படர்ந்த வகந்தைப் பகைப்பற் றெறிந்தோர்
கடந்த பராங்கதிகாண் பார்.

(வெண்பா)

600. பாசமன மானவகப் பாழறிவின் பாய்ச்சலறக்
கூர்சமநோக் கத்தாற் குணமன்றி—நீசமனக்
கற்பனைச்சுட் டானபுலக் காட்சிகளிற் சேர்விடமச்
சற்பனைநோக் காலனர்த்தந் தான்.

601. மோனப் பிரானுக்கு முட்டமுட்டக் கெட்டபகை
யூனவகங் காரமென வுய்த்துணர்ந்து—ஞானவருள்
வாழ்க்கையிலே நாட்டமுள்ள மாணடியார் நான்
றாழ்க்கையுறு துய்க வுளத்து. [முனைப்புற்

602. அகந்தை மயக்க மறத்தெளிந்து சாந்தி
திகழ்ந்தவனு பூதித் திறத்தே—அகந்துலங்க
அன்பே சிவமென் பதனுண்மை தேர்வதன்றி
வம்பா மயக்கமே மற்று.

603. மத்தவகங் கார மனத்தை யருட்பதத்துக்
குத்தமசற் பத்தியா லுணக்கிச்—சுத்த
சிவத்திலே தன்சொருபந் தேறளவும் பொல்லா
வவத்தைசேர் மோக மருது.

604. எந்தப் புலனுகர்வு மின்றியே தன்னியல்பாப்
புந்தியிலே யூறுசற் போதசுகம்—உந்து
மகந்தைமுனைப் பானபே யாட்டமறி லன்றி
யகந்தெளிவுற் றுர்த லரிது.

605. செத்தொழிதல் யானென்னுஞ் சீவபோ தச்செருக்
[குப்
பொய்த்தொழித லாகப் புலங்கொள்க—வித்தகமா
வாய்ந்தொளிருந் தன்சொருப வாழ்வியல்பா வவ்
மாய்ந்தொழியப் பெற்ற மனத்து. [வகந்தை

606. உளத்திலே நானற் றொழிந்தாலே யுண்மை
விளக்கமார் சாந்திநிலே மேவும்—களத்தியல்சேர்
ஆகமே நானென் றகங்கரிக்கு மந்தமதி
வேகமற மாய்தல் விதி.

607. பரமார்த்தந் தன்சொருபப் பார்வைசேர் சித்தத்
தரைமாத் திரையி லடங்கும் –பரமார்த்த
மோனவருட் பார்வை முகப்பவகப் பேயறிவா
மூனமறக் காண்க வுளத்து.

608. பூரணமா மோனவருட் போதமாப் பொங்குசுபச்
சீரணவ சாந்தி சிவலோகம்—காரணவு
பாழிற் படர்விகற்பப் பற்று மகமிதம்விட்
டாழக் கடவ தறிவு.

609. பொய்யகந்தை யான புணர்ப்பறவே மெய்யுணர்வு
மெய்யகந்தா னென்றுமுள வித்தகமே—கையகன்று
போனதன்று தன்சொருபம் பூரணமாங் கேவல
நானதென்று நானற் றொழுகு. [மெய்

610. நானென தன்மையற நல்ல சொரூபசிவந்
தானென தன்மை தலையெடுத்தால்—ஊன
மயற்பிறவித் துன்பமற வாழ்விற்கை வல்ய
வியற்பரம சாந்தி யெழும்.

611. உள்ளதன்றி மற்றொன் றுறுதியில்லை யாருயிருக்
குள்ளதே தன்மெய் யுருவாகும்—உள்ளதாந்
தன்சொருப சாதனையாற் றன்னையழித் தத்துவிதத்
தன்மயமா வாழ்தல் சதிர்.

612. கட்டியல்பாத் தான்கலங்குங் கற்பிதமாம் பொய்ம்
[முனைப்புக்
கெட்டியல்பா மோனங் கிளர்தலுறின்—கெட்ட
வகங்கார மூலத் தகமகமென் றுண்மை
முகங்காணும் பூரணமா மூண்டு

613. கர்த்தத் துவமழிந்த கண்ணே பரமார்த்த
புத்தத் துவசொருபம் பொங்கவாற்—செத்துக்
கடமை யுணர்ச்சி கழிந்தொழியும் மோன
திடமெய் யுணர்ச்சித் திறத்து.

614. குலைத்துத்தன் னுண்மையறக் கொட்டுமுயிர் வஞ்ச
மலத்தடையைப் போக்கிமனந் தூய்தாய்ப்—புலத்திற்
களிப்பதா மோகவகங் காரமறக் கெட்டால்
வளப்பமுறுந் தன்சொருப வாழ்வு.

615. ஜீவ னெடுக்கஞ் சிவமென் றறிவோடே
யாவ னகந்தை யிறந்தானே—தேவருங்கொண்
டாடிப் புகழ வருட்பரமே தன்னுருவாக்
கூடிப் பெறுவன் குலா.

616. சுட்டறிவுக் கெட்டத் துலங்காது சுட்டலறக்
கெட்டவிடந் தானக் கிளர்சொருபம்—நட்டமாப்
பொய்த்தவகங் காரப் புலத்திலருட் பூரணமா
மெய்த்தகவு வீறிட் டெழும்.

617. துயக்கிலகப் பட்டுச் சுழலுமகங் கார
மயக்கமறப் பெற்ற மனத்தே—நயக்க
வியக்கவொன் று மற்ற வெறுவெளியா முண்மை
உயிர்க்குறுதி யாக வுறும்.

618. நாயகமா வோங்குசிவ ஞான வொளிப்பிழம்பில்
மாயிகமாம் பேத வழக்கழியப்—பேயகந்தை
கண்மாய மாகக் கரந்தொழியிற் றுனதுவா
முண்மையே யுள்ள பொருள்.

619. நானெனுமப் பேயகந்தை நாசமே தன்சொருப
மோனவியற் பான்மையென்பர் மூதறிஞர்—
[ஊனவகப்
பேய்முனைப்பற் றேய்ந்தாற் பிறங்கு சொரூபவொளி
வாய்மனமே மோன வடிவு.

620. நானற்ற தன்மையே ஞானசொரு பானுபவ
மோனப் பதமென்பர் மூதறிஞர்—நானெனுமவ்
வூன மறக்கெட் டொழியிலன்றி ஞானதிட
மோனநடை யுற்ற லரிது.

621. பொய்யா முடலிற் பொருந்து மகந்தைமதி
யுய்யா துளத்தி லொழித்தலே—பொய்யாத
வுண்மைத் தியாகமா யோங்கும் பராவமுத
வண்மைசேர் வாழ்க்கை தரும்.

622. பாகமிலாத் தன்சொருபப் பாரமியம் பாழ்படப்
யாகமே நானென் றகங்கரிக்கும்—போகச் [பொய்
செருக்கற் றியல்சாந்தர் தெய்வ வொளிபெற்
றருக்கராய் நீடுவாழ் வார்.

623. வல்லாங்கு மற்றையார் வைதெழினுங் கைதொழி
புல்லாது தன்பாற் பொருளன்றும்—பொல்லா [னும்
வகந்தை முனைப் பான வகப்பேய் தனைவிட்
டிகந்தொழியப் பெற்ற விடத்து.

624. ஊனமில்சற் போத வொளிவெளியாந் தன்னை
தூனவுட லாக வுறழ்மதியால்—யானெனுமம் [மறந்
முட்டுப்பா டான முனைப்பொழியிற் பாசபந்தக்
கட்டுப்பா டற்றொழியுங் காண்.

625. அகண்டமா மோன வருட்பரமா மூலத்
தகந்தை மடங்கி யழிந்தால்—அகந்தை
யறப்பெற்ற சித்த மமுத சொருபச்
சிறப்புற்று வாழுந் தெளிந்து.

626. அகந்தைத் தியாக மகிலத் தியாகம்
அகந்தையின் றி யில்லை யகிலம்—அகந்தைமதி
தன்னுண்மை யாயிற் றலைகரக்கும் மெய்யுணர்விற்
பின்னொன்று மில்லை விடற்கு.

627. அகந்தைமுனைப் பான வகப்பேய் தனைவிட்
டிகந்தொழிய வேண்டு மெவரும்—முகந்து
பரம்பொருளாந் தன்சொருப பாவனையே தம்முள்
விரும்பி யியற்றல் விதி.

628. அகல வயர்த்த லறிவுருவாந் தன்னை
யிகலும் பிரமாத மென்பர்—அகமா
மறிவு விளங்க வகந்தைமூ லத்திற்
செறிவே சிவோகத் திறன்.

629. அடைக்கலமாத் தன்னை யருட்பதத்திற் சேர்த்தா
லடக்க வொடுக்க வறிவால்—மடுக்கலாம்
மோகவகங் கார முனைப்பற் றொளிர்சொருப
போகமார் சாந்திப் புலம்.

குறிப்பு :—அறிவாற் சேர்த்தால் எனக் கூட்டுக.

630. அபிமான மோகபந்த மற்றொழியின் மிக்க
சுபமான முத்திசுகந் துன்றும்—விபுவான
சுத்தத் துரீய சொரூபவருட் கைவல்யப்
புத்தமுதந் தானைப் பொலிந்து.

631. அருட்கே வலத்தா டமுந்தளவுக் கேற்ப
மருட்கே வலமயக்கம் மாறும்—அருட்கே
மொளியார்ந்தூ சித்த முருமாய்ந்து சுத்த
வெளியாந் திகழ்ச்சி பெறும்.

632. அனியாய மாம்பொய் யகந்தை யழிந்தாற்
பினையாது மில்லை பெறவே—முனையா
தகந்தைகெட்ட மூலத் தகம்பிரம்ம மாக
முகந்தொளிரும் முத்தி முதல்.

633. ஈன மறதியினின் றேய்ந்த கனத்தோற்றத்
தூன வுடலோ டுறுபுலத்தை—நானெனதென்
றெண்ணுமன மான விதப்பகைசெற் றுருளத்து
நண்ணுமொளி முத்தி நலன்.

634. திரும்பத் திரும்பநான் பாடுந் திருப்பாட்
டரும்புமகப் பேயை யழிப்பே—விரும்பவுயிர்
தக்கபெரும் பேறு சதானந்த மாகமனஞ்
சொக்குசொரூ பானுபவங் காண்.

635. சித்தக் கலக்கமறத் தீர்ந்தொளிர்சாந் தானுபவ
பத்திக் கிளர்ச்சி *பதைப்பறலே—மத்தப்
பழிசே ரகந்தை பரமன் பதத்திற்
கழிதல் சரணு கதி.

* பதைப்பு - ஜீவபோதச் சேஷ்டை, பதைப்பறலே பத்திக் கிளர்ச்சி என்பதாம்.

(கொச்சகக் கலிப்பா)

636. தானேதா னைகத் தழைத்தசொந்தத் தத்துவம்விட்
டேனோதான் யானென் றெழுந்துடலாத் தான
[ழுங்கல்
ஊனேதான் போல வுருத்தவகப் பேய்மனத்தை
யானுரென் றுய்ந்தாய்ந் திதயத் தழித்திடே.

637. மோனக்கை வல்லியமா முத்திநிலை நானெனும்பா
மூனக் களிசே ருடலகந்தை யோயிலன்றி
வானக் கடவுளர்க்கும் வாய்க்க வொணுமையால்
யானெனுமப் பேய்பூணைப்பை எத்திறத்து மெற்று
[கவே.

638 உள்ளவொணுப் பேரின்ப வோகை விளைத்தலால்
தெள்ளியமெய்ஞ் ஞானத் திறம்போல மன்னுயிருக்
கொள்ளியதோர் பேறெவ் வுலகத்துங் கண்டிலேம்
உள்ளக் கலக்கமற வுண்மையுணர் வெய்துகவே.

639. அற்றமே தன்னுருவா வாங்கியன்ற மோகவகப்
பற்றே முளையாகும் பற்றுக் களுக்கெல்லாம்;
பற்றறுக்க லுற்றோரெப் பாடுபட்டே னுங்கவனித்
தற்றமா மோக வகப்பற் றகற்றுகவே.

640. மன்ற நிரம்பியசிந் மாத்திரமாந் தன்சொருப
நன்றென் றல் சுத்தசிவ ஞானப் பரமுத்தி
என்றென் றறிந்தியா னென்னுஞ் சிதாபாசம்
பொன்றவே கொன்றுபரி பூரணவாழ் வெய்துகவே.

641. தனுகரண மோகந் தணவாதார் உள்ளத்
தனுபவமா மோன வருள்வாழ்வு சேரார்;
எனதுகளெல் லாமொன்று வெய்ந்தவகங் கார
மனதழிய வேண்டும் வரகதிசேர் வார்க்கே

642. கம்பீர ஜன்னிக் கடுட்பா மகந்தைழுனைப்
பெய்பா திதயத் திறந்தொழியில் வாழ்வுசிவ
சம்பூரணமாத் தழைத்தொளிரும், மிகக சுபச்
செம்பாக மாகவொளிர் சித்தத் தெளிவாலே.

குறிப்பு :—கம்பீர ஜன்னி அதிகார ஜன்னி எனவும் வழங்கும்; எம்பல் - எழும்பல் என்பதன் திரிபு. கம்பீர ஜன்னி ..... இறந்தொழிதல் என்றது நானுதியாத் தன்னிழப்பு நிலையை; செம்பாகம் - செவ்விய பரிபாகம்; ஆக வொளிர் - 'ஆகவியல்' எனவும் பாடம்.

643. பிறவாமை வேண்டும்; பிறந்தாலுந் தன்னை
மறவாமை வேண்டும்; *மறப்பே யிறப்பாம்;
இறவாமை வேண்டுவோ ரெவ்வாற்று னேனும்
*மறவான மத்தமனம் மாய்த்தல் கடனே.

* மறப்பு, மறவு - பிரமாதம்

644. வீண்பெருமை கொண்டு விசைத்தெழுந்து வீழாதீர்
காண்பறியா *மேலோர் கதைநீ ரறிவீரே
மாண்பதவாழ் வான மகத்துவஞ்சேர் தன்னி
[யலைக்
காண்பவரார் கர்த்த னருட்கண்காட் டாவிடிலே.

* மேலோர் - பிரம்ம விஷ்ணுக்கள்.

645. அன்றியொன் றில்லா வருட்பரமாந் தன்னியலைக்
கன்றி யெழுந்தவகங் காரந்தன் மூலத்திற்
பொன்றவெழு சுத்தவருட் போதத்தா லன்றியறிந்
தொன்ற வொண்ணமையா லூனமுனைப் போய்கவே.

குறிப்பு :—தன்னியலை அறிந்தொன்ற என வியையும்.

646. ஈண்டும் மயக்க விருட்பா முகந்தை மதி,
பூண்டு கடைப்பிடித்த பூர்வசிவ புண்ணியத்தால்
ஆண்டான் சொரூப வருட்பெருஞ்சோ திப்பிழம்பில்
மாண்டா ருயிர்ப்பர் மரியார் பிறவாரே.

குறிப்பு :—அகந்தை மதி மாண்டார் என வியையும்.

647. கவுத்துவமாம் பாசமனக் கற்பனையி னின்று
விவத்தைசே ருண்மை விளக்கமாத் தூன்று
சிவத்திலே வாழ்வு தினைக்கவிருப் புற்றோர்
அவத்தமா மோக வகந்தையறுப் பாரே.

குறிப்பு :—அகந்தையறுக்க வேண்டுமென்று கருத்து;
கவுத்துவம் - வஞ்சகம்.

648. மற்றவற்றைப் பற்றும் மறப்பா மகந்தைமுனைப்
பற்றொழியு மட்டுமந்தத் தொற்றற் றொழியவகத்
தற்றமற்ற சுத்தவறி வானவருட் பெம்மானைக்
கற்றொழுக வேண்டுங் கணக்கை மறவீரே.

குறிப்பு :—மறப்பு - பிரமாதம்; கணக்கு - கருமம்,
காரியம்.

649. மோனவியல் வாழ்வகத்து மூண்டெழுந்தா லன்றி
றேனையயல் வாழ்வுகளா லின்பமில்லை யாதலால் [மற்
ஊனமனப் பாச வுறவுகளோ டொட்டொழிந்து
நாளெனும்பொய்ம் மோக நசைப்பசைபைக்
[கொல்லுதிரே.

குறிப்பு :—அயல் வாழ்வுகள் என்றது உலகியலிற்
பதினாறு பேறும் பெற்று வாழ்கின்ற பல
வகைப் பெருவாழ்வுகளை என்க.

650. மோனவருள் வாறு முயங்குணர்வே யுள்ளத்துத்
தானவிர்சற் போத சமாதியின்சால் பாதலால்
ஊன வுடல்வடிவா நானென் றுருத்தெழா
தீனவகப் பேயுணர்வை யெற்றீ ரிதயத்தே.

651. அரந்தைசேர் மோக வகப்பாழை யாய்ந்தாய்ந்
திருந்தொளிர்தம் முண்மைநிலை யெய்தலுற்று
[ருள்ளம்
பரந்தியல்பே ரின்பப் பரவெளியா மென்னிற்
பரந்துநா னென்னுமகப் பாழ்கெடுத்தல் வீடே.

குறிப்பு :—பாழ்கெடுத்தலை வீடு என ஏகாரம் மாற்றிக் கொள்க

652. தத்துவஞா னத்தாற் சதிர்த்தலுற்ற சுத்தவருள்
வித்தகர்பா லுண்மை விசாரித் தறிந்திதய
தத்தகவே சார்ந்தநிஷ் டானுப வத் தாலகந்தை
செத்தொழிந்த வாழ்வேகாண் ஜீவன்முத் தித்திற
[மே.

653. இதுநா னதுநா னெனுமகந்தை யின்றிப்
பொதுவா விருந்தொளிர்தற் பூரணமா தோன்றுண்
டதுவேதா னுக வறியிலன்றி யுள்ளத்
தெதனுலு மில்லையுயிர்க் கேதமில்பே ரின்பே.

654. வேறுவே றுக மினுக்கும் *புடியறிவு
தாறுமா றுனமனச் சஞ்சலப்பாழ் மோகமே;
தேறுவா ஞெனத்தன் சிச்சடப்பாழ் போகமறில்
வேறுபா டற்று விளங்கும் பரவியலே

* புடியறிவு - திரிபுடி ஞானம்.

655. அகந்தையை வென்றுன் அகிலமும் வென்றுன்
இகன்றவனை வெல்வதோர் *ஏணெங்கு மில்லை
அகந்தைகூ ராசை யகன்றோர் உலகை
முகந்துபொரு ளாகத்தம் மூச்சுமுட் டாரே

* ஏண் - வலிமை.

656. மந்த மயக்கமா னுபிமா னங்களாற்
சிந்தைக் கிலேசமும் புந்திக் கிலேசமுஞ்செய்
அந்த வகந்தைமுனைப் பற்றுற் சிவமயமாச்
சொந்த சொரூபானு பூதி துலங்குமே.

657. அறிவை யலட்சியஞ்செய் தன்னியமே தேரும்
வெறிசே ரகங்கார வேகமுனைப் பற்றால்
அறிவான சுத்த வருட்கேவ லான்மா
நிறைவா விளங்கும்மெய்ஞ் ஞேயமாத் தானே.

658. விலையிலா மாணிக்க மெய்ப்பொருளுக் கற்ப
விலையாகத் தம்மையே விட்டளிக்கி லன்றி
அலையிலா மோன வருள்வெளியாம் பார
நிலையான நுட்பவொட்ப ஞேயந்தோன் றுதே.

6-9. ஏனை யெதனாலும் யாராலுங் கொள்ளரிய
மோனஞா னானுபவ முத்திப் பெரும்பயனுக்
கானவிலை வீண்பா முகந்தையபி மானமென்
றானமறக் கைவிட் டுயக்கடவர் நல்லோரே.

660. இருந்தா னிதயத் தெனுதியல்பாத் தேற
விரிந்த சொரூப வெளியான மெய்யன்
தெரிந்தடைய வொண்ணுன் சிவாயநம வென்னப்
பிரிந்தொழியி லன்றியகப் பேய்முனைப்பை விட்டே.

661. தானு விளங்குசிவ தற்பரத்திற் கற்பனையா
யானென் றெழுந் தழுனைப் பிற்றெழிந்தா லன்றிஅருள்
வானு வியல்சொருப மாட்சிசேர் காட்சியுறார்;
மோனனு பூதி முகத்தல்கை வல்லியமே.

662. ஆகாயத் துள்ளே அதிநுட்ப மானபர
மாகாய மாக வமைந்தசிவ மேஅகந்தோ
றேகான்மா வாக வியல்சுயஞா னானுபவம்
தேகான்ம மோகச் செருக்கற்று லன்றியின்றே.

663. அறிவொளிசேர் சுத்த வருட்கே வலத்தில்
வெறுவெளியா வுண்மை விளங்கநா னென்னும்
குறிகுணஞ்சேர் மோகங் குலையிலன்றிக் கூடார்
மறிவறியாக் கைவல்ய மாட்சிசேர் வீடே.

664. சுத்தவறி வான சொருபத்திற் கற்பிதப்பொய்ம்
மத்தவறி வான மனுேமயமாஞ் சீவவகம்
வித்தகமெய்ஞ் ஞான விசாரத்தாற் பொன்றிலன்றி
நித்தமா முண்மை நிறைவான சாந்தியின்றே.

665. உளங்கலந்த வூக்தையகப் பேய்முனைப்பற் றேய
விளங்கிலன்றித் தன்மெய் விசுத்தப் பரத்தில்
துளங்குமனக் கற்பனு சொப்பனவாழ் வான
களங்கமாஞ் சித்தக் கலக்க மருதே.

666. சிவத்தினின்று வேருத் தெருமந்து மாயா
பவத்திலுழல் ஜீவர் பரபத்தி யுண்டாய்ச்
சிவத்துக்கூ ஞகவுயிர் செத்தொழிந்தா லன்றிச்
சிவத்துவஞா னுபவச் சீர்மை யுருரே

667. உள்ளதை யுள்ளவா றுள்ளுணர்வா லுள்ளத்தே
தெள்ளிதாத் தேர்ந்து செருக்கற் ருெழியிலன்றித்
துள்ளுமன மற்ற சொரூபவியற் பேரின்ப
வெள்ளவெளி யான விமுத்திநிலை சேர்வரிதே.

668. உண்மையள வாந்தன் †மெய் யுண்மைக்கண் யானெனும்பொய்த்
திண்மைசேர் மோகச் *செருக்கழியக் காணி
தண்மைசேர் சாந்தியாற் ருபத் திரயந்தீர் [என்றித்
வண்மைசேர் சுத்தவியல் வாழ்வுயிர்க்கு வாய்க்காதே.

† மெய்யுண்மை - பாரமார்த்திக ஸத்யம்.
* செருக்கழியக் காண்டல் - 'யாளுர்' என்னும் ஆன்ம விசாரத்தால் என்க.

669. உள்ளத் துணர்வொளியா வுள்ள சொரூபத்தில்
ஒள்ளழலிற் கற்பூர வுண்டைபோல் யானெனும் [பொய்க்
கள்ளமனம் பொன்றக் கரைந்தொழிய க் காண
பிள்ளரிய சுத்தப் பிரம்மானு பூதியின்றே. [லன்றிப்

670. உற்பாத மாகவுளத் துற்ற வகங்காரத்
தற்போத மோகத் தடையற் ருெழியளவும்
எப்போது முள்ள வியல்பாஞ் சுயசொருப
சற்போத வாழ்வு தலைப்பட் டொளிராதே.

671. ஆடகப்பேய் சாயத் திருவருள்வல் லாண்மையாற்
சாடி யடர்த்த சமர்த்தரே காணவல்லார்
கேடிலா வுண்மையாற் கிஞ்சிலுந்தாஞ் சஞ்சலமற்
நீடிலா வாழ்வா மிதயசாம் ராச்சியமே.

672. பொய்யும் புரட்டும் பொதிந்தமனக் கற்பனைதீர்
ஐயன் பதத்தில் அகந்தையபி மானமற்ற
மெய்யன் புணர்வே விசுத்தப்பே ரின்பமுத்தி;
செய்யும் பரிசு செருக்கற் றெழிவே.

### 3. அகங்காரம் பொய்

(வெண்பா)

673. உள்ளமே தானு வொளிவளர்பே ரின்பவருள்
வெள்ளமா மோன வியாபகத்தில்—கள்ளமுறு
மோகவகங் கார முனைப்பே விசித்திரப்பொய்ம்
மோகமது முக்காலும் பொய்.

### 4. அக மகம்

674. சுகமாம் பிரம்ம சொரூபமே தானு
வகமகமென் றுரு மகத்தே—அகமுகமாய்
அந்த வகப்பொருளை யாய்ந்தறிவோர் வாய்ந்திடுவர்
சொந்த சொரூப சுகம்.

675. ஊனு ருடலோ டொருப்பட்ட பொய்யகந்தை
மானுபி மான மயக்கமற—நானு
னெனவே தியானித் திருந்தாலுந் தன்மெய்
யனுபூதி கூட்டு மது.

### 5. அகமுகம்

(குறள்)

676. அகமுகநாட் டங்கூ ரறிவால் மனத்தின்
செகமுகநாட் டக்கலக்கந் தீர்.

### 6 அக விசாரம்

677. மூலமா வுள்ள முதற்செம் பொருளையகத்
தேலவே தேடி யடை.

### 7. அக வறிவே பரம்

678\. இதுவதுவென் றெண்ண மிடாதீர் இதயத்
ததுவகமொன் ஞம்வெற் றறிவு.

(கொச்சகக் கலிப்பா)

679\. இங்குக்கு மிங்கா மிதயத்திற் சிந்தையொன்றித்
தூங்க சொரூபமாத் தோய்ந்திடத்தாங் காணிலன்றி
எங்குமுறை கின்ற விறைவனைமற் றுள்ளபடி
யெங்ஙகவர்தா மெவ்வா றெதிர்படக்காண் கிற்பாரே.

### 8. அகத்திலழுந்தல்

(வெண்பா)

680\. அழுந்த வழுந்த வகத்தூடு தம்மை
யிழந்தொழிவ தாலே யிறைக்குக்—குழந்தைபா
லீன்றெடுத்த நற்ரு யினும்பரிவுண் டாகலால்
ஆன்றவருட் செல்வ ரவர்.

### 9. அடங்கலொடுங்கல்

681\. ஒடுங்க வொடுங்கவுளத் துள்ளுணர்வா மோன
திடங்கெழுவாழ் வான சிவத்தே—அடங்குமனப்
பெற்றியா லின்பப் பெருமிதஞ்சேர் சாந்தியுறப்
பெற்ரு ருறுதி பெற்ருர்.

(கொச்சகக் கலிப்பா)

682\. ஒன்றுமல் லாதவொன் றுள்ளத் தொருதானு
மன்ற மலர்ந்தொளிரு மட்டும் முறையாக
ஒன்றின்மற் றொன்றை யொடுக்கி யகத்தைமுனைப்
பென்றுமின் ருக விதயத் தியல்கவே.

### 10. அடியார்க்குக் கவலையின்று

(குறள்)

683\. ஆண்டா னருளை யவாவலுற்ற மெய்யன்பர்
வேண்டார் மனத்தாற் பிறிது.

684. குருகடாட் சத்தாற் குலவுசுப ஞானத்
திருவுளார்ச் சேர்ந்தொழுகல் சீர்.

685. யாரே யெனினு மிறைவனடிக் கன்புசெய்வோர்
சீரே சிறந்த துலகு.

(வெண்பா)

686. இன்பவருள் வள்ளலா மெம்பிரான் நன்னடியர்
துன்பமன வாதையாற் சோர்தலிலர்—அன்பு
நெறிக்கொண்டு தன்னை நினைந்தாரை முற்றக்
குறிக்கொண்டு காக்குங் குரு.

687. கள்ளமனம் பொன்றக் கரைந்தொழியத் தானேசா
னுள்ளபொரு ளாக வுளத்திலே—உள்ளொளிமேன்
மேற்பெருக்க வூற்றவென் மெய்யப்பன் ஞானவருட்
காப்பிருக்க வேறே கவல்.

688. சமணமா காத சமுசாரத் தீச்சே
ரமணமாம் பாழுலகை யஞ்சி—ரபண
வழகனைப்போய்ச் சேர்ந்தா ரவனருளால் வாழ்ந்
தழலுமுத் தாபந் தணிந்து. [தார்

689. கரும மயக்கங் கழன்ற கருத்தால்
உரம்படுமெய் யன்புணர்ச்சி யோங்கப்—பரமனருட்
பாதமூ லத்திற் பயின்றொழுகும் பத்தியோர்க்
கேதமெஞ் ஞான்று மிலை.

690. ஏதுக்குச் சிந்தை யிறைவன்பே ரின்பவரு
ளாதிக்கத் தின்கீ ழடைந்தவர்க்கு—நீர்துக்கஞ்
சற்று முறுதீர் சதாகதியாத் தானுமக்கு
முற்றுமுளான் மோன முதல்.

691. ஆண்டவனுக் கன்றி யடிமைத் திறம்பிறர்க்குப்
பூண்டொழுகு வாழ்க்கைமிகப் பொல்லாதே—
குருபதத்து நீளக் குறிக்கொண்ட பத்தி [ஆண்ட
யொருவிதத்தும் பேரே றுளத்து.

## 11. அடியாரிணக்கம்

692. மனங்கனிந்து சுத்தசிவ மாண்பதத்தில் வாழ்வோ
ரினங்கலந்து வாழ்தலே யின்பம்—மனங்கழன்று
பாமரரா மிவ்வுலகப் பண்டிதர்தம் பக்கலிருந்
தேமவடி யாரோ டிணங்கு.

## 12. அத்துவிதம்

(குறள்)

693. வேறுவே றாகப் பிதிர்வுற்றாற் போல்பவெலாம்
தேறுகவோர் பின்னமில்சச் சித்து.

குறிப்பு —தேறுக..... சித்து - பின்னமில்லாத ஒரேசச்
சித்தாகத் தேறுக.

(வெண்பா)

694. இருவேறு பேத மிலையான வுண்மை
யுருவேதா ஞன வுணர்வாற்—கருவா
மவிச்சைதீர் வாழ்க்கையே யாருயிர்க்கு மிக்க
சுவச்சமாத் துன்று சுகம்.

(கொச்சகக் கலிப்பா)

695. வெருவுமா பாச விகற்பங் கரக்க
மருவுமோ ரத்துவித மாட்சிசே ரான்ம
சொருபவாழ் வான சுவானுபவங் கூறிற்
றொருவனு னென்னு முயர்திருவெண் பாவே.

குறிப்பு :—"ஒருவனு னெற்குரியன் ...." என்னும்
தேவிகாலோத்தரத்தின் 49வது செய்யுள்;
சுவானுபவம் - சுவானுபவத்தை.

## 13. அது நீ

(குறள்)

696. கட்டுப்பட் டாற்போற் கலங்காதே, நீயென்றுங்
கட்டுப் படாதபரங் காண்.

697. யாதோ ரதிசயமு மில்லை யிதயத்து
நீதோய்ந் தறிதியது நீ.

## 14 அருட்பதப் பற்று

(வெண்பா)

698. அருட்பதமே யின்பமுற வன்பரது சிந்தைக்
கிருப்பிடமா வுள்ள வியைபால்—அருட்பதத்தைச்
சற்றே நழுவிடினுந் தட்டுளுப்புப் பட்டுலகிற்
சுற்றிச் சுழலுங் கருத்து.

## 15 அருட்சிற் பதம்

(குறள்)

699. துன்றக் கடவ சொரூபவருட் பார்வையே
யன்றிமற் றில்லை யரண்.

(கொச்சகக் கலிப்பா)

700. மருட்சிக் கலக்கமற மாற்றலுற் றுருக்
கருட்சிற் பதம்போ லரணைத் தக்க
விரட்சிப்பெங் கெங்கெங்கு மில்லவே யில்லை;
இருட்சிப் புலந்தீ ரிதயந்தே ரீரே.

## 16. அருட்போகமே போகம்

(குறள்)

701. புணரக் கடவதருட் போகமன்றி யைவா
யுணர்வின் புலங்க ளல.

## 17. அருட்பார்வை

(வெண்பா)

702. தான்றானு நின்றொளிருந் தற்பரத்தே சொப்பனத்து
டேன்றானே நீகலங்கி யேங்குகின்றாய்—தோன்ற
விருப்பாக வுள்ள வியற்பதத்தை மோன
வருட்பார்வை யாலே யறி.

## 18. அருட்போதம்

(குறள்)

703. மருள்சே ரகந்தை மனக்கலக்கம் மாறு
தருள்விளங்கி லன்றி யகத்து.

(கொச்சகக் கலிப்பா)

704. மித்தைசேர் மோக விகற்பங் களினகன்று
புத்தியிலே சுத்தவருட் போதந் துலங்கக்காண்;
வித்தகவாழ் வாக விளங்குசிவக் கைவல்யம்
புத்தியிலே சேர்ந்தொளிர்சற் போதானு பூதியே.

## 19. அறிவே வழிபாடு

(வெண்பா)

705. சுத்த வறிவே தொழுந்தெய்வம் கற்பனைதீர்
சுத்த வறிவே தொழுவோனும்—தத்துவமார்
சுத்த வறிவே தொழுகையுமா வொன்றலுற்ற
இத்தகவே பத்தி யியல்.

## 20 அறிவறிதல்

(குறள்)

706. அறிவான சுத்தமே யல்லால் அதனிற்
பிறிதா மனைத்தும் பிழை.

707. *அறிவறிவ தூண்மை யறிவலா தேனைப்
பிறவறிவ தூனப் பிழை.

* அறிவறிவது - அறிவை யறிவது.

708. அறிவுருவே யத்துவித வுண்மையாப் போற்றிப்
பிறவனைத்து மாயமாப் பேர்.

709. தூய்தா வறிவு துலங்கில் இதுவதுவென்
றுய்தரவொன் றில்லை யயல்.

710. அயல்கா ணறிவு மயலென்பர்; சொந்த
வியல்கா ணறிவே யறிவு.

711. வேற்றுமையாங் கற்பனையை வீடக்காண் மெய்யறி
தேற்றமே சீர்த்த தவம். [வுத்

712. சீர்த்ததவ மாகச் செழித்தொளிர்சற் பத்தியாக்
கூர்த்ததுமெய்ஞ் ஞானக் குலா.

713. குலாவா விளங்கு சிவக் கோமான் பதந்தண்
ணிலாவா மகிழ்ந்ததென் னெஞ்சு.

714. நெஞ்சமே யாக நிலாவு சொரூபவருள்
விஞ்சையால் வீடுபடைத் தேன்.

715. காண்பானை யன்றியில்லைக் காணப் படுமுலகு
காண்பானைக் காண்ட லறிவு.

(வெண்பா)

716. மோன வறிவே முழுமுதற்பே ருண்மையறி
வானவனு பூதி யடைந்திடிலோ—ஏனையபல்
பேதவறி வெல்லாம் பிரமாதக் கற்பனையாச்
சேர்தவறு முற்ற வுடைத்து.

குறிப்பு :—ஏனையபல் பேதவறிவெல்லாம் - பல திறப்
பட்ட பேதவறிவான மற்றனைத்தும்.

(கொச்சகக் கலிப்பா)

717. அறிவை யறிந்தவ் வறிவா வியல்வார்க்
கறிவினும்வே றூக வடைவொன்று மில்லை;
அறிவே முடிந்தபர மார்த்தமென் றோர்வால்
அறிவையே பற்றி யயற்கட் டறீரே.

## 21. அன்பே சிவம்

718. அறிவு *துலங்கி லனைத்துந் துலங்கும்;
அறிவு கலங்கி லனைத்துங் கலங்கும்;
அறிவே யகிலமென் றுய்ந்தறிந் தோரவ்
வறிவையே யன்றி யகலந்தே ராரே.

* துலங்கல் - விளங்கல்.

719. அன்பே யனுபூதி யாக வடங்கிளர்மெய்
யன்பிற் றிளைத்தலால் ஆசாபா சக்கறைதீ
ரன்புசிவ மாக வமர்ந்திருத்த லன்றிமற்
றன்பே சிவமென் றலற்றலா லென்பயனே.

## 22. ஆசை யறல்

(குறள்)

720. அளைந்த வளர்த்தப்பா ழாசைகளை முற்றக்
களைந்தோ ருளைந்திடார் காண்.

721. சிட்டியை விட்டுத் திரும்பியகத் துண்மையுணர்ந்
துட்டுறவு பூண்க வுளத்து.

## 23. ஆன்மக் கல்வி

722. கடவுளையே கற்குங் கருத்தர் படர்வறும்பா
சாடவியிற் கண்கலங் கார்.

723. அற்றமறக் கூர்த்திதயத் தான்ம சொரூபவுண்மை
உற்றறியத் தக்க துயிர்க்கு.

## 24. ஆன்ம சாக்ஷாற்காரம்

724. இயல்பாக வுள்ளா னிறைவ னிதயத்
தயலற் றவனை யறி.

725. தன்னுண்மை யாதெனமுற் றுன்றேர்ந் தடைந்
பின்னொன்று மில்லை பெறற்கு. [திடிலோ

726. யானறக்கெட் டுள்ளத் தியற்சிற் பரவுருவாத்
தானொளிரக் காண்டல் சதிர்.

## 25. ஆண்டவன் யார்?

727. தன்னையெவ் வாறுசாட் சாற்கரித்தா னாண்டவன்
றன்னவாற் றுலவனை நோக்கு. [மற்

குறிப்பு :—ஆண்டவனை அறிவுருவான அமலான்ம சொரூபமாக நோக்கவேண்டு மென்பதாம்

728. உன்னை நீ யான்மாவா வோர்த்துணர்ந்தா லன்றி
றன்னவனை நோக்க லரிது, [யவ்வா

## 26. ஆண்டவன் வழிபாடு

(வெண்பா)

729. புங்கவனைப் போற்றுசிவ புண்ணியமே யாருயிர்க்குத்
தங்கவருட் பாக்கியமாத் தோய்தலால் -பங்கமுறு
பாழ்மயக்க மானவகப் பற்றுவிட்டுச் சிற்சொருப
வாழ்வகத்து மன்னும் மலர்ந்து.

(கொச்சகக் கலிப்பா)

730. ஞாலத் துளார்க்கு நவில்வதோர் நல்லுறுதி
ஏலக் கடைத்தேற வெண்ணிற் கருத்தொன்றி
ஓலமிட்டாற் போது முடையானுக் குள்ளத்தே
வாலறிவா வந்து வழங்குவா னின்னருளே.

731. கண்டார்வெம் பாவக் கலிகடியுங் கூரருட்கண்
உண்டால் உயிர்த்தொகையை யுய்யக்கொண் [டீடேற்ற;
மண்டார்வங் கொண்டு வழிபா டியற்றில்உமக்
கண்டா வருட்பரவீட் டாட்சிகை கூடுமே.

732. தரும தயாநிதியாத் தங்கு சொரூபப்
பரம பரம்பரனைப் பாதம் பணிவோர்
ஒருமைசே ருண்மை யுணர்வா லுறுவார்
கருமமயக் கங்கழலக் கைவல்ய மாண்பே.

733. சுவத்தமா மோன சொரூபநிலை தானே
சிவத்துவமாத் தேறத்தற் சேர்ந்தோ ருளத்தில்
அயத்தனமாக் கூட்டுமென் னுண்டவன்சற் பத்தி
தவத்திறத்தா லன்றித் தலைப்படுமா றின்றே.

734. அகத்திலே யுள்ள வருட்செம் பதங்கண்
டுகத்தலுறத் தேற்றினு னுள்ளுணர்வா யுள்ளோன்
இகத்திற் பரத்தை யிலக்கியமென் னுண்டான்
முகத்திற் பயின்றவர்தம் மோகங் கெடுமே.

## 27. ஆதார வுண்மையையே பற்றுக

(வெண்பா)

735. நிருவிகற்ப வுண்மை நிலையடைய வேண்டில்
பொருவிகற்பச் சொற்பொருள்கள் போக—மருவு
மெழுத்தக் களுக்கடியா வேய்ந்தவொரே தாளை
யமுத்தமாப் பற்ற லடைவு.

**குறிப்பு :—தாள் - காகிதம்; அது போன்றதே திருவடி யின் உண்மையாக அறிக.**

## 28. ஆண்டவன் பாதத்திற் சரணடைக

736. குருரமணன் பாதங் குறிக்கொண்டு பற்றி
யிருமனமே சும்மா விருக்கில்—தருமவருட்
செல்வப் பதமே சிவலோகப் பேரரசு
நல்கு முயிர்க்கு நயந்து.

737. ஆவலித்துச் சிந்தை யமுங்கவொழிந் தாண்டவன் [ருட்
காவலில்வந் தன்புகலந் தாட்படுங்கள்—தேவருந்தா
முள்ளலரு மோன வொளிபெருகுஞ் சீரமண
வள்ளலுக்காட் பட்டார் மனம்.

738. சரணடைந்து வாழத் தலைப்பட்ட மக்கட்
கிரணமொன்று மில்லை யெனவே—சரணமொன்றி
யெல்லா விதத்து மிறைவனருட் செம்பதமே
நல்லோர் கடைப்பிடிக்க நன்று.

739. சுகந்ததும்ப நின்று துலங்குவாய் நெஞ்சே
முகர்ந்ததுன்ப மெல்லா முசித்தே—அகந்தையற
மாண்டா ரகத்தசல மாநடஞ்செய் வேங்கடப்பே
ராண்டா னருளை யறி.

740. சேற்றிலுழன் றேங்காது சித்தந் தெளிந்துநல்
லாற்றிற் படர்த லறிவுடைமை—தேற்றமாம்
புக்கித் திறமுயிர்க்குப் புக்கிலா வாண்டவனருட்
பத்திநலம் பேணல் பரிந்து.

741. எம்பிரா னை யிறைவன் குருரமணைத்
தம்பிரான் ருளே சகமாக—நம்பினேற்
காரிருளாம் பாழைக் கடந்த பராற்பரமாம்
பேரொளிசேர் வாழ்க்கை பெரிது.

பெரிதுண்டாம் என எச்சச்சொல் வருவிக்க.

### 29. ஆன்மாவில் ஒன்றுக

742. யானிதுவென் றெண்ணலா லின்னென்றுங் கற்
[பிதத்திற்
ருனென்றித் தன்மெய் தடுமாரு—தேனே
யனைத்துக்கும் மூலஞா னென்மசொரூ பத்திற்
றனித்தொளிர்க தான்ருனத் தான்.

குறிப்பு :—இன்னென்றுங் கற்பிதத்தில் - தன்னிற் கற்பிதமான மற்றென்றில்.

### 30. ஆன்மாவோடு உறவு கொள்

743. மறவா நினைவோர் மனத்திற் பிரியா
வுறவாக வுள்ளா னுடையான்—†சிறவாப்
பிறவற்றி னின்று பிரிந்து சொரூப
வுறவிற் பயில்க வுணர்வு.

†சிறவா - சிறப்பற்ற

### 31. இதயம் சேர்தல்

(குறள்)

744. சீரான சற்கதியாச் சேர்ந்தா னிதயத்து
நாரா யணனே நமக்கு.

### 32. இறைபணி நிற்றல்

(கொச்சகக் கலிப்பா)

745. அயர்தித் ருண்மை யருட்சிற் பதமே
மயர்தியா வுற்ற மனக்கலக்கம் மாற்றும்
துயர்தலறச் சிந்தையைத் தூய்தாக்கித் தெய்வ
நியதியோ டொக்க நிகழ்வு மகிழ்வே.

746. கற்கக் கடவமெய்க் கல்வி சொரூபமே;
நிற்கக் கடவ நிலையுமதே; ஆண்டவன்றுட்
கொற்கமுறத் தம்மையுளத் தோப்புவித்த நல்லடி
விற்கக் கடவரல்லர் வேறெவர்க்குந் தம்மையே. [யார்

## 33. இறைவனியலில் ஒன்றுதல்

(குறள்)

747. ஒன்றினு லன்றி யுணர்வரியான் என்றென்று
மொன்ருக வுள்ள விறை

## 34. இன்ப நிலை

(வெண்பா)

748. செத்தொழிய மோகச் செருச்குணர்வு தான்ருனு
வத்தகநிற் கின்ற வகந்நிலே சுத்த
வறிவொளியா மோன வருட்புலமே சாந்தி
நிறைவெளியா மின்ப நிலே

## 35. உருகி நெகிழ்தல்

749. சென்றுசென்று நுண்ணிதாத் தேய்ந்துதேய்ந்
[துள்ளமுணர்
வொன்றவொன்ற வுள்ளி யுருகுதி—துன்ற
வணவாத சாந்த வருட்பே ரமுத
முணவாக வேண்டி லுயிர்க்கு.

## 36. உபாசனை

750. நின்னை யிறைவனுக்கு நீயளித்தாற் றன்னையுனக்
காங்கே யிறைவனளிப் பான்.

(கொச்சகக் கலிப்பா)

751. எத்தனைநூல் கற்றுலுங் கேட்டாலும் யாதுபயன்?
மத்தவகங் கார மனக்கலக்கந் தீரநுமக்
கத்த னருளை யனவரதஞ் சிந்தித்துச்
சித்தந் தெளிந்தாலே சிற்பரந்தான் விள்ளுவதே.

752. சிந்தையைச் செவ்வே சிவச்செம் பிரான்பதத்திற்
சந்திசெய்து வாழுந் தநீயருக்கோர் கேடுமில்லை;
சொந்தத் துரீய சொரூபமாத் தேரிலகத்
தந்தமில்வாழ் வானஞா னுபவங் கூடுமே.

753. எண்ணக் கடவசீ ரெம்பிரான் பாதநினைந்
துண்ணெக் குருக வுபாசிப்போர் சுத்தவருள்
வண்ணக் கிளர்ச்சியால் வாழ்வுபே ரின்பமா
வண்ணிக்கப் பொங்குமோ னுபவஞ் சார்வரே.

## 37. உடலைக் காப்ப தொழிக

(குறள்)

754. நடலைக்கூத் தாக நகைத்தொழிக நானென்
றுடலைக்காத் தோம்பு முயிர்ப்பு.

## 38. உலக மயக்கொழிக

(வெண்பா)

755. மதிசாந்த மாக மடுத்தா லகத்தே
யதிசாந்த மாகு மகிலம்—சத்யார்ந்த
போதமுனைப் பின்றிப் புலப்படா விவ்வகிலப்
பேதைமையிற் பேர்தலே பெட்பு.

## 39. உள்ளத்து ஓர்தல்

(குறள்)

756. இருந்தா ரறிவா வீதயத்திற் சார்வர்
வருந்தாத சுத்தவருள் வாழ்வு.

757. உள்ளுவா ருள்ளத் துளான்கண்டீர் சுத்தவருள்
வெள்ளவெளி யான பரன்.

758. கடவுள் விபவங் கலக்குங் கருத்திற்
கடவுட் பரங்கண்டக் கால்.

(கொச்சகக் கலிப்பா)

759. ஒளிசே ரருளுருவா வுள்ளசிவத் தன்மை
களிசே ரகந்தையோர் காண்கிலா ரேனும்
தெளிவா விதயத்திற் சீரியர்காண் கின்றார்;
வெளியா விளங்குசிவ மெய்யுளந்தே ரீரே.

## 40. உண்மையுணர்வு

(குறள்)

760. ஒன்றான தன்சொருப வுண்மையுணர் வல்லதுமற்
றென்றானு முய்வின் றுயிர்க்கு.

761. உணர்வான வுண்மை யுளமே *தளமா
வுணர்வோரே யுண்மையுணர்ந் தோர்.

*தளம் - அகிலங்களுக்கும் ஆதாரம்.

762. உண்மை யுணர்வா லுளத்திலுயிர்க் கெய்துவது
வண்மைசேர் சுத்தவருள் வாழ்வு.

(கொச்சகக் கலிப்பா)

763. வெம்மைசேர் கொந்தளிப்பா மேவுமனத் தாபந்தீர்
தண்மைசேர் சாந்தியாஞ் சாவா வமுதவியல்
வண்மைசேர் வாழ்வா வழங்கலால் ஆருயிருக்
குண்மை யுணர்வேபோல் உற்றதுணை யொன்று
[மின்றே.

764. பரசொருபப் பார்வையிலாப் பாமரரைப் பாரிற்
சரமரங்க ளென்பரருட் சான்றோ ரதனால்
நரவடிவு கொண்டவர்மெய்ஞ் ஞானநலன் கொண்
[மார்
உரவருளைச் சென்றுண்மை யோர்ந்துணர்கை
[நன்றே.

765. அறிவன்றி யுண்மை பிறிதன்று சுத்த
வறிவான வுண்மையே யான்ம சொருபம்
அறிவிற் *புலப்படுப வாரோப மாகப்
பிறிவுறக் காணிற் பிரம்மமாந் தானே.

*புலப்படும் - ஜக ஜீவ பரத் தோற்றங்கள்.

766. உறுதிசே ருண்மை யுணர்வா லுளத்திற்
பிறவி மயக்கமறப் பேரிலலாற் சாரும்
பிறநெறிகள் பற்றிப்பல் பேறுகள்பெற் றாலும்
அறுதியாத் தீரா தனர்த்தப் பிறப்பே

767. பொன்னிலே பொன்னணிபோற் போத சொரூப
[மாந்
தன்னிலே தன்மயமாந் தோற்றத்தைத் தன்னியற்
பின்னமாத் தேரலே பேதைமையாம் பேணுங்கால்
அன்னதூஉந் தன்னியற்போ தத்துக் கயலன்றே.

768. அறிவிலுற்ற சொப்பனவாழ் வத்தனையு மந்த
வறிவளவே யாக வமைந்தாற்போற் காண்பா
ரறிவிலுற்ற ஜாக்கிரவாழ் வத்தனையு மந்த
வறிவளவே யஃதுய்த் தறிவார்ப் பெறிலே.

769. நிற்பனவே போல்வ நினைக்கும் மனமையப்பொய்க்
கற்பனையே யாகக் கழன்றொழிக மெய்தேர்வோர்
சொப்பனமே போலறிவிற் றோன்றிமறை யாவுமோ
ரற்பமுமெய் யன்றவ் வறிவுருவை யல்லாதே.

770. அதுவிதுவென் னுஞ்சுட் டறிவான பேத
மெதுவுமறப் பொங்கு மிதயத்து மோனப்
பொதுவா விளங்குசிவ பூரண ஞா னத்திற்
பதிபசுபா சக்கற் பனைகாண் பரிதே.

771. அறிவுருவ வுண்மைமட் டாக வமைவே
பிறிவற்ற சுத்தப் பிரம்மவியற் பேறும்;
உறவுமற்றொன் றில்லை யுபாதியுணர் வின்றி;
நிறைவுற்ற கேவலமெயஞ் ஞேயநிலை தானே.

குறிப்பு :—தானே - ஆன்மாவே.

772. அறிவே சொரூபமா வார்ந்ததன் னுண்மை
அறியாத மோக வனர்த்தப் பிழைசேர்
அறிவனைத்தும் பாச வறிவாக உண்மை
யறிவின் சொரூபம் பரவெளிதா னுமே.

773. அறிவானும் வேறு வறிபடு(ம்)மற் றேதும்
கிறிசேர்ந்த மாயமனக் கேளிக்கை யென்றால்
அறிவாக வுள்ளதன் னுலறியத் தக்க
தறிவாக வுள்ள வருட்பரமாந் தானே.

774. அறிவே யனைத்துமாத் தோன்றலால் அம்மெய்
யறிவான நோக்கத்துக் கன்னியமொன் றிலை
அறிவே சொரூப வருட்பர வுண்மைச்
செறிவா விளங்குமியல் சித்தித் திறமே.

775. அறிவி லகில மடங்கலால் ஆன்ற
வறிவே சுவாராச்சி யாதிபத்ய வுண்மை
அறிவறியார் மோக வயற்கற் பனைச்சுட்
டறிவால் அவற்றுக் கடிமைப்பட் டாரே.

776. உற்றறிய யானிதுவென் றென்றுமிலா வுண்மை
வெற்றறிவு தானே விளங்கும் பரமார்த்தம்; [யால்
கற்றறிய யாதுங் கடவதன்று முற்றறிவு
வெற்றறிவே யாக விளங்கலுறக் கற்றிடிலே.

## 41. உணர்வுருவே தெய்வம்

(குறள்)

777. உணர்வே யலான்மற் றொருதெய்வ மில்லை
உணர்வேகா னுண்மை யுரு.

## 42. உய்வு

778. கைவல் லியவுண்மை கண்டாலே யன்றிமற்
றுய்வில்லை நல்ல வுயிர்க்கு.

## 43. உலகு கற்பனை

779. பண்டமென்று பேணப் பரமார்த்த மன்றுகாண்
மண்டு முடலுலக வாழ்வு.

(கொச்சகக் கலிப்பா)

780. உண்மையே போல வுலகைநம்பி யூனமனக்
கண்மயலாற் சற்றுங் கலங்காதீர்; கைவல்யத்
திண்மைசேர் சுத்தவருட் சிற்பரத்தில் வேற்றுமை
விண்மையே போல வெறுங்கற் பனைகளே. [கள்

## 44 உன்செயலாய்க் கிளம்பாதே

(வெண்பா)

781. நெஞ்சே யுனக்கோ ருறுதி நிகழ்த்துகேன்
நின்செயலா வொன்று நிகழ்த்தாதே—செஞ்செவே
யாண்டவன்பா லாழ்ந்த வகத்து டடக்கரிதாத்
தூண்டுதலேற் பட்டா லொழிந்து.

## 45. உள்ளுணர்வு

(குறள்)

782. நானுதிக்குந் தானத்தந் நானறப்பொங் குள்ளு
ஊனமற்ற வுண்மை யொளி. [ணர்வே

783. உள்ளுணர்வே யுண்மைக் கரியா வொழுகுவோர்
வெள்ளவகப் பாழில் விழார்.

784. உயலுக் குபாயமா வுள்ளுணர்வைப் பற்றி
மயலற் றொழிவது மாண்பு.

## 46 ஊழ் பயனறும்

(வெண்பா)

785. வாழ்வொளிசேர் மோனவருள் வைப்பிலே வாழு
[முயிர்க்
சூழ்வகையா லென்று முலைச்சலில்லை—பாழ்மயல்
சிந்தையறக் கெட்டுத் தெளிந்து விளங்குசிவக் [சேர்
*கந்தழியா நிற்குங் கருத்து.

*கந்தழி - பரம்பொருள்.

## 47. எண்ணமறல்

786. எண்ணுகின்றுங் கிச்சை யெலாமோர் குறைவின்றி
அண்ணினுமிவ் வாழ்வவல மாதலாந்—தெண்ணு
கற்பனு பேதக் கலக்கமறக் காணின்மெய்ச் [மனக்
சிற்பரமே வாழ்வாஞ் சிறந்து.

## 48. எல்லாம் அறிவு—பிரம்மமயம்

787. எல்லாஞ் சிவனுருவே யெல்லாஞ் சிவன்செயலே
எல்லாஞ் சிவமயமென் றேயுணர்ந்தால்—சொல்லாட
நல்லார்பொல் லாரென்று நாணிமனம் மோன
பொல்லாங்கு தீரும் புலம். [மாய்ப்

788. வெளியாக நின்ற விசுத்த சொரூப
வொளியா லமைந்த வுலகைக்—களியாடு
மாக்கள் ஜடமா மதித்து மடப்படுவர்
பார்க்குமெலா மோனப் பரம்.

789. யானேயென் வாழ்க்கையே யின்பதுன் பங்களே
தேனேபோ லன்புமயச் சிந்தையே—ஊனே
டுயிரே யுணர்வே யுரைசெயலே யாவுஞ்
செயிர்தீர் சிவச்சின் மயம்.

790. நானாக நின்றொளிர்மெய்ஞ் ஞான சொரூபத்தில்
யானே யெனதே விகம்பரமே—ஊனே
டுயிரே யுளமே யுணர்வே திரோத
மயர்வே யெலாந்தன் மயம்.

791. தீர்ந்தொழிய மற்றனைத்துந் தேர்ந்தடைய வேண்டு
சாந்திபத மான சதாசிவமே—கூர்ந்தறியிற் [வது
கண்ணு வொளிர்சொருபக் கைவல்யச் சிற்பரமே
மண்ணுதி பூத வகை.

792. அறிவொளி யுள்ளமே யான்ற சொரூப
நிறைவெளிவாழ் வாக நிகழ்வால்—அறிவொளியா
மவ்வுளத்திற் றேன்று மகிலமுமோர் தன்மயமாஞ்
செவ்வியுற்றுக் காணுஞ் சிறந்து.

793. அறிவிற் செறிவா வவிரமெய்ப் பதத்திற்
பிறிவற்ற சிந்தை பெறலால்—மறவிதீர்
மோனவொளி யிந்தமுழு மூதண்ட கூடமுட்ட
வானமா மாறிற் றுவரு.

794. அறிவிலே தோன்று மகிலமே தங்களுமவ்
வறிவுருவே யாக வறிந்தாற்—குறிகுணந்தீர்
ஞான சொரூபநிஷ்டை நம்மகத்துத் தன்னியல்
தானடைந்து சாந்தி தரும். [பாத்

## 49. ஏக தியானம்

795. ஒருணர்வே பற்றி யொழுகிலகண் டாத்துவிதப்
பேருணர்வு தானே பிறங்கலுறும்—ஈருணர்வை
நானதுவென் றென்றமெய்ஞ் ஞானப் பதந்தனி
தானமறு மோனத் தொழுகு. [லுய்த்

## 50. ஏகத்துவ அநுபவம்

(குறள்)

796. ஒன்றான வுண்மை யுணரிலன்றி யுள்ளத்துத்
துன்றாது சாந்தி சுகம்.

797. *ஒன்றாகத் தன்னை யுணர்ந்தாலே யன்றிமற்
றொன்றாது மோன வுணர்வு.

*ஒன்றாக - ஏகான்ம சொரூபமாக.

798. கடவுட் பரமபதங் கைவல்யம்; பார்க்கப்
படர்மற் றவைகற் பனை.

799. மோனவருட் சிற்பதமே முக்காலு முள்ளவுண்மை;
ஏனையவை மாயை யினம்.

## 51. ஏகாக்கிர நாட்டம்

(வெண்பா)

800. தினைத்தே யனுபவமாத் தேற்றமுறு வாழ்வு
வனைத்திதயத் தூடு மடுக்க—உளத்தே
மடைவாயக்கொக் காக மனம்வைத் தறிவூ
டடைவாகத் தேர்க வது.

## 52. கடவுட் காட்சி

801. கடவுளைக் கண்டார் கடவுளே யாவார்
கடவுட் பதத்திற் கழலார்—கடவுட்
பரமான மோனவருட் பார்வையான் மோகப்
புரமூன்று நீறும் பொடித்து.

## 53. கர்த்ருத்வமற்றுச் செயல் புரிக

802. கர்த்தத் துவங்கடிந்து கன்மபலச் சிந்தையறச்
சித்தமொருப் பட்டுச் செயல்புரிக—சுத்த
தரும சொரூபவருட் சக்தி நிபாத
வுரிமைபெற வேண்டி யுளத்து.

## 54 கற்பனையறல்

(குறள்)

803. கற்பனையற் றோய்ந்த கருத்திலே தன்மயமாத்
தற்பரஞா னந்துலங்குந் தான்.

## 55. குருவருள்

(கொச்சகக் கலிப்பா)

804. நைவித் துயிரை நலங்குலைபா ழைக்கெடுக்க
மெய்வித் தகனருளே மெய்த்துணையா மேவிலவன்
தெய்வத் திருத்தன்மை தேறலுற்றுங் கேறும்மை
யுய்வித் தருளவகத் துள்ளுணர்வா வுள்ளதே.

**குறிப்பு :—தன்மை உள்ளதே என வினையும்.**

805. அங்கலாய்த் துள்ள மமுங்காதீர் ஆர்வத்தா
லங்கணு கண்பாரென் றுண்டவனை வேண்டிடீர்;
எங்கணுமா வொங்கும்பே ரின்பவருள் வாரியகம்
பொங்கநீர் வாழ்வு பொருந்துவீர் பூரணத்தே.

குறிப்பு :—ஓங்கும் - ஓங்கும் என்பதன் குறுக்கம்.

## 56. குருவே உற்றார்

(குறள்)

806. நல்லசிவ மாக நடக்குறுமெய்ஞ் ஞானியல்ல
தில்லையுல குக்கே யரண்.

807 குருவருளே கண்ணாக் குறிக்கொண் டொழுகில்
வெருவரல்சேர் மோகம் விடும்.

(வெண்பா)

808. அம்மையப்ப ஞன வருட்குருவை யன்றியுயிர்க்
கிம்மையே யன்றுமற் றெம்மையினும்—செம்மை
உத்தமசற் போத வுறுதிசெய்யு நல்லுற்ருர் [சேர்
இத்தரையில் யாரே யுளர்.

(கொச்சகக் கலிப்பா)

809. வஞ்ச மயக்கவிருள் வாரிசூழ் வையகத்து
நஞ்சமா வென்ணே நலிதலுற்ற நாளெனும்பாழ்ஞ்
சஞ்சலமற் ருேயத் தடுத்தாண்ட சுத்தவருட்
செஞ்சரணப் பெம்மானே செல்சா ருயிர்த்
[தொகைக்கே.

**குறிப்பு —செல்சார் - சென்றடையத்தக்க சார்பு; முடிவான வுண்மைப் புகல்.**

## 57. குரு பக்தி

(குறள்)

810. ஒருபடித்தா வுண்மை யுணர்த்தியமெய்ஞ் ஞான
குருபதத்தை யுள்ளுணர்விற் கொள்.

(கொச்சகக் கலிப்பா)

811. நன்புல ஞென்றியெய்ஞ் ஞான குருபரனேப்
பின்பற்றி நின்றுமனம் பேணுவார் காணுவார்
அன்புசிவ மாக வகம்பொங் கனுபவப்பே
ரின்பவருள் வைப்பா மிதயப் புதையலே.

812. மருட்கலக்க மான மனக்கா ரிருள்போக்
கருட்குருவை நாடி யடைந்தோர் அகச்செம்
பொருட்கலேயா மோனப் புலந்துலங்கு சாந்திப்
பெருக்கமுற்று வாழ்வர் பிழைபடார் தாமே.

813. பூண்ட வருட்கோலப் புண்ணியனைப் புந்தியில் [வைத்
தீண்டியமெய் யன்பா லினைந்தினைந்து நெக்கு [நெக்கு
வேண்டுவார் பாச விடாய்தீர்ந் துபசாந்தி
காண்குறுவார் சுத்தவருட் கைவல்யச் செம்பதத்தே.

814. ஆண்டா னருட்சே வடியிலே சற்பத்தி
பூண்டா லதனினுமெய்ப் புண்ணியம்வே றென்று [மில்லை;
தீண்டாது சற்றுமெந்தத் தீவினையும் பாழ்ங்கன்மப்
பூண்டா மகந்தையறப் பொன்றக் கெடலாலே.

## 58. குரு பாதம் போற்றல்

(வெண்பா)

815. முத்திப் பதமடைய மூண்டபே ராசையோர்
புத்திக்குட் செம்பதத்தைப் போற்றிடுக—சுத்த
வசங்கமா வுள்ள வருட்பதத்தை விட்டால்
வசங்கதராய் மாயையிலாழ் வார்.

## 59. குருமொழி கொள்ளல்

(குறள்)

816. மாணவிளங் கான்றோர் மயக்கமறக் கற்பித்த
வாணைவழி நிற்ற லறிவு.

817. பெருவழியாத் தானே பிறங்குசச் சித்தாங்
குருமொழியே யான்றகுறிக் கோள்.

818. கருவழியாம் பாசக் கலக்கமறக் காணுங்
குருமொழியே ஞானக் குலா.

(வெண்பா)

819. இருளைக் கெடுக்கு மியல்பா லிதயப்
பொருளா வொளிரும் புராணன்—அருளிச்
செயல்க ளனைத்துந் திருமந்திர மா
வுயல்பயக்கு மோது முயிர்க்கு.

## 60. குருவுக்கு ஆட்செய்தல்

(கொச்சகக் கலிப்பா)

820. அலந்தே யொழிந்தீர் அருட்பெருவாழ் வான
நலந்தேர்கின் றீரேலென் னுதனுக்காட் செய்ம்மின்
மலிந்தோங்கு சாந்தி மடுப்பீர் கெடுப்பீர்
சலந்தாங்கு பாசச் சதிசெய் விதியே.

## 61. குருவிடம் சரணடைக

(வெண்பா)

821. குருவருளுக் குன்னைக் கொடுத்தாயேற் புத்தித்
தெருமரல்போ யுண்மை திகழும்—வெருவரல் [போய்த்
தன்மெய்ப் பதத்தே தழைத்திடலாந் தட்குமுயிர்க்
கன்மத் தளைதறிக்குங் காண்.

822. தேசுறுமெய்ஞ் ஞானவருட் செம்பதத்து நாட்ட
வேசறவு தீரவழி வேறில்லை—மாசுறுபொய்ம் [மன்றி
மாறுபி மான மயக்கமறத் தேற்றுபர
ஞானா சிரியனை நீ நாடு.

## 62. குருபத வாழ்வு

(குறள்)

823. அருட்போத மானவென் னுண்டா னடிக்கீ
ழிருப்போர் படாஅ ரிடர்.

824. துப்புரவாத் துன்று சொரூபவருட் சிற்பரமெய்க்
கற்பகமாத் தேர்க கழல்.

825. துக்க வகந்தையறத் துன்றுமோ னுனுபவச்
சொக்கனடி வாழ்வே சுகம்.

826. அருட்பத மாக வகத்தில் விளங்கு
குருப்பதமே மோனக் குலா.

827. உடையான் சொரூப வுணர்வொளியாம் பாதத்
தடைவா லகப்பே யறும்.

(வெண்பா)

828. பரமாக வோங்கும் பகவனருட் பாதம்
உரமாக வுன்னு முளத்தே—திரமாக
வீட்டுலக வாழ்வா விளங்குசிவக் கைவல்யங்
காட்டுமுயிர்க் கந்தக் கழல்.

### 63. குரு தரிசனம்

(குறள்)

829. ஆண்டவற் காண்டல் அருட்சிற் பரசொருபங்
காண்டலா மாட்சி யுடைத்து.

### 64. கைவல்யம்

830. கைவல் லியவுண்மை கண்டடங்கி லன்றிமற்
றுய்வரிது மன்ற வுயிர்க்கு

831. கற்பனையைப் பேணிக் கழியாதீர் கைவல்யச்
சிற்பரத்தி லுள்ளான் சிவன்.

(வெண்பா)

832. சாட்சியா நின்றிலகு சைதன் னியசொருப
மாட்சிசேர் சுத்தவருள் வண்பதமே—காட்சியொடு
காண்பானுங் காண்பொருளுங் கற்பனு பேதமற்ற
மாண்பா வொளிர்கே வலம்.

### 65. சத்தே சித்து

(குறள்)

833. உள்ளதன்றி யில்லை யுணர்வவ் வுணர்வேகாண்
உள்ள பொருளென் றுணர்.

குறிப்பு :—'உள்ளதுணர வுணர்வுவே றின்மையால்'
எனவரும் உபதேச வுந்தியார் பாடல்
ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

834. உள்ளமன்றி யில்லை யுணர்வவ் வுணர்வன்றி
யுள்ளமுமாங் கில்லை யுணர்.

835. அறிவான வுண்மையே யல்லால் அதனிற்
பிறிதான வுண்மை பிழை.

836. கற்பனை மோகமறக் காண்டலுறு சுத்தவருட்
சிற்பரமே தற்பரமாத் தேர்.

## 66. சமர்ப்பணம்

(வெண்பா)

837. கடைக்குலவ ரேனுந் தலைக்குலமா வாழ்வ
ரடைக்கலமாப் புக்கா லரன்பால்—அடைக்கலமாப்
புக்கவுயிர் சிற்சொருபப் பூரணத்தே தன்னிழப்பாற்
பொக்கமறப் பொங்கும் பொலிந்து.

(கொச்சகக் கலிப்பா)

838. ஊத்தை யகந்தை யுதியா விழப்புற்றோர்
சீர்த்த சிவத்திற் சிறிதும் பிறிதல்லர்;
ஓர்த்தோ சிவத்துக் குணவா வகந்தையைச்
சேர்த்தோ சிவசொருபச் சிற்பரமா வாழ்திரே.

குறிப்பு :— ஊத்தை யகந்தை - உடல் வடிவமான அகந்தை; அகந்தை யுதியா விழப்பு - நானுதியாத் தன்னிழப்பு (உள்ளது நாற்பது-27).

839. மோனமா வுள்ளத்து ழூழ்கித்தற் றேர்முறையால்
ஊனவகப் பேய்ச்செருக்கற் றேய்மினோ! தன்னி
மான்ம சமர்ப்பணத்தா லன்றிஞா னுபவத் [ழப்பா
தேன்மருவு சுத்த சிவத்துவஞ்சே ரொண்ணுதே.

குறிப்பு :—முத்தியி னேதுவாக என்னும் விவேக சூடாமணிச் செய்யுளின்படி, ஆன்ம விசாரத்தால் அகந்தை யொழிதலே ஆன்மசமர்ப்பணமான அருட்பத்தி யாதலால் இரண்டையும் இணைத்து இவ்வாறு கூறப்பட்டது.

840. இருக்கையா வுள்ளுறை யெம்மான் உணர்வை
யொருக்குநீ ருள்ளத் துடன்பட் டொழுகில்
அருக்கனு வெம்பா ழகற்றியே யின்பப்
பெருக்கமா வுள்ளம் பிறங்கக்காண் பானே.

## 67. சற்சங்கம்

(குறள்)

841. அருள்விளங்கப் பெற்றநல் லான்றோ ரிணக்கம்
பொருள்வளமா நாளும் புணர்.

(கொச்சகக் கலிப்பா)

842. வஞ்சநெஞ் சப்படிற்று மாக்கள்பாற் சேர்ந்தொழு [கிற்
செஞ்செவே துன்றுசிவச் சித்தருந்தீம் பாவரென் [னிற்
தஞ்சரா மேழைமனச் சஞ்சலத்தார் பாடென்னும்?
பஞ்சைகளா காதுசற் பத்தரினம் பற்றுமினே.

843. பிறிவிலா மோனவருட் பெற்றிசே ருண்மை
நிறைவிலே யூன்றலுற்ற நிட்டரொடு நேய
வுறவிலே வாழு முளத்தோர் உலகி
லறிவு மடம்பட் டலமரார் தாமே.

## 68. சற்போதமே வாழ்வு

(குறள்)

844. கேவலசற் போதக் கிளர்ச்சியாற் கைவல்ய
வாழ்வலரப் பொங்கும் மனத்து.

## 69. சாதனை

(வெண்பா)

845. மனத்தோ டுழன்று வருந்தாதே யந்த
மனத்தோ டுனக்கென்ன வாழ்க்கை—மனத்தைக்
கடந்தநின் னுண்மை கடைப்பிடித்த நோக்கால்
அடைந்தொழுகாய் சான்ற வதற்கு.

(கொச்சகக் கலிப்பா)

846. உள்ளும் புறமுமொருங் கொக்க வொழுகுமனத்
தெள்ளியோர் வாழ்வுசிவச் சின்னமாத் தேர்ந்தறி
கள்ளங் கரவுசேர் காமாதிக் குற்றமறத் [விற்
தள்ளிப் பரமசிவ சாதனை நன் காற்றீரே.

847. பார சொரூபப் பரமார்த்தந் தேர்தலாற்
றூர வகற்றித் தொலைமின் கலைஞானம்
தேரத் தெளிந்திடிற்றன் னுண்மை அதற்குமே
லோரக் கடவதொன்று மில்லை யுணர்வாலே.

848. பந்தமோட் சங்கற் பனையா வொழியவிளங்
கந்தமில்பே ரின்பவுணர் வான வதீதநிலை
சொந்தவியல் பான சொரூபானு பூதியாப்
புந்தியில்வந் துற்றவருட் பூரணவாழ் வற்புதமே.

## 70. சாந்தி

(குறள்)

849. வண்மைசேர் சாந்தி மலரும், பரமார்த்த
வுண்மையொளி சேர்ந்த வுளத்து.

(வெண்பா)

850. மோனப் பதமே முழுமுதலாத் துன்றுசிவ
ஞானப் பதமா நடத்தலால்—ஊனப்
பதங்கள் பிறவற்றைப் பற்றுது சாந்தப்
பதந்தனிலே யூன்றிப் பழகு.

(கொச்சகக் கலிப்பா)

851. ஏந்தியவே தாந்த விதயமாத் துன்றுமுப
சாந்தியைச் சோம்பலெனத் தள்ளி யிகழாதீர்;
சாந்தியா லன்றிச்சாட் சாற்கரிக்க வொண்ணுது
சாந்தியாத் துன்று சதாசிவமெய்த் தத்துவமே.

## 71. சித்தி முத்தி

(வெண்பா)

852. அற்புதவாழ் வாக வடைத லுற்ற மோனவருட்
சிற்பதமே தன்சொருப சித்திமுத்தி—கற்பிதமா
மோகவகங் கார முனைப்பாம் படுமுடிச்சுக்
காகவங்கூர் வாளா மது.

## 72 சித்தம் சிவம்

(குறள்)

853. சித்தக் கலக்கமறிற் சித்தமே சிற்பரமா
முத்தித் துலக்க முறும்.

854. சித்தந் தெளிந்தக்காற் சிற்பரமா வோங்குசிவ
தத்துவமே யாகுமதன் சால்பு.

855. சித்தந் தெளியிலந்தச் சித்தமே சுத்தவருட்
புத்தகமா வுண்மைபுகட் டும்.

856. மோனந் தெளிந்தாங்கு முத்திப் பரசொருப
வானமா வைகும் மனம்.

857. எண்ண மனைத்து மிகந்தொழியக் காணியருள்
வண்ணமே யாகும் மனம்.

(கொச்சகக் கலிப்பா)

858. சுத்தப் பரசிவமே தோன்றுங்காற் புத்தியிலே
பொத்துறுசீ வன்போற் புலப்படலால், ஆராய்ந்து
மத்தமனப்பாழ் மயக்க வகந்தையறச்
செத்ததேற் சீவன் சிவமாத் திகழுமே.

குறிப்பு :—**தோன்றுதல் - பிரதி பலித்தல்; பொத்து - துவாரம், குற்றம்.**

## 73. சித்தம் தெளிக

(குறள்)

859. சித்தந் தெளியிலன்றிச் சிற்பரவாழ் வெய்தரிது;
சித்தந்தூய் தாந்திறந் தேர்.

860. சித்தந் தெளிந்தாற் சிவயோகந் தன்னியல்பா
வித்தகமெய்ஞ் ஞான மெழும்.

## 74. சிவம்

861. சிவத்திற் சிறந்ததோர் செல்வமெங்கு மில்லை
சிவத்தையே தேர்க வகத்து.

862. அத்துவித மோன வருள் விளக்கம் பற்றினோர்
சித்தமன்றி யில்லை சிவம்.

863. சிவமேவாழ் வாகத் திளைக்கின் றவருக்
கவலமோர் காலு மரிது.

864. சித்துவமா வுள்ள சிவத்தை யலாது மற்றெத்
தத்துவமும் பொய்யாத் தவிர்.

865. சிவத்திலே வாழ்வு தெளிந்தியல் சுத்தத்
தவத்திலே நிற்றல் சதிர்.

866. அருள்வெளி யாக வகன்ற சிவச்செம்
பொருளே சிறந்த பொருள்.

867. தாரகமா வுள்ளத்திற் கடவதுசிற்
பூரணமாப் பொங்கு சிவம்.

### (கொச்சகக் கலிப்பா)

868. வஞ்சினங் கூறிநீர் வாதைப் படாதுலகிற்
செஞ்சவே சிந்தை சிவன்பாலாச் சேர்ந்திடீர்;
நெஞ்சமுப சாந்த நிலைப்படநீர் சுத்தவருள்
விஞ்சையால் வாழ்வீர் விளங்குசிவச் செம்பதத்தே.

869. அவத்தமா மோக வகப்பா ழறத்தீர்
சிவத்திலே யன்றித் திளைப்பரிது, முற்றச்
சுவத்தவாழ் வான சொரூபானு பூதி;
தவத்தினற் சுத்தசிவத் தன்மைகா ணீரே.

870. இன்றிமுனைப் பற்ற விதயத் தியல்வடிவா
மன்ற விளங்குசிவ மாண்பதப்பே றாட்சியே
நன்றிகளுக் கெல்லாமோர் நாயகமா நண்ணுவதாய்
ஒன்றக் கடவசுப யோக முயிர்த்தொகைக்கே.

871. நம்பினு ருக்கோர் நலிவில்லை; புன்பிறவித்
துன்பமொரு சற்றுந் தொடராது; திவ்வியப்பே
ரின்பவாழ் வாக வியல்வதுமெய் யன்பரகத்
தன்புமய மான வருட்சிற் பரசிவமே.

## 75. சிற்பதமே ரக்ஷை

(குறள்)

872. அருட்சிற் பரத்தை யலாம லெவர்க்கும்
இரட்சிப் பயலொன் றிலை.

## 76. சிற்பரம்

873. கற்பனையிற் சற்றுங் கலவாத கைவல்யச்
சிற்பரமே யுண்மை தெறி.

## 77. சின்முத்திரை

(கொச்சகக் கலிப்பா)

874. தருமார்த்த காமமோட் சச்சிந்தை சாராப்
பரமார்த்த வுண்மைப் பதங்காண வேண்டிற்
குருமூர்த்தி மோனக் குறியே யலான்மற்
றொருமார்க்க மில்லைகுறிக் கொண்டொழுகு வார்க்
[கே.

## 78. சுட்டறல்

(குறள்)

875. உணர்வே சொரூபமா வுள்ளதனைச் சுட்டி
யுணர்வதெவன் சுட்டற் றொழி.

(வெண்பா)

876. பரவெளியைப் பற்றிப் படரு மனத்தால்
உருவெளியின் சுட்டற் றொழியாய்—துரிய
வெளியாக வுள்ள விசுத்த சொரூப
வொளியேநீ காணு முலகு.

## 79. சும்மா விருத்தல்

877. ஊனமனக் கற்பனையா வுள்ளும் புறமெவையுஞ்
சூனியமே யாகத் தொலைந்தொழிய—நானறநீ
சும்மா விருக்கத் துணிந்துவிடிற் சுற்றுமுற்று
மம்மாபே ரின்பமய மாம்.

## 80. செருக்கறல்

(கொச்சகக் கலிப்பா)

878. வெளியா விளங்குறுதன் மெய்யை மயக்கக்
களிசே ரகந்தைமனக் கற்பனையோர் காணர்;
தெளிவான சுத்தவருட் சிற்சத்திக் கூறை
விளிந்திடுக நானெனுமவ் வீண்பொய்ச் செருக்கே.

## 81. சேட்டையொழிக

(வெண்பா)

879. நடக்குமா றெல்லா நடக்கவே நோக்கி
நடக்குமம் மோனமே ஞானம்—நடுக்கட்
குறுக்குச்சா லோட்டுங் குறும்புமனச் சேட்டை
யறக்கடிந்து வாழ்த லறிவு.

## 82. சொரூப மாட்சி

(குறள்)

880. அறிந்தடையத் தக்கதுசொந் தான்ம சொரூபம்
மறந்தொழியத் தக்க பிற.

881. தேர்ந்தடையத் தக்கதுதன் சிற்பரமெய்த் தன் [மையே;
பேர்ந்தொழிக மற்றைப் பிற.

882. சுத்தவறி வான சொரூபமன்றிச் சுட்டலுற்ற
மற்றவறி வெல்லா மயல்.

883. கைவல் லியசொருபக் காட்சியா லன்றிமற்
றுய்வில்லை மன்ற வுயிர்க்கு.

884. பிரம்ம சொரூபவருட் பேறுபோ லுள்ளத்
திரம்மியம்யா தொன்று மிலை.

885. எல்லாமோர் தானு விருந்தொளிர்சச் சிற்பரமே
யல்லா திலேவே றரண்.

886. சுத்த சிவமே சொரூபமா வுள்ளத்துத்
துய்த்தலுறு வாழ்வே சுபம்.

887. காணக் கடவதுதன் கைவல் லியசொருபம்
பேணுறுமற் றெல்லாம் பிழை.

888. ஏதமொன் றில்லா வியற்சிற் பரசொருப
போதமே யுண்மைப் புலம்.

889. உண்மைப் புலமாக வுள்ளத் தொளிர்சொருப
வண்மையே மிக்கசுப வாழ்வு.

890. துன்றுசற் போதத் துரீய சொரூபமே
பொன்றலற்ற வுண்மைப் பொருள்.

891. சுத்தவறி வான சொரூப விலாசமே
யத்தனேயு மாக வறி.

892. எந்த விதத்தா லிசைத்தாலும் யானற்ற
சொந்தவியல் வாழ்வே சுபம்.

893. சிவமே சொரூபமாத் தேர்ந்துவாழ் வார்க்குத்
தவமாகச் சாலு மது.

894. துங்கமார் சுத்த சொரூபமே என்றுமோர்
பங்கமிலா வுண்மைப் பரம்.

895. கண்கண்ட தெய்வமக் கண்ணேதா ஞனவருள்
விண்ணு விளங்குறுதன் மெய்.

896. அத்தமியா மோன வருட்சிற் பரவடிவே
புத்தமுத போகப் பொருள்.

897. விஞ்சுபர மார்த்த விளக்கமுற்ருல் வேறுகண்
டஞ்சுவதற் கில்லை யயல்.

898. ஒளிவெளியா வுள்ளத் துணர்ந்தசொரூ பத்தில்
இளிவரல்சேர் சிந்தை யிலே.

899. ஒன்றாக வுள்ள வுணர்வான வுண்மையே
தோன்றுன * சொந்த வடிவு.

* சொந்தவடிவு - சுவசொரூபம்.

900. விவத்தைசே ருண்மையா மேவு சொரூப
சிவத்திலன்றி யில்லை தெளிவு.

901. தனித்தபரந் தானு விளங்கும், முளைத்த
வகந்தையறக் கெட்ட வகத்து.

902. அகந்தை மயக்க மகன்றாற் கனவா
விகந்தொழியுங் கற்பனையெல் லாம்.

903. யாதே பிறவற்றுக் கேய்க சொரூபத்தின்
மீதே யிருத்தாய் *விழி.

* விழி - கவனம், ஜாக்கிரதை.

904. ஊனவொளி நோக்கியுழன் றிடா துன்சொருப
ஞானவொளி தேக்கி நட.

(வெண்பா)

905. வாழ்வுக்கு வாழ்வா வளர்சொருபச் சிற்பரமே
சேவிக்கத் தக்க சிவசொருபம்—ஜீவர்க்குச்
சாவாமை யான சதாசிவஞா னுனுபவ
வாழ்வாங்கை வல்ய வழி.

906. சுத்த வறிவே சொரூபமாக் கண்டுநிற்றல்
புத்தியாக் கொண்டு புலம்பொழிக—சுத்த
வறிவுண்மை யல்லா தவற்றிலகம் புத்தி
யுறலனர்த்த வேது வுணர்.

907. தத்துவம்வே றில்லை தனது சொரூபமன்றி
மெய்த்தவமோ தான்றனு மேவலே—தத்துவமா
வுள்ள சொரூபத்தை யோர்த்தோர்த் துளத்தொடுங்
கள்ள மனமிறக்கக் காண். [கிக்

908. மயக்கமற்ற சுத்த மவுனப் பதமே
இயற்கதியா வுள்ளபே ரின்பம்—மயற்கனவாங்
கற்பனைதேர் மூடவகங் காரமறத் தன்சொருபச்
சிற்பரமா மோனவுண்மை தேர்.

909. தவத்தியல் சாராத் தவற்றுமனம் மாய
வவத்தையிலே மோகித் தழுங்கும்—அவித்தைசேர்
கற்பனையாஞ் சித்தக் கலக்கமறச் சிந்தனையைச்
சிற்பரமா மெய்ப்பதத்திற் சேர்.

910. உணர்வுத் தெளிவா முபசாந்த வாழ்விற்
புணர்வதே பொங்குசிவ போகம்—உணர்வுத்
தெளிவே சொரூபமாத் தேறுவோர்க் கின்ப
வொளியாக மேவு முரு.

911. சிக்கென் றகம்படியச் சிந்தை சிவோகமெனச்
சொக்கும் படிதோய் சொரூபத்தே—பொய்க்கும்
புலவிடயத் தூடமுந்தப் போய்ப்படியும் மோகச்
சலவகந்தைச் சார்பைக் கெடுத்து.

குறிப்பு :—தோய் தோயாய் என ஏவல் வினைமுற்று.

912. தெருண்டமையத் தக்க சிவமா வகத்தே
திரண்டொளிர்வ தானசச் சித்தாய்—இரண்டற்
றிருப்பதா முண்மை யிறுகவுளம் பற்றிற்
கரப்பதா மோகக் கருத்து.

913. உதாரமனச் சான்றோ ருணர்வா வுளத்தே
சதாரமிக்கத் தக்கது சாந்தி—சதாகதியா
வுள்ளதாந் தன்சொருபத் தூன்று யுவோபமறத்
தெள்ளிதா மோனஞ் செழித்து.

914. தொன்றுதொட் டுள்ளநின் சொந்த சொரூபவியல்
வென்றுமனத் தூரும் விருத்திகளை—ஒன்றுமுளத்
துண்மையள வாக வுறுஞான நிட்டையால்
வண்மையுற வாய்த்தலே மாண்பு.

குறிப்பு :—சொரூபவால் வியய்த்தலே எனக் கூட்டுக.

915. துன்பமகல் போத சொரூபானு பூதிப்பே
ரின்பவொளி பாய்ந்த விதயத்தே—அன்புமய
மான வருட்பே ரமுதவெளி யாட்சியடைந்
தானமகல் சாந்தி யுறும்.

(கொச்சகக் கலிப்பா)

916. பரத்தைப் பரமே விளக்குவ தன்றிப்
பரத்தை விளக்கப் பரத்தினுமொன் றில்லை
பரத்தின் சொரூபம் பரமாத் துவிதம்
பரத்தியல் சுத்தசற் பாவ வுணர்வே.

917. சுத்தவறி வாகத் துலங்கு சொரூபம்போல்
உய்த்துணர வேண்டுவதோ ருண்மைநூல் யாது
மத்தவகங் கார மனப்பா ழகற்றுவதவ் [மில்லை
வித்தகமே; மாயா விலாசங்காண் மற்றையவே.

918. மரணபயப் பீடையற மாற்றுமருந் தான்ம
சொருபவியற் போதமாத் துன்றுமனு பூதி
மரணமே வாழ்வா மடுப்பபிற வாக
அரணமா வாழ்வுக் கடுப்பதது வொன்றே.

919. ஆன்றபா மார்த்தசுத் தாத்துவிதத் தற்பரமாந்
தான்மாத் திரமாத் தழைத்தசிவக் கேவலத்தில்
ஏன்றவறும் பாழ்மயக்க மின்மையாற் கற்பனைசேர்
யான்முதலாத் தோன்று மெதுவு மெனைத்துமின்றே.

920. கல்லாத மோகமனக் கற்பனையிற் றீர்ந்தகன்ற
நல்லா ரறிந்தொழுகு ஞான சொரூபவுண்மை
புல்லோ ரறிவிற் புலப்படா தேனுமென்றும்
எல்லோர் தமக்கு மியல்பா யிருப்பதே.

921. புரிவவிழ்வு பேதறிவு போக்குவர வற்றுத்
தெரிவளவா வுள்ளத்துத் தேற்றமா முண்மைக்
கிரவுபக லாதி யெதுவுமில்லை மோகக்
கரவுசே ரந்தக் கரணமின்மை யாலே.

922. தவத்திலே யாழ்ந்தறியத் தக்க சொரூப
சிவத்திலே யுண்மைச் சிறப்புள்ள தன்றி
அவத்திலே பாழ்கு மகந்தைச் செருக்காம்
பவத்திலே முற்றப் பராபவந் தானே.

923. ஓரத் தனக்கொமற் றென்றுமில்சற் பூரணமா
ஆர வகம்போங் கருட்பே ரமுதவியற்
பார சொரூபப் பதமே பரமபதம்
காரணவா வத்துவதக் கைவல்ய மாட்சியே.

924. அவத்தைநோக் கங்கெடக்கூ டான்ம விசாரத்
தவத்தா லகத்தே தலைப்படக்காண் கின்ற
சுவத்தவாழ் வான சொரூபப் பரமாஞ்
சிவத்திலே யன்றிச் சிறப்பெங்கு மின்றே.

925. ஊறுபா டாக வுடற்றுமயற் சிச்சடப்பொய்ம்
மாறுபா டற்ற மனத்தா டனுபவமா
வேறுபா டற்று விளங்கும்பே ரின்பவருட்
பேறு சொரூபவியற் பெட்பான போதமே.

926. தெளிந்தவியல் பான சிவானுபவ மோனம்
உளந்தனிலெப் போதுமுயிர்க் குள்ள சொரூபம்
உளைந்துழல்பொய்ச் சிந்தையற வோய்ந்தொழியப் [பெற்றால்
அளைந்ததுதம் முண்மையுரு வாகத்தேர் வாரே.

927. நானற் றெளிர்சொருப ஞானவியற் செம்பொருளை
நானற் றிதயத்து நண்ணலா லெண்ணலன்றி
ஏனைப் புலன்கள்போல் யானென் றெழுந்தழுனைப்
பானமனச் சுட்டுணர்வா லெண்ண லசங்கதமே.

928. மறக்கவொணு மாட்சிசேர் வாலறிவாந் தன்னை
அறக்கழிய வூற்றுற்போல் ஆவரண மோக
வுறக்கமனக் கற்பனையா லோர்த்துணர்வு கள்ளுண்
டறக்களியர் தம்மியல்கற் றுய்தலின்வே றன்றே.

குறிப்பு :—'தானிருந்து தானை' என்னும் ஏகாத்ம பஞ்சகப் பாட்டு இங்கு நோக்கத் தக்கது.

929. உருவொன்று மின்றி யுலகுபல கோடி
கருவியொன் றின்றியே காணப் படைத்தான்
துருவிலன்றித் தன்னுருவு சூனியப்பா மென்று
வெருவலுறு சுத்த வெறுவெளியா வானே.

930. ஒளிவெளியா வுள்ள சொரூபப் பரத்தவ்
வொளிவெளியே யன்றி யுலகெனவொன் றில்லை
ஒளிவெளியாத் தம்முண்மை யோர்த்துணர்ந்தார்
கொளிவெளியே யாக வொளிரு முலகே. [கண்ணுக்

931. வெளியாக வுள்ளம் விளங்கிலன்றி நுட்ப
வொளியான வுண்மை யுணர்வுதியா வாற்றல்
களிசேர் மயக்கவகங் காரக் கருத்தைத்
தெளிவான சுத்தவருட் சிற்பதத்திற் சேரே.

932. ஆதிக்கம் மிக்கபர மார்த்த முசாவலுற்றார்க்
கோதியுணர்ந் துள்ளத் துறைக்கக் கடவதொர்தம்
மேதக்க வுண்மையா வேதாந்தங் கூறுவதோர்
பேதமில்சற் போதப் பிழம்பாம் பிரம்மமே.

933. எங்குமே தானு வியன்றெளிரும் முற்றமுழுத்
தங்கநிதி யான சொரூபமே யல்லாது
சங்க நிதிமுதலாச் சாற்றும் பலநிதியும்
பங்கமே யுண்மைப் பரம்பொருளே நாடுநர்க்கே.

934. விண்மையே போன்ற வெறுவெளித்தோற் றப்புலம் [விட்
டுண்மையுணர் நாட்டமுளோ ருள்ளுணர்வே பற்றி [யுளத்
துண்மையே தம்முருவா வோர்த்துணரி லன்றி [மற்றவ்
வுண்மைவேற் றுப்புலம்போற் சுட்டுணர்வுக் [கொண்ணாதே.

935. பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனும்மற்
றென்னுடைய ரேனும்பே ரின்பவியல் பானவுருத்*
தன்னடைந்த மோனச் சதுரர்க் கலாதுசுகம்
என்னுமொரு சற்றுமின்மை யாவர்க்குங் கண் [கூடே

* உரு - சொரூபம்.

## 83. ஞானம்

(குறள்)

936. உடல்வடிவாத் துன்றுமவ் வூத்தையகப் பேயி
னடல்வலியை மாய்ப்ப தறிவு.

937. நன்னிதியா வுள்ளமெய்ஞ் ஞானனு பூதியுயிர்க்
கென்னதியா னற்ற லியல்.

938. அறிவளவே யாக வகிலமுங்காண் ; சுத்த
வறிவினுமே லில்லை யறிவு.

939. தீனரா வென்றுஞ் சிறுமைசேர் சீவர்க்கு
ஞானமலா தில்லை நலன்.

940. தத்துவமா மோனவருட் சைதன் னியசொருப
வித்தகமே யுண்மை விறல்.

941. சுத்த வறிவுத் துலக்கமே மோனவருள்
வித்தையா முண்மை விறல்.

942. அலைவறநிற் கின்ற வறிவே மயக்க
மலைவகற்று முண்மை வலி.

943. மேதக்க ஞான விபூதியே சாதிக்கத்
தக்கவற்று ளெல்லாந் தலை

944. எண்ணியபே ரின்பவியல் கூட்டு மிதயத்து
நண்ணியமெய்ஞ் ஞான நடை.

945. ஞானமன்றி யில்லை நலனுயிர்க்கு; நானற்ற
மோனமன்றி யில்லை முடிவு.

(வெண்பா)

946. கருதரிய ஞானவருட் கைவல்ய பூமி
ஒருதுரிய மோன வுணர்வே—பொருவில்
அதுசொருப மாக வறியவல்லா ரின்பப்
பொதுவெளியா வாழ்வர் பொலிந்து.

(கொச்சகக் கலிப்பா)

947. தானந் தவமுதலாத் தானென்ன செய்திடினும்,
ஊனப் பிழைசே ருடலகந்தை யானபொய்ந்
நானற்ற மோனமெய்ஞ் ஞானத் தெளிவின்றி
ஏனைத் திறத்தா லியற்பரஞ்சே ராண்ணாதே.

948. சித்தக் கலக்கமறத் தேறத் தெளிந்தினிது
சுத்தவருள் வாழ்வாத் துலங்குமுப சாந்தவுணர்
வெய்த்தலற வுண்மை யியல்கண் டறிந்தியத்
தத்தநிற் கின்றூர்க் கலாம லடைவரிதே.

949. சூதுசேர் மாயமனச் சுட்டறிவாற் கற்பனை
பேதமே நோக்கிப் பிரலாபிக் கின்றபிர
மாத வகந்தை மயக்கந்தீர் சுத்தவருட்
போதமே யன்றிப் புகலில்லை தேர்ந்திடிலே.

950. உன்னை யளாம லுறுதியுயிர்க் கின்றெனவோர்ந்
துன்னையே மிக்க வுபாயமாப் பற்றினோர்
நன்னயமார் மிக்கமெய்ஞ் ஞானு பூதியால்
உன்னையே தம்முண்மை யாகவுணர் கிற்பரே.

## 84. ஞானி பரமே

(கொச்சகக் கலிப்பா)

951. எவ்வெவற்றுக் குள்ளு மிரண்டற்ற வொன்றாகச்
செவ்விதினுற் றுத்திகழ்ச்சச் சிற்பரான் மாவையறிந்
தவ்வவற்றுக் கேற்ப வபேதமனப் பான்மையோ
டெவ்வமுறு மவ்வியமற் றெய்வார் பெரியோரே.

952. சிவமயத்தி லன்றித் தெரிவரிது சாந்தி
அவமுயற்சி யாகும் அதையுலகிற் றேடல்
சுவசொருப மாகத் துலங்கவது துய்ப்பர்
தவமுயற்சி யாலகமெய்த் தத்துவங்கண் டோரே.

953. விளைந்த சொரூபமெய் வேட்கைத் திறத்தாற்
களந்தரு வஞ்சக் கருத்தைத் திருத்தித்
தெளிந்தவர் மோகச் செருக்கற வுள்ளாங்
களைந்தவ ரென்ப ரமுதத் துவமே.

954. *நிற்றற் குரியதன்றி நிஷ்டானு பூதிநெஞ்சத்
திற்றென் றெடுத்தியம்பல் யார்க்கு மியல்வதன்று
மற்றுவமை யற்றவின்ப மாட்சிசே ராட்சியிற்பட்
டற்ற மனத்த ரமுத சொரூபரே.

* நிற்றல் - நின்றனுபவித்தல்.

955. மோனத்தி னின்றுதித்த வெல்லா முழக்கமும்அம்
மோனத்தின் கண்ணே முடிவதன்றி மத்தியிலும்
மோனத்தின் கண்ணே முயங்குவறுங் கற்பனையா
மோனத்தின் மெய்யுணர்ந்தார் மோனத்திற்
[பேராரே.

956. உலப்பிலா வுண்மை யுணர்ச்சியான் மோகக்
கலப்பில்வாழ் வானவருட் கைவல்யங் கண்டோர்
புலப்பா ழகந்தைமனப் புல்லறிவின் மோகித்
தலப்படார் கேவலஞா னனந்த ரன்றே.

957. சுத்தவருட் பார்வைத் துலக்கத்தால் வித்தகர்தம்
மத்தவகங் கார மயக்கமதி யற்றொழிவால்
தொத்தலுற்ற வெத்தகைய சுட்டறிவுங் கற்பனையாய்ப்
பொய்த்தொழிவ தன்றிப் பொருளாகத் தோன்றுதே.

958. அடந்தரு மோக வகந்தையற் றோயக்
கடந்த சிவத்திற் கலந்துவர் சித்தம்
படர்ந்தியல் காட்சிப் படங்களுக் கெல்லாம்
இடந்தரு முண்மைப் படவியல் பிற்றே.

959. கறைப்பட லுற்ற கருத்தைத் திருத்தி
நெறிப்பட வுண்மை நினைவுறு நெஞ்சர்
வெறிப்படு சித்த வியாகுலஞ் சேரார்
பொறிப்படர் புன்புல வேட்கைதீர் வாலே.

960. அருள்விளங்க லுற்ற வகத்தோர் அவிச்சை
யிருள்கழன் று காண்பர் இதயவெளி தாமா
மருள்வழங்கு கற்பனைதீர் மாட்சியால் அன்னோர்
வெருள்வுறார் யாதோர் விகற்பமுங்கா ணாரே.

961. அரதைசேர் மோக வகந்தையறக் காணும்
பரதெய்வ மான பரஞ்சோதி பாதத்
திரதநுகர் வுற்றோர் இகபரமென் போகங்
கருதிடார் அஃதவர்க்குக் கானற் புனலே.

962. நாடலுற்றுத் தம்மகத்து ஞான விசாரத்தால்
ஓடலுற்ற பொன்போ லொளிர்சொருபங் கண்டு
[கொண்டோர்
ஆடகத்து மோகப்பா ழாசையுற்ற வாதிகளை
நாடகத்து மோன நகைகொள்வர் நாணியே.

963. ஊனவகங் காரப்பா ழுந்தைமனப் பேதைமையால்
யானிதுவென் றோருமறி வெல்லாங் கடந்தொளிர்
[மெய்ஞ்
ஞானவொளி யான நலம்பெற்ற கேவலர்க்கவ்
வேனையறி வாட்சிகளிற் சற்றுமில்லை மோகமே.

964. விளக்கமா வுள்ள வருள் வித்தையால் உள்ளத்
தளக்கவொணுத் தற்பரமே யான்மாவாக் கண்
களக்கமா மோகவகங் காரமுனைப் பற்றுர் [டோர்
களிக்கலுறார் சிந்தை கலக்கலுறார் தாமே.

965. படர்ந்தியல் சந்திப் பரப்பா மகிலம்
மடந்தருபொய்க் கறடறு மாயமாத் தள்ளிக்
கடந்த சொரூபசிவக் கைவல்யங் கண்டார்
*படர்ந்த வடிப்பொடிபா வஞ்சிதைக்கு நீறே.

*படர்ந்த வடிப்பொடி - நடந்த பாதத்திற் பதித்த தூளி.

966. *தன்னிழப்பே யின்பத் தலமாகத் தங்குசுப
மெய்ந்நிலைக்கே என்னை விளைவித்தான் வித்தகச்
[செம்
பொன்னடிக்கே நேசுகப் பொய்ம்மயக்கம்
[போயொழிந்தார்
எந்நிலைக்கே நின்றுலகத் தெப்புலந்துய்த்
[தாலென்னே.

*தன்னிழப்பே யின்பாந் தலம் - ஒழிவிலொடுக்கம், 9. 1.

967. புத்திக் கமுதமாப் பொங்கும் பரபோகம்
தய்த்திடத்தாம் பெற்ளுேர் சுவையொளியூ ருேசை
[மணம்
அத்தனையும் தோற்றவள வாகவே தாம்புசிப்பர்
சித்கம் சிவமயமாத் தீர்ந்தொழிந்த வாற்ருலே.

968. நன்ருன மோனமெய்ஞ் ஞானு பூதியால்
ஒன்ருன வுண்மை யுரப்பட்ட யோகியுயிர்
வென்றே விளங்கு விசுத்த சொரூபவுளத்
தொன்றலன்றித் தேக வியோகத் துழிதராதே.

969. கோயில் கடவுள் குருக்கள்பூ ஜாவிதி
தூயமெய்த் தொண்டர் தொழும்பு சுபத்துக்கு
வாயிலாந் தோத்திர வந்தனை சிந்தனையென்
ருடவைமெய் கண்டார்க் கருள்விளா சங்களே.

970. படர்வனவற் றுக்கெல்லாம் பற்றுக்கோ டான
இடவெளியா(ம்) மோன வியற்பரமாத் தன்னைத்
தடவலறக் கண்டு தரித்தமெய்ஞ் ஞானி
கடவுளே மானிடன்போற் காண்கினு(ம்)மற்
[ருேர்க்கே

971. அருள்விளக்க மானமோ ஞனு பவத்தாற்
பொருள்வளக்கை வல்யம் புணர்ந்தோர் உலக
மருள்வசப்பட் டோர்தம் மனந்தெளிய உண்மைத்
தெருள்வழங்க வந்தபர தெய்வமுந் தாமே.

## 85. தன்னிழப்பு

(குறள்)

972. நன்னலப்பே ருனமெய்ஞ் ஞான சொரூபசித்தி
தன்னிழப்பாற் சார்தல் சதிர்.

(கொச்சகக் கலிப்பா)

973. உள்ளமே யாக வொளிர்சொருபச் சிற்பரத்தைக்
கள்ளமனச் சுட்டுணர்வாற் காண்பதெங்ஙன்,
[தானுரென்
றுள்ளு மகந்தைமுனைப் போய வுளத்தொடுங்கித்
தெள்ளிதாத் தானதன்கட் சேர்ந்தியைத லன்றியே.

## 86. தவம்

(குறள்)

974. சாலத் தனக்குத் தவம்பலிக்கை தான்செய்த
மேலைத் தவத்தின் விளைவு.

குறிப்பு —தவமுந் தவமுடையார்க்காகும் என்னும்
திருக்குறள் ஈண்டு நோக்கத்தக்கது.

975. சிவபதத்தை யோர்ந்து சிவாயநம வென்று
தவவொழுக்கம் பேணல் சதிர்.

## 87. தன்னுட்டம்

(வெண்பா)

976. துங்கவருட் பார்வைத் துலக்கத்தா லன்றியுயிர்க்
கங்கமகம் புத்தி யருமையால்—எங்குமுறத்
தங்குசிவக் கேவலமாந் தன்மையே நாட்டமாப்
பொங்குகவென் றென்றும் பொலிந்து.

## 88. தன்னை யறிதல்

977. ஊனமில்சுத் தாத்துவித வுண்மையாந் தன்னுருவே
தானறியத் தக்கதொர்மெய்த் தத்துவமாத்—தானறி [யிற்
பின்னலுற்ற தொந்தப் பிணக்ககலுந் தானறிவாய்
மன்னலுற்ற *மெய்த்தன் மயத்து.

* மெய்த்தன்மயம் - உண்மையான தன்மய நிஷ்டை.

## 89. தன்னுண்மை யுணர்தல்

(குறள்)

978. தற்பரமாத் தன்னுண்மை காணிலன்றித் தஞ்ச [மனக்
கற்பனையே தான்கண் டது.

979. ஓர்த்துணர்ந்தா லோர்த்துணர்ந்த வுண்மையே [யுன்னேமுற்றக்
காத்தளிக்கு முன்னுட் கலந்து.

980. அன்னியமொன் றில்லா வறிவே சொரூபமாத்
தன்னியல்காண் கிற்றல் சதிர்.

981. உற்றகத்துத் தேர்தற் குரியதன் னுண்மையன்றி
மற்றவையெல் லாமே மயல்.

982. ஐயமறத் தன்னைநன் காராய்ந் தறியிலன்றி
மைய லறாது மனத்து.

983. காணுவோர் சொச்சொரூபக் கைவல்ய வுண்மை
காணலின்றித் தீரார் கவி. [யைத்தாங்

984. ஒன்றாக நல்ல துசாவித்தன் னுண்மையுணர்
வென்றே யுசாங்கொண் டியற்று.

குறிப்பு :— உசாவித் தன்னுண்மை யுணர்தலே ஒன்றாக நல்லதென்று அவ்வுசா வியற்று என்பதாம்.

985. அருள்வெளியே தம்முண்மை யாக வறிந்தோர்
இருள்வளர்பாழ் விட்டிகந் தார்.

986. கண்டாலே யன்றித்தன் கைவல்ய வுண்மையைமற்
றண்டா தமுத வியல்.

987. தத்துவனாந் தன்னுண்மை தான்காணி லன்றிமற்
*றத்தனையும் மாயக் கனா.

*அத்தனையும் - காண்பானுள்ளிட்டுத் தத்துவக் கூட்டமான முப்புடிக் காட்சி முழுவதும்.

988. வேறென் றறியா விடினுந் தவறில்லை;
தேறவொன்றா வுள்ளதுதன் மெய்.

989. ஒன்றான தன்மெய் யுணர்வாலே யன்றிமற்
றொன்றாலு மில்லை நிலை.

990. தன்னையே காணான் றலைவனைத்தான் காண்ட
தன்மெய் தலைவன்றன் மெய். [லெவன்;

991. தன்மெய்யே காணான் தலைவன்மெய் காண்டலெவன்;
தன்மெய் யறிதல் சதிர்.

992. தன்சொருபத் தத்துவமே தானறியா மூடமதிக்
கென்செயுமற் றேனை யறிவு.

993. அதுவேதா னாக வறிந்தாலே யன்றிக்
கதுவரிது கைவல் லியம்.

994. மத்தமனக் கற்பனையா மற்றவற்றை முற்றவொழித்
துய்த்துணர்க தன்மெய் யுளத்து

995. தோய்ந்துபிற வற்றிற் சுழலாது தன்னுண்மை
யாய்ந்தறிந்து தன்னி லமர்.

996. தன்னியல் சார்தலே செய்தவமாத் தன்னின்மற்
றன்னிய மெல்லா மகற்று.

(கொச்சகக் கலிப்பா)

997. உள்ளதே தானா வுளத்தில் விளங்கிலன்றிக்
கள்ளமனக் கற்பனையே காணுமயற் காட்சியெல்
[லாம்;
துள்ளு மகந்தைமனச் சுட்டறுத்து நானாரென்
றுள்ளத்தே தன்னுண்மை யோரக் கடவதே.

998. நெஞ்சமே கோயிலா நின்றவருட் சிற்பரத்தாற்
செஞ்செவே தேர்ந்தடைக சித்தமாந் தம்முண்மை;
தன்சொருப வுண்மை தலைப்பட்ட தற்பரர்மற்
றெஞ்சியதால் யாது மிடர்ப்படா ரென்றுமே.

999. சுத்த வருள்வெளியாத் துன்று சொரூபமன்றி
மித்தைசேர் மாயா விலாசமே மற்றையவை;
எத்தகைய வேனுமவ் வேதிலவை யாவுமொழித்
துய்த்துணரா யுள்ளத் தொளிவெளியா வுன்னையே.

## 90. தான் தனியே நிற்க

(குறள்)

1000. இனியனைத் தானிருக்க வேண்டிற் றனக்குத்
தனியனா நிற்கை தகும்.

குறிப்பு :—தான் (பாரமார்த்திகத்தில்) தனக்கு இனிய
னாக விருக்கவேண்டில்.

## 91. தானே தத்துவம்

1001. ஏனையொன்று மில்லை யியற்சிற் பரத்தையன்றித்
தானதுவே யாந்தத் துவம்.

## 92. தாப மறல்

(வெண்பா)

1002. உலகிலென் றென்று முழுன்றுங் குயிரே
யுலைவிலாத் தாப முழந்தாய்—கலவுமனப்
போராட்டந் தீர்ந்துசற் போத சொரூபசிவ
நீராட்ட மார்ந்து நிலை.

## 93. தியானம்

(குறள்)

1003. கடவுட் பதத்திற் கருத்தைப் பதித்தாற்
கடவுள் வடிவாங் கருத்து.

1004. வீண்கலக்க மான வியாமோகப் பாழறச்செம்
மாண்கழற்கண் வைம்மின் மனம்.

(கொச்சகக் கலிப்பா)

1005. பாழ்மையல் செய்யும் பராக்காற் புலன்களிற்
கீழ்மைப் படியுயிர் கேதத்துக் குட்படும்
ஏழ்மைப் பிறப்புக்கு மேமப் பெருஞ்சேம
வாழ்வுக் குறுதிசெய் வள்ளலை யுள்ளுமே.

1006. என்னதியா னென்னும்பா ழேழைமைசெற் [றென்னகத்து
நன்னிதியாம் பூரணமெய்ஞ் ஞானனு பூதிதந்தான்
சன்னிதியா வெங்கெங்குந் தங்குபரந் தாமனை
உன்னுதியா னத்திறத்தோர்க் குள்ளம் பரவசமே.

## 94 தியான லக்ஷியம்

(வெண்பா)

1007. செயலற்று நானென்னுஞ் சிந்தையற்று மோன
வியல்கற் றெழுகலே யின்பம்—பயில்க
நிராலம்ப வுண்மையிலே நிற்க வொணுதோர்
ஒராலம்பத் தேமனத்தை யுய்த்து.

**குறிப்பு :—ஆலம்பம் - பற்றுக்கோடு, தியான லக்ஷ்யம்,**

## 95. தியானக் காட்சிகள் கற்பனையே

(குறள்)

1008. சிந்தைக்கெட் டாத சிவத்தைச்சிந் தித்தலெவன்
சிந்தை வெறும்பா வனே.

(கொச்சகக் கலிப்பா)

1009. சொல்லலோ டெண்ணலறத் தொக்கமோ [னப்பரத்தூ
டில்லையென் றென்று மிரண்டுபடு பேதமென்னிற்
சொல்லலோ டெண்ணலுறு சொப்பனம்பொய்க் [கற்பனையின்
வல்லமையென் றோர்ந்து மனந்தெளிகை மாட்சியே.

1010. கடவுளுருக் கண்டடைந்த காட்சியோர் அந்தக்
கடவுளியல் விட்டுமனக் கற்பனையிற் பேரார்
கடவுளே யத்துவிதக் கண்மணியா முண்மை
கடவுளிற்பல் காட்சிகளுங் கானற் புனலே.

## 96. திருவடித் தியானம்

(வெண்பா)

1011. மோன வருள்விளக்கம் மூண்டெழுந்தா லன்றி
தூனமயற் பாச மொழியாதே—மோன [யுளத்
வருள்வடிவ மானநல் லாண்டவன்மெய்ஞ் ஞானத்
திரளடியிற் சிந்தை செறி.

## 97. திரிகரண சுத்தி

(குறள்)

1012. கரணமூன் றூலுங் கடைப்பிடிக்கு(ம்) நன்மை
யரணமா வேமாப் புடைத்து.

## 98. துற் சங்கம் நீத்தல்

(கொச்சகக் கலிப்பா)

1013. கோத்தமா யாஜாலக் கோலா கலக்கனவாப்
போர்த்த வுலகே பொருளாகப் போற்றலால்
வேர்த்தைம் புலத்தில் வியாமோகப் பட்டழுந்தும்
கோத்தைமட மாக்களைக் கூடா தொழிகவே.

## 99. துறவு

(வெண்பா)

1014. மெய்ஞ்ஞான வாழ்வு விழைந்தோர்க்குக் கற்பனை
[யாம்
பொய்ஞ்ஞால வாழ்வு பொருந்துமோ—அஞ்ஞான
மாயா விலாச மனக்கலக்க வாழ்வுதுறந்
தோயா யுபரதி யுள்

## 100. தேகான்ம பாவம் அறுக

1015. நீகாய மென்ற நினைவறநின் னுண்மையை
தாகாய மாக வறிந்தொழுகாய்—ஏகான்ம [யோர்ந்
போதானு பூதியாற் பூரணமோ னனுபவ
மீதான மாமிவ் வுலகு.

## 101. நிட்டை

(குறள்)

1016. இருப்பளவாத் தம்மை யிதயத் தறிந்து
தரிப்பவரே சாந்திதழைப் பார்.

1017. காலதே சக்கற் பனைகடந்த சிற்பதத்திற்
சாலவே யூன்றல் சதிர்.

1018. ஆனந்த மோன வருட்சிற் பரத்திலன்றி
யூனந் தவிரா துயிர்க்கு

1019. அத்தகவே தன்மாட் டமுத்தமா நிற்றலுற்ற
வித்தகமே யுண்மை விறல்.

1020. தான்றனை நிற்றலே தற்பரமா முத்திநிலை
ஊன்று யுனதுண்மை யோர்ந்து.

1021. தன்னிலே தான்றனுந் தங்குமெய்ஞ் ஞானநிஷ்டை
துன்னிலே தீருந் துயர்.

(வெண்பா)

1022. அன்று சொரூபமென் றன்னியமெல் லாமகற்றி
நின்றேமுகும் மெய்ஞ்ஞான நிஷ்டையே—என்று
தாழ்வற் றுயர்ந்த சதாசிவமோ னனுபவ [மொரு
வாழ்வுக்கு நல்ல வழி.

1023. உள்ளத்தை நீங்கி யுணர்வு வெளிப்படிற் பொய்க்
கள்ளப் புலத்தாற் கலக்கமுறும்—தெள்ளத்
தெளிந்துமதி சுத்தவருட் சிற்பரத்தி லூன்றி
யளைந்திடில்வாழ் வானந்த மாம்.

1024. உண்மைப் பதத்திலுணர் வூன்றிலன்றி யாருயிர்க்கு
வண்மைசேர் மோனவருள் வாழ்விலை—வண்மை
சாந்தியத மான சதாசிவத்தே யூன்றிமனம் [சேர்
பேர்ந்தொழிக வூனப் பிறப்பு.

(கொச்சகக் கலிப்பா)

1025. வெற்றறிவே தானு விளங்கு சொரூபநிலை
நிற்றலே ஞான நிறைவான மோனமென்பர்
வெற்றறிவா முண்மை விளங்கிலன்றி யுள்ளத்திற்
கற்றறிவு முற்றவெறுங் கானற் புனலன்றே.

1026. உள்ளத் துணர்வுருவா வுள்ள சொரூபத்தைத்
தெள்ளத் தெளிந்தநிட்டை சித்தியின்மெய்; சிச்சட
துள்ளு மகந்தைத் துடிப்பா லடைந்தபிற [மாத்
கள்ளமயல் சேர்ந்த கஞைத்திறத்தின் பாலனவே.

1027. இருப்பளவா வுள்ள வியல்பான ஞான
நெருப்புருவா நிஷ்டை நிவந்தோங் கிமயப்
பொருப்பளவா மோகமனப் பொல்லாங் கெரித்துக்
குருப்பதமா மோனநிலை கூட்டும்பெற் றித்தே.

1028. அறிவொளியா வுள்ளசுத் தான்ம சொரூப
நிறைவிலன் றி யாருயிர்க்கு நிம்மதி யில்லை
உறவுபிற வற்றோ டுவைதொற் றகந்தை
யறிவுமற நீவெற் றறிவொளியா நில்லே.

1029. மடமையா லுற்றஜட மாஞைபி மானம்
கெடவிசா ரித்தலாற் கேதமறத் தன்னிற்
றிடவியல்பா மோனத் தெளிவுபெற நிற்கை
கடமையா வாற்றக் கடவர்நல் லோரே.

1030. ஓர்மைசே ருள்ளுணர்வா லுற்றஞா ஞுடவக்
கூர்மைசேர் மோனக் குலாவிலன் றிக் கைவல்யச்
சீர்மைசேர் முத்தி கிளைப்பரிது நெஞ்சத்து
தீர்மைசேர் மெய்ஞ்ஞான நிஷ்டை பயில்கவே.

1031. உள்ளத் தகுவதா வுள்ளவுண்மை யாராலு
முள்ள வொஞைகு வுணர்வாம் சொரூபமென்பர்
கள்ளமா மோகக் கருத்தான கற்பனையைத்
தள்ளியே யுள்ளறத் தற்பரமா நிற்கவே.

1032. நேரியரா வுள்ளத்து *நீதியிற்பே ராதியல்வோ
ராரியர்மற் றல்வா ரஞரியரென் பார்பெரியோர்
கூரியமெய்ஞ் ஞானக் குறிக்கோளாற் றற்பரத்தோ
டோரியல்பா வுள்ளவுணர் வொட்பநுட்பஞ்
[சேர்கவே

*நீதி - உண்மை.

1033. கண்ணு வொளிர் சொருபக் காட்சியே சுத்தவருள்
விண்ணு விளங்குசிவ மாட்சியெனிற் சுட்டறிவா
லெண்ணுநின் றேறிட் டிதுவதுவென் றேர்த்த
[லெவன்
கண்ணுத சுத்தவருட் கண்ணுக நில்லாதே.

1034. மெய்யன் பறிவு விளங்கலே வீடுபெற்
றுய்யு முபாயமென்ப ருண்மைப் பரமுணர்ந்தோர்;
குய்யம் படுபொய்க் குடிலமனப் பாசமற
நையுமா றோர்ந்துணர்வை நல்லசிவத் தூன்றீரே.

1035. மாயமா மோக மனக்கற் பனைகளகன்
றோயலுற்ற வுள்ளத் தொளிர்சொருப வுண்மையை
யுயலுறு கின்றீர்; அஃதுமக் கன்னியமோ? [மற்
நேயமா மோனநிலை நின்றொளிரக் காணீரே.

**குறிப்பு :—மோன நிலை நின்று - மோன நிஷ்டைக்கண் ஊன்றி நின்று.**

1036. ஊன்றி யுளத்தி லுறைக்கலுற்ற மோனவுணர்
வான்ற சொருபநிஷ் டானுபவ வுண்மையென்பர்;
ஏன்றவா றுள்ளத் தியற்றிடலவ் வான்மநிஷ்டை,
மான்றவகங் கார மயக்கமனக் கட்டறுமே.

1037. ஆரவா ரஞ்செய் தவலப் படாதுமெய்யன்
பூர வுளங்கிளர்ந்த வுத்தமசற் பத்தியாற்.
பார சிவத்திற் பதிந்தழுந்தி யோகநிட்டை
சேர வொருப்படீர் சித்தந் தெளிதலுற்றே.

**குறிப்பு :—யோக நிட்டை - சிவயோகமான நிட்டை.**

1038. தன்னை யறிந்தபடி தான்றுனு நிற்கலன்றித்
தன்னை யறிந்ததனுற் சார்பயன்மற் றென்னேயோ?
நன்னயமார் சொச்சொருப ஞானுனு பூதிபெற்
[றோர்க்
கென்னது நா னில்லை; இருப்பதொரு சிற்பரமே.

1039. சிந்திக்க வொண்ணுச் சிவபதத்தில் யானென்னும்
புந்திக் கலக்கமறப் புக்கொடுங்கி நிற்கிலல்லாற்
சிந்தைக் கிலேசஞ்சேர் ஜீவியமா மேவியபாழ்
விந்தைக் கலவரந்தீர் வேறுவழி காணேமே.

1040. தானுன தன்னேச் சடவுடலாத் தான்மருண்ட
மானுகங் கார மயக்கமற மாற்றுவது
தானேதா ஞகத் தரித்திடுமெய்ஞ் ஞானநிஷ்டை
வானுக வைகுமியல் வாலறிவா நிற்கையே.

1041. எவ்வளவு சொன்னுலு மிவ்வளவே : தன்னியலே
வவ்வலுற்ற வஞ்ச மயக்கமற வாராய்ந்து
செவ்விதா வுள்ளொளிர்சச் சிற்பரமே தன்னுருவா
ஒவ்வவுணர்ந் துள்ளத் துறுதிபெற நிற்கவே.

1042. சித்தந் தெளிந்து சிவாயநம வென்றுசெபித்
தத்தன் பதத்தி லழுந்து தியானத்தாற்
புத்தமுத மானசிவ போகமுண்டு நல்லமதோன்
மத்தரா நீருலகில் வாழீர்மெய் யன்பரே.

## 102 பக்தி

(குறள்)

1043. பேரின்ப வாழ்வு பிறங்கும் பரமன்பா
லோரன்பு பற்றி னுளத்து.

1044. பத்தியா னுண்மைப் பரமோப சாந்தநிலே
சித்திக்கு முள்ளஞ் செழித்து.

(வெண்பா)

1045. உயிருக் குறுதியா வுண்மைநலம் பேணிப்
பயிலக் கடவ படிகேள்—உயிருக்
கணிகலமாம் பாதத் தகந்தைமுடி தோயப்
பணிவுறலே தெய்வப் பணி.

1046. ஈசன் பதத்தி லியல்பாகப் பொங்குசிவ
நேச முதித்தாலே நெஞ்சத்து—நீசமனப்
பாச மகற்றும் பரமபத ஞானவொளி
யீச னருளா லெழும்.

1047. ஆனெடுபெண் ணல்லா வறிவுருவத் தோடுமனம்
பேணுறவாம் பத்திப் பிறக்கமே—பூணுமயற்
சுட்டறிவாங் கற்பனையைச் சுட்டெரித்துத் தன்
நிட்டையா நின்றொளிரு நீடு. [சொரூப

1048. கற்பொழுக்கம் பூணக் கடவதுமெய்ஞ் ஞானவருட்
பொற்பதத்துக் கென்றே புலங்கொள்க—சிற்பரத்
கல்லாத வாழ்வு கடைப்பட்ட தாகமிகப் [தைக்
பொல்லாத மாயைப் புணர்ப்பு.

1049. தரித்தலன்றி மோன சமாதிநிலை சித்தி
விரித்தலெல்லாம் மாயா விநோதம்—சரித்தலுறச்
சித்த மியல்பாச் சிவபதத்தி லன்புபட்டு
நித்தமுத்தி யூடே நிலை.

1050. நெஞ்சிலே யாசை நிறைந்தா லிறைபதத்திற்
கொஞ்சியே கூடிக் குலாவலாம்—பஞ்சையாய்ப்
பாழ்பட் டிருமற் பரமனருட் செம்பதத்தில்
வாழ்வுற் றொளிர்க மலர்ந்து.

1051. கற்பனையை யெண்ணிக் கலங்காமல் யாவுமொரு
சொப்பனமா வெண்ணியே சுட்டறுத்துக்—கற்பு
நிலையிலே நெஞ்சை நிறுத்தலாற் சற்று
மூலைவிலா தூன்று யுளத்து.

(கொச்சகக் கலிப்பா)

1052. இன்பம்அன் பென்ப இரண்டுமொன்றென் றோரா
[தார்
அன்பினின் றின்பமுண் டாகுமென்பர் தாங்கிடக்க
அன்பினின்று துன்பமுண் டாகில் அதிசயப்பே
ரின்பமா வேற்று மகிழ்வா ரிரசிகரே.

1053. அறிவான தன்னை யயர்த்தொழியா துள்ளத்
துறவாக மெய்யன் புணர்வா லியைக;
சிறவாத மோகச் செருக்கா மகப்பேய்
பிறியாமல் வெம்பிறவிப் பீழைபே ராதே.

குறிப்பு :— **மெய்யன் புணர்வால் தன்னை இயைக என வியையும்.**

1054. பத்தரந் தக்கரணப் பான்மைக் குகந்தபடி
பத்தித் திறம்பற் பலவா வியன்றாலும்,
சுத்தவறி வாகத் துலங்கு சொரூபவருட்
பத்தியே மிக்க பரத்துவஞ்சேர் விப்பதே.

1055. கொச்சைவாழ் வானபுலக் கோலா கலத்தில்ஓ
ரிச்சைதீ ரன்பா லியற்றுசற் பத்தியால்
அச்சயமெய்ஞ் ஞான வருட்செல்வ மெய்தலாம்
பிச்சை யிரந்தும் பிரானடிநீர் பேணுமினே.

1056. விசுத்தத் திருவருட்சீர் வேட்கையா லுள்ளத்
தசுத்தப் புலன்களின்பா ழாசையறக் கெட்டால்
அசத்தியமா மோக வகப்பா ழியற்கை
நசித்தொழிய வுன்னகத்து நன்கொளிருந் தானே.

1057. உள்ளத் துயிர்த்துணையா வுள்ளதைநன் குய்த் [துணர்ந்தோர்க்
கெள்ளத் தனையு மிடர்ப்படவோ ரேதுவில்லை;
கள்ளச் செருக்காங் கலக்கமில்பே ரின்பவருள்
வெள்ளப் பிரான்றாள் விழுத்துணையாப் பற்றுகவே.

1058. மூண்டபர மார்த்த முழுமுதற்பே ரின்பவியல்
வேண்டலுற்றார் வேண்டல் வெறுத்தலற விட் [டொழிக
காண்டலுற்ற யாவுமவை காண்பா னுளப்படவிட்
டீண்டலுற்றா லுள்ளத் தியற்பரவாழ் வோங்குமே.

1059. நேர்மை தவறாதீர் நெஞ்சந் தளராதீர்
சீர்மைசே ரன்பு செழித்தால் இறைவனருட்
பார்வையகம் பற்றலாற் பாசக் கலக்கமற்றுக்
கூர்மைசேர் மோனக் குறிதுலங்கக் காண்பீரே.

1060. கோவிக்கா தென்னைக் குறிக்கொண்டு கேளீர்நு
தேவைக் கெனவோர் சிறுதெய்வம் பேணுதீர்
சேவிக்க லுற்றுற் சிறப்பளிக்க வல்லதகத்
தாவிக்கோ ராவியா வார்ந்த சொரூபமே.

## 103 பர வித்தை

1061. வித்தை சொரூபவியல் வித்தையே மற்றையவை
மித்தையே மித்தையை மேன்மேல் வளர்ப்பனவே
புத்தியென்ற மோகப் புலப்பமாம் பந்தமறு
முத்தி சொரூபம் முனைப்பற்ற மோனமே.

1062. வித்தை சொரூபவியல் வித்தையே மற்றனைத்து
வித்தைகளும் மாயா விலாசமாங் கற்பனையே
வித்தைகளா மற்றோர் விளங்கப் பயின்றிடினும்
வித்தகர்முன் மித்தைகளா வெட்கிக் கரப்பனவே

1063. சித்தமனம் புத்திச் செருக்கா மகந்தைமுனைப்
பெய்த்தொழிவாற் பொய்த்தொழிய யானிதுவென்
[றெண்ணுமய
சுத்த வறிவுத் துலக்கமா(ம்) மோனவருள்
வித்தையா லன்றி வெளிப்படா துண்மையே.

1064. வெற்றறிவாத் தன்மெய் விளங்கத்தான் காணிலன்
மற்றறிவு முற்ற மயக்கமனக் கற்பனைகாண்
மற்றனைத்துங் கற்றறிந்த மாட்சிசேர் மேதாவி
கற்றவனுந் தன்னைக்கல் லாததென்ன கல்வியே.

1065. கற்கக் கடவதொரு கல்விதன் னுண்மையன்றி
மிக்கமற்றொன் றுண்டென்ன வேண்டல் சொரூ
[வுண்ம
கற்கலற்ற மோகவகங் காரக் கலக்கங்காண்
தக்கவா றோர்த்துணர்ந்து சார்கதன் னுண்மையே

1066. ஒற்கமுற வுள்ளத் துசாவித்தன் னுள்ளுணர்வால்
நிற்கக் கடவ நிலைதன் சொரூபமென்று
கற்கக் கடவர் கலைஞானம்; கற்றுணர்ந்தோர்
விற்கக் கடவரல்லர் மெய்ஞ்ஞான போதனையே.

1067. களிவளர்பே யாட்ட மனக் கற்பனைதீர்ந் தாலே
வெளியொளியா வுள்ளபர மெய்யுணர்வு மேவும்;
இளிவளர்வெம் பாச வியற்கையற வுண்மைத்
தெளிவளவா வுள்ளசிவச் சிந்தனையாற் றீரே.

1068. இழுக்க வொழுது வியற்செம் பதத்திற்
செழிக்கு முணர்வு சிவக்கே வலமாம்;
வழுக்க வொழுது மனத்தைத் தியானப்
பழக்க முறச்சிற் பதத்திற் பயிற்றே.

1069. கற்றறிய யாதுங் கடவதில்லை தன்சொருப
வெற்றறிவா முண்மை விளங்கில்; விரும்பிமனம்
பெற்றுவக்க யாதோர் பிறிதுமில்லை பின்னமற்ற
முற்ற முழுமுதலா மோனந் தழைத்திடிலே.

1070. உண்ணனவா வுள்ளத் துறையு மிறைவனைநன்
கெண்ணியெண்ணி யெண்ணியவவ் வெண்ணவலத்
[தாலிகயத்
தெண்ணமெழ வொண்ணு திறந்தொழியப் பொங்கு
[மியல்
வண்ணமா மோனவருள் வாழ்வுவாழ் வாவதே.

## 104. பரவெளி

(குறள்)

1071. கற்றறிந்து நிற்கக் கடவ திதயத்தில்
வெற்றறிவா மோன வெளி.

## 105. பிராணாயாமம் — தியானம்

(வெண்பா)

1072. கதமுற் றெழுமகங் காரமா மோக
மதமடங்க வாசியை வாங்கி — நிதமும்
பதமா மனத்தைப் பயிற்றுந் தியானத்
திதமாக வூன்ற லினிது.

## 106. பிரார்த்தனை

1073. பத்திக் கிடங்கொடுத்த பாதமே தேர்சகல
வித்தை களுக்கும் விளைநிலமாம்—வித்தை
எதைத்தெரிய விச்சித் திடினுங் கருத்தைப்
பதித்திடுக வந்தப் பதத்து.

(கொச்சகக் கலிப்பா)

1074. வாவா வெனநின் மதுரமொழித் தீங்குரலாற்
கூவாய் குயிலேநங் கோமான் குருபரனை;
வாழ்வாக வுள்ளத்தில் வந்து மலர்த்துவான்
சாவாத தற்பரமெய்த் தன்மைநம் மாருயிர்க்கே.

## 107 பிற பயனில்லை

(குறள்)

1075. ஆன்ம சொரூபஞா னனுபவ வேட்கையற்றூர்க்
கேனையபோ கங்க ளிழுக்கு.

1076. சிவதன்ம வாழ்வு சிறக்கலுற்றூர் நோக்கில்
அவதன்மம் மற்ற யவை.

1077. சிவத்தின்வே றகத் தெரிபவெல்லாம் பாழி
லவத்தமாத் தோன்று மறிவு.

## 108. பிறப் பிறப் பறல்

1078. சிறக்க விளங்குசிவச் செம்பதங்கண் டோருக்
குறக்கவிழிப் பின்று முணர்வு.

## 109. புலவீர்! ஆண்டவனைப் பாடுமின்

(வெண்பா)

1079. பச்சைப் பசும்பொய் பலபேசிப் பற்றைகளாங்
கொச்சைகளைப் பாடிக் குவலயத்திற்—பிச்சையேற்
றுண்டபழி பாவ மொழியப் பரவுமின்பெய்த்
தொண்டர்தொழும் பாதத் துணை.

## 110. புருஷார்த்தம்

(கொச்சகக் கலிப்பா)

1080. ஊதியமா வுள்ளத் துறத்தக்க பேறுயிர்க்குப்
பேத மயக்கப் பிழைசே ரகந்தைகூர்
பீதியற்ற ஞானப் பெருமைசா லத்துவித
நீதிசே ருண்மை நிறைவாக நிற்றலே.

1081. காணப் படுவனவுங் காண்பானுங் காட்சியாக்
காணப் படுவவெதன் கண்ணே யதுவியமா
மாணப் பெறுமம் மவுனவியற் சிற்பரமே
பேணக் கடவபெரும் பேருந்தன் னுண்மையே.

1082. பெண்டுபிள்ளை யென்றறிவு பேதலிக்கப் பற்றுடல்
[வாழ்
வுண்டுபோற் றேன்றலன்றி யுண்மையன்றுக் கண்ட
[வர்க்குக்
கண்டுகொள்ளத் தக்கவருட் கைவல்ய வாழ்வகத்து
மண்டுசிவ தற்பரமா மன்னு சொரூபமே.

1083. அத்தகநிற் கின்ற வறிவா லிதயத்து
நித்தமாத் துன்று நிஜசொரு பானுபவம்
புத்திமா ஞன புமான்புணரத் தக்கதன்றி
மித்தையாத் துன்று வெறும்புலப்பாழ் வேட்கை
[யன்றே.

1084. நேதியால் யாவையுமே நீக்கியபின் நீக்கவொண்ணு
மீதியா யாது விளங்குமோ தான்றுனும்
போதியா வுள்ளத்திற் புத்திமனங் கட்கப்பால்,
ஊதியமா வுற்றடையத் தக்கதவ் வொண்பொருளே.

குறிப்பு :—அப்பால் உள்ளத்தில் போதியா யாது விளங்குமோ அவ் வொண் பொருள் எனக் கூட்டுக. போதி - போதம், போதவடிவம்.

1085. அன்றலுற்ற மோக வகப்பே யொழிதலின்மற்
றென்றுமற்ற மோன வுணர்வொளியாம் பூரணத்
வென்றிசேர் வாழ்வு விளங்கலே ஆருயிர்க்குத் [தில்
தொன்றுதொட் டுள்ள சுவாராச் சியவடைவே.

## 111. பேரின்பம்

(வெண்பா)

1086. நல்ல சிவத்தின் மெய்ஞ் ஞான வருட்பதமே
யல்லலொருங் கற்றொளிர்பே ரானந்தம்—புல்லுமனம்
பாசப் பசுத்துவந்தீர் பாவகு தீதசிவ
தேசப் பருப்பதந் தேர்.

## 112. மத சமரசம்

(கொச்சகக் கலிப்பா)

1087. நாராய ணாய நமோநமவென் றுள்ளத்திற்
றேராநின் றுருஞ் சிவாய நமோநமவென்
றோராநின் றுரு முளத் துண்மையாக் கண்டடைவ
தாரா வமுத வருட்சிற் பதமொன்றே.

## 113. மயலறல்

(குறள்)

1088. அருட்சிற் பரவாழ் வமைந்த வகத்து
மருட்சர்ப் பனோமாய் வுறும்.

1089. அகக்கலக்க மற்ற வருட்சிற் பரவாழ்
வுகக்கலுறத் தக்க துளத்து.

## 114. மனம்

(வெண்பா)

1090. உள்ள பொருளை யுதாசீனம் பண்ணிமுற்றக்
கள்ளவுணர் வான கலக்கத்தால்—வெள்ளத்
துயர்சேர்ந்த பாழ்ங்களுத் தோற்றத் தழுந்தும்
மயர்சே ரகந்தை மனம்.

1091. தினத்தற் குரியதாத் தேக்குசிவா னந்த
வெளத்துருவே யாக விளங்கி—உளத்தூ
டியற்பரமா நின்ற விறைவனருட் சீர்மை
மயர்ப்பதே மாய மனம்.

1092. திண்மைசேர் மோனச் சிதாகாச மாகவருள்
வண்மைசேர் வாழ்வு மலர்தலுற—உண்மையா
வுள்ள வருட்பரத்தை யுள்ளத்திற் கொள்ளாத
கள்ளமனஞ் சாக் கடை.

1093. நினைந்தே தடுமாறு நெஞ்சம் புலத்தா
டினைந்தே யிராப்பகலா வேங்கி—முனைந்தே
டடுமோச பானமருட் பாழகத்து மூழ்கிக்
கெடுமால் கிறுகிறுத்துத் தான்.

1094. திறந்தவெளி யாகத் தெளிந்தமனந் தானே
சிறந்தவருட் சிற்பரமாஞ் சீர்மை—*உறழ்ந்த
வறிவுகளுக் கெல்லா மதிஷ்டான மாக
வுறுவதோ ருண்மை யொளி.

* உறழ்ந்தவறிவு - பல்வேறு வகைப்பட்ட விகற்ப அறிவு.

1095. ஒத்தமனப் பான்மைசே ருள்ளத்தே யொட்பமுறு
சுத்தவருட் பார்வை சுடர்தலுற்றுச்—சித்தமலக்
கட்டற் றொளிர்சொருபக் கைவல் லியமியல்பா
வுட்டெளிய வூரு மொருங்கு.

1096. பொறிபுலன்க ளூடுபோம் போக்கை மறித்துப்
பிறிவுபடு பேதமறப் பேணி—அறிவொடுதன்
னுள்ளே யொடுங்கின வுள்ள மகண்டவருள்
வெள்ளமா மின்ப வெளி.

1097. செம்பதமா வுள்ள சிவசொருபந் தானேபே
ரின்பவியல் பாக விதயத்தே—அன்புமய
மானவறி வொட்பத்தா லாய்ந்தாய்ந் தடங்குமனம்
வானவடி வாகும் மலர்ந்து.

1098. கற்பனைதீர் மோனவருட் கைவல்ய வாழ்வாகச்
சிற்பரதெய் வீகஞ் சிறந்தமனம்—நிற்பதன்றி
நிட்டானு பூதி நிலையிலே தன்னைவிட்டுச்
சுட்டாது கற்பிதமாஞ் சூது.

1099. வாக்கு மனத்துக்கு மட்டுப் படாதவொளித்
தேக்கமார் சாந்தித் திளைப்பிலே—சூக்கமாத்
தோய்ந்தழிந்த சித்தந் துரீயப் பதமாக
மீந்தியல்வே தாந்த வெளி.

1100. திருவிடய மாக நிகழுமனத் துண்மைத்
திருவடிமெய்ஞ் ஞானந் திகழும்—பொருள்வடிவ
ஞானத் துரீயவெளி ஞாலமுழு துங்கவித்து
நானற்ற தாஞய் விடும்.

1101. போதப் பொருளாகப் பொங்குசொரூ பானுபவக்
காதற் பெருக்கிற் கரைந்தமனம்—மோதக்
கிளர்ச்சிசேர் சுத்தவருட் கேவலமா மோன
வளர்ச்சியுற்று வாழும் மலர்ந்து.

1102. *சிற்றம் பலமாத் திகழிதயச் சிற்பரத்தைக்
கற்றன் பளேந்து கரைந்தமனம்—சற்றும்
சலியா தொளிர்சொருபத் தற்பரமா மோன
மலேயாக மன்னும் வடிவு

* சிற்றம் பலம் : - தகராகாசம் (தகரம் - சூக்ஷ்மம்).

1103. காப்பாக வுள்ளவருட் கற்பகமாஞ் சிற்பரமே
யோர்ப்பாக வுண்மை யுணர்ந்தநல்லோர்—வாய்ப்[பாகத்
தஞ்சொருப வாழ்க்கை தழைத்தொளிர்சாந்[தானுபவ
நெஞ்சமே முத்தி நிலே.

1104. வெளியாக நின்ற விசுத்தமனந் தானே
யொளியாக வுள்ளதோ ருண்மை—தெளிவான
சிற்பரமாத் துன்று சிவானுபவ மோனமே
எப்பொழுது முள்ள வியல்.

## 115. மனம் மாயம்

(குறள்)

1105. ஆயலுறிற் சற்று மதுபுலஞ காமையின்
மாயமே கண் டாய் மனம்.

1106. நஞ்சனேய மோக நவைசே ரகங்கார
வஞ்சமனம் மாயை வடிவு.

## 116. மனமே ஆன்மாவாகி விடும்

1107. தானே தா னுவகத்துத் தன்னைச்சாட் சாற்கரிக்
வா று வொளிரும் மனம்.

## 117. முத்தி

(கொச்சகக் கலிப்பா)

1108. உண்மை யுணர்வி லுபாதியுணர் வோய்ந்
[தொழி
றிண்மைசேர் சுத்தசிவச் சிற்பரவாழ் வானவிய
வண்மைசேர் சாந்தி வளந்ததும்பப் பொங்குமு
அண்மையிலு மண்மை; அதிதூர * மாணவர்க்கே

* ஆணவர் - ஆணவமுடையார்.

## 118. முனைப்பறுக

(வெண்பா)

1109. தன்று லொளிர்சுத்த சச்சித்தா மான்மவொளி
முன்றுக மூட முனைப்பொழிக—துன்றுது
பிற்பட் டகந்தையறப் பேர்ந்தொழியப் பெற்றுலே
முற்பட் டொளிருமதன் மொய்ம்பு.

## 119. மெய்ப் புலமை

(கொச்சகக் கலிப்பா)

1110. வீறுபெற்று வாழ விளங்குறுமெய்ஞ் ஞானவருட்
பேறுதவு தெய்வப் பிரானடியைப் பேணுது
சோறுகூ றைக்காகத் தொண்டுபட்டு மிண்டருக்
கூறுவரோ மெய்ப்புலவர் கூசாது பொய்த்துதிபே

## 120. மோனம்

(குறள்)

1111. மோனந் தெளிபிலன்றி முத்திப் பரமார்த்த
ஞானந் துலங்கியதன் றும்.

1112. மோன வுணர்வே முழுமுதற்பே ரின்பவருள்
வானமா மன்னுமியல் வைப்பு.

1113. ஒன்றாக வுள்ளத் துறைசொருப மோனவுணர்
வின்றேற் பரமுத்தி யின்று.

1114. மோனமே யாருயிர்க்கு முத்தி சொரூபவருள்
வான வியற்பதமெய் வாழ்வு.

1115. சூரியமோ ஞனுபவங் கூடிலன்றித் தேறரிது
நேரியதன் னுண்மை நிலை.

1116. உபசாந்த மோன வுணர்வே யுயிர்க்கு
விபவானந் தங்கிளர்மெய் வீடு.

(வெண்பா)

1117. இத்தனுவே நானென் றெழுந்துலகப் பாழிலுழற்
சித்தமல மான செருக்கறவே—சுத்தவருள்
வானமா வுள்ளம் மலர்ந்தொளிர்சாந் தானுபவ
மோனமே ஞான முடிவு.

1118. சொல்லும் பொருளுங் கடந்த சுடர்குறித்து
மல்லுக்கு நிற்கை மதியீனம்—சொல்லவொணு
மோனவுணர் வானவொரு சொல்லான்
தானவிர்ந்து நிற்றல் சதிர். [முழுமுதலாத்

1119. போதமா முண்மைப் பொலிவிலே நானெனுங்கா
ரேதமனப் பேயாட்ட மென்றுமிலே—வாதமனப்
பான்மையறச் செத்துப் பரம சிவாம்புதிசேர்
வானமா மோனம் மருவு.

(கொச்சகக் கலிப்பா)

1120. ஊனப் பழிசே ருயிர்ப்பா வுருத்துழல்பா
ழீனவகப் பேய்நா னிறந்தொழியக் கண்டபர
மோனப் பதமே முழுமுதலாத் துன்றுசிவ
ஞானப் பெரும்பதமா நண்ணக் கடவதே.

1121. சுத்தவருள் வாழ்வாத் துலங்குமோ ஞனுபவம்
மத்தவகங் கார மனத்தில் மலராது;
செத்தொழிந்த மோகச் செருக்கர் திளைத்திடுவர்
புத்தமுத போகமாப் பொங்குசிவ மோனமே.

1122. பூணக் கடவசற் போதானு பூதியே
பேணக் கடவசுபப் பேறுன சொச்சொருபம்;
மாணத் தூலங்குமவு ணனுபவத் தாலன்றிக்
காணற் கரிதந்தக் கைவல்ய வுண்மையே.

1123. ஊன வுடலுருவா வுந்தலுற்ற நானெனும்பா
றீனமற வுள்ளத் திருப்புணர்வு மாத்திரமாத்
தானொளிரும் மோனமே தத்துவமாச் சார்ந்திடுக
வேனை யெதையு மெதிரிட்டுப் பற்றுதே.

### 121. யாவும் சிவச் செயல்

(குறள்)

1124. சிவச்செயலே யாகத் தெளியிலன்றி யாவு
மவச்செயலே யென்பரறிந் தோர்.

### 122. வாழ்வு துற

(வெண்பா)

1125. வாழ்க்கையென் றூன மனைமயத்தை யெண்ணி
[நண்ணித்
தாழ்க்கைமதி மோகத் தவறுகாண்—பாழ்க்கையே
யாகவவ் வாழ்வை யகன்றுன் சொரூபசிவ
போகவாழ் வொன்றப் பொருந்து.

### 123. விசாரம்

(குறள்)

1126. பராற்பரமா வுள்ளதன்மெய்ப் பான்மையைப் பற்ற
வொராற்பதமா வுள்ள துசா.

1127. தானு ரெனத்தற் சதிர்த்தார் தலைப்படுவர்
வானு வளர்சொருப வாழ்வு.

1128. உள்ளதுதன் னுண்மையே; ஊடுருவி யுள்ளத்துத்
தெள்ளிதாங் கூர்மதியாற் றேர்.

1129. கற்பனையாற் சிந்தை கலங்காது நானெனுநின்
னுற்பவமோர்ந் துள்ளத் தொடுங்கு.

(வெண்பா)

1130. தேர்தலுற்ற ஞானந் திடப்படமேன் மேலுமகத்
தோர்தலா முண்மையுசா வோம்புக—கூர்தலாந்
தன்சொருப ஞான சமாதி சகஜமாய்
நெஞ்சமுற வேண்டு நிலைத்து.

1131. துள்ளுமகங் காரத்துடுக்கடங்க நானுரென்
றுள்ளுமுசா வான வுறுதியால்—உள்ளமுறப்
புக்கா லடையலாம் போத சொரூபமா
வெக்காலு முள்ள வியல்பு.

1132. நிலைத்திடுநீ தான்றானு நெஞ்சத்தே யுன்னை
யுலைத்தியல்பே ராசையொருங் கோய—மலைத்தெழு
மோகவகங் கார முனைப்பறநா னுரென்றுள் [புன்
ளாகவங்கூர் நோக்கா லடர்.

1133. தேற்றமுற நின்னுண்மை தீர விசாரித்துப்
போற்றும்பொய்ந் நானைப் புறந்தள்ளித்—தோற்றங்
யாவுங் கடந்தபே ரின்பப் பரவெளியா [கள்
மேவும் பதத்தில் விளங்கு.

1134. உள்ளதையுள் ளூக்கமா வோர்ந்தோர்ந்து மெள்ள
கள்ளமறக் கண்ட கருத்திலே—தெள்ளிதா [மெள்ளக்
மோனந் தலைப்படலான் முப்புடிகள் பொய்ப்படஞா
னனந்தந் துன்று மகத்து.

1135. இன்றி யமையா வெழுவாயாந் தன்னியற்கை
முன்னறியத் தக்கபெரு முக்கியமா—நின்றதனை
முற்றப் புறக்கணித்து மோகமுனைப் பாலயலே
பற்றறிவு முற்றப் பழுது.

(கொச்சகக் கலிப்பா)

1136. அன்றியொன் றில்லா வறிவே சொரூபமா
வென்றுகொண்டா லன்றி விமோசனமில் லாமை
பொன்றவகங் காரப் புலைமதிநா னன்றென்று [யாற்
மன்றவகத் தோர்ந்துறைக வாலறிவாத் தன்னு
[ருவே.

குறிப்பு :—இல்லாமையால் ஓர்ந்துறைக எனவும் என்று பொன்ற ஓர்ந்துறைக எனவும் தனித் தனியே சென்றியையும். வாலறிவே தன்னுருவாக என ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக.

1137. ஆய்ந்தறியத் தக்க வகந்தேர்ந் தறியாதார்
ஓர்ந்துணர்மற் றென்று முயிர்க்குறுதி செய்யாது;
பேர்ந்தொழிய விட்டுப் பிறவற்று நாட்டமறத்
தேர்ந்தறிய முற்படீர் தீவிரமாத் தன்மெய்யே.

1138. எண்ணவொரு சற்று மிடமிலா வத்துவித
வண்ணப் பரசொருப வாழ்வான மோனவியல்
பண்ணப் படுவதன்று பாவனையால், யானதுவென்
றெண்ணுவோன் றன்னியலாய்ந் திற்றொழிவா
[லன்றியே.

1139. துருகமாத் தோன்றினுந்தற் சோதிப்பார் சொந்த
சொரூபமே யாகத் துலங்கக்காண் கிற்பார்
திரோதமறத் தேடித் தெளிமின் சொரூபப்
பராமுதவாழ் வாமெய்ப் பயனடைகிற் பீரே.

1140. சோக மயமாகத் தூன்றும் பிறவிக்குத்
தேக வடிவாச் செருக்குற் றுழல்வறும் பாழ்
மோக முனைப்பே முதலென் றறிந்தகத்தவ்
வேக மறக்கெடுக்க வேண்டும் விசாரித்தே.

1141. எள்ளவொணுத் தன்மெய் யியற்சிற் பரவடிவை
எள்ளலே யாமுடலில் யானென் றெழுமகந்தை;
துள்ளு மகந்தைமனச் சூதறத்தன் னுண்மையை
[யாய்ந்
துள்ளமே யாகவிளங் கொட்பநுட்பந் தேறீரே.

1142. ஒன்றான வுண்மை யுளத்தியல்பா வுள்ளதனை
நன்றாக வுய்த்துணரின் ஞானானு பூதியுறும்;
பொன்றாத சுத்தவருட் பூரணங்காண் ஆருயிர்க்குத்
தோன்றான சொந்த சொரூபமா வுள்ளதே.

1143. நானா ரெனவுளத்து நாடலுற்றால் ஒட்பநுட்ப
வானான சுத்தவருள் வாழ்வா வொளிர்சொருப
ஞானானு பூதியா நண்ணுமதற் குத்தரமென்
றாறு வனுபூதி யாளர் மொழிவரே.

1144. வந்த வழியே மடுக்குமனக் கூர்மையோர்
சொந்த சொரூபமாத் துன்று சிவஞ்சேர்வர்;
பந்தமற வுண்மைப் பரபத்தி யாகவியல்
விந்தைசேர் ஞான விசாரவழிச் சேர்ரே.

1145. ஒவருதன் னுண்மையா வுள்ள சொரூபத்தைப்
பாவனையா லன்றிப் பரமார்த்த மாக்கருதல்
ஆவதன்று; தானாரென் றாழ்ந்தகத்து மோனமா
வோர்வதால் யானெனும்பொய் யோய்ந்தொழிதல்
[சாதனமே.

குறிப்பு :—கருதல் அன்று; நானாரென்று ஆழ்ந்து ஒய்ந்து ஒழிதலே சாதனம் என்பது கருத்து.

1146. போதத் தெளிவாப் பொருந்து சொரூபமே
வேதத் தலையில் விளங்கும் பரமார்த்தம்;
சார்தக்க தற்சோ தனைமுறையாற் சிச்சடப்பொய்ச்
சூதற் றொழிந்த துரீயர் பரமரே.

1147. வாயக் கடவபெரு வாழ்வுக் குபாயமாத்
தோயக் கடவதுதன் சொந்த சொரூபவுண்மை;
மேயவகங் கார விசித்திரப்பேய் வீடவகத்
தாயக் கடவதுநா னாரெனத்தன் னுண்மையே.

1148. ஆத்தம் பிறரல்லர், ஆண்டவன்பாற் பூண்டவன்
[பாற்
சோத்தம் பிரானென்று சோதனையே சாதனையாக்
கூர்த்தமெய்ஞ் ஞானக் குறிவழியே தம்முண்மை
யோர்த்துணர்ந்து தம்முயிருக் கோம்படைகா
[ணு விடலே

1149. இத்தனுவே நானென் றெழுந்துழல்பா ழாணவப்
[பேய்
செத்தொழியு மாற்றுற் சிறக்கவுளத் தொட்பநுட்ப
வித்தகமெய்ஞ் ஞான விசாரத்தாற் றம்மியலோர்ந்
தத்தகவே நிற்ற லறிவுடைமை மன்னுயிர்க்கே.

1150. இருள்சே ருலகத் தியற்கை தனைத்தான்
மருள்சே ருடலா மயங்கிக் களித்தல்
வெருள்சேர் மனத்தை விவேகத்தா லாராய்ந்
தருள்சேர் பரத்தொடுதா தான்மியந்தேர் வாயே.

1151. அகப்பே யறிவான வாணவந்தீர் காறும்
முகப்பரிது சொந்தமுழு மூதுணர்வாந் தன்மை;
தகப்பெரிய சுத்த சதாசிவமெய்த் தன்மை
முகக்கலுறு வோரகந்தை மூலந்தேர் வாரே.

குறிப்பு :—சதாசிவத் தன்மை சார்தலுறுவோர் அகந்தை மூலத்தை ஆய்ந்தறிய வேண்டு மென்பதாம். தகப்பெரிய - பெருந்தக்க.

1152. யாதானு மாக வெதிர்ப்படவே தோன்றுவது
நீதா னதுவன்று நின்னதுமன் றன்னதென
நீதா னுனது நிஜவடிவை யோர்த்துணரில்
மீதான மாக விளங்குமுன் மெய்வடிவே.

குறிப்பு :—என - என்றகற்றி; மீதானம் - பரந்தாமம்.

1153. அகந்தை முளைப்பற் றழியிலன்றி யுள்ளம்
முகந்து திளைப்பரிது மோனனு பூதி
அகந்தை முளையா தகத்தில் விசாரித்
தகழ்ந்து களைவ தறிஞர் கடனே.

1154. தன்னை யறியத் தலைப்பட்டோர் சுட்டறிவே
யன்றியா னென்னு மகந்தைமுளைப் புங்கெடலால்
என்னதுயா னென்ன லிகப்பவருட் கேவலமா
மன்னுவார் வாழ்வு மகத்தான தற்பரமே.

1155. தானே யனைத்துமாச் சாரு மகந்தைமனம்
போனலே யன்றியருட் பூரணசற் போதமுரூர்
யானே யெனதே யெனுங்கலக்கம் பொய்த்தொழியத்
தானு ரெனத்தன்மெய் யோர்ந்து*சா திக்கவே.

* சாதிக்க - வியங்கோள் வினைமுற்று.

1156. தன்னியலோர்ந் துண்மை தலைப்படலுக் கன்றிமற்
றன்னியத்தி லெல்லா மதிகரிப்ப தூழ்த்திறனே
என்னவறிந் தான்றோர் எளிமைசேர் சிந்தையற
உன்னி யுணர்வை யுசாவிற் செலுத்துவரே.

1157. வான வருள்வடிவா வைகுபரந் தானுன
மோன வுணர்வு முயங்கும் பரியந்தம்
யானென் றுருத்தெழுந்தோ றீனவகப் பேய்
[முனைப்பை
யானு ரெனத்தேர்ந் திதயத் தொடுக்குதியே.

குறிப்பு :—அருள் வான வடிவாக.

1158. தன்னை யறியத் தலைப்பட்ட தீவிரருக்
கன்னியதன் மங்க ளகன்றொழியும் பெற்றியால்
நன்னயமார் சுத்தமெய்ஞ் ஞானமொன்றே நாட்ட
துன்னுபர மார்த்த சொரூபந் துலங்கவே. [மாத்

குறிப்பு :—துன்னு - துன்னுதல் என ஏவல் வினைமுற்று.

1159. ஒன்ருக வுள்ள பிரான் பற்பலவாத் தோன்ற
[லுற்ருன்;
என்ருலு முய்த்துணர்வார்க் கேகான்மா வாவொளிர்
[வான்;
நன்ருக நாஞரென் றுள்ளாழ்ந்து நாடலாற்
ருென்ருன சொந்த சொரூபந் துலங்கீரே.

## 124. விஷய தோஷம்

1160. புந்திசெய் யக்கடவ போத சொரூபத்தை
நிந்தைசெய்த வாறன்றே நெஞ்சத்தால் இவ்வுலகில்
விந்தையா மோக வெறிசே ரகந்தையாற்
சிந்தைகூ ராசை திளைத்துழக்குஞ் சீவியமே.

1161. மரமே யனைய மனத்தார் உயிரை
யரமா வரித்தழிக்கு மைம்புலத்தை யன்றிப்
பரமா வியல்சிவத்தைப் பற்ரு தகற்றும்
முரஞன மோகவெம் பாசம்வே றின்றே.

## 125. வைராக்கியம்

(வெண்பா)

1162. மோனப் பதத்திலன்றி முத்தி விலாசவொளி
ஏனைப் பதமெதிலு மின்மையால்—வானப்
பதத்தொகையில் வேட்கை படர்மயக்கம் பொன்றச்
சதிர்த்தலுறு மோனந் தரி.

(கொச்சகக் கலிப்பா)

1163. மறவியா வேய்ந்த மனக்கற் பனையே
பிறவா மனைத்துமெனப் பேர்ந்தொழிபி லன்றி
நிறைவா வொளிர்சொருப ஞேயந் துலங்கா
தறிவா லயலை யகற்றல் கடனே.

# III. இலக்கணங் கூறல்

## 1. அகந்தை யழிவு

(கொச்சகக் கலிப்பா)

1164. ஊன வகந்தை யொழிவே சிவோகமெய்ஞ்
ஞானயோ கப்பேறு நல்லோர் கடைப்பிடிப்பர்
தானந் தவமென்று சற்குருநா தன்மொழிந்த
ஏனை *யனையவுமவ் யானற் றெழிதலே.

* அனையவும் - தானந்தவம் வேள்வி (உள்ளது நாற்பது அனுபந்தம் 13) என்னும் பாட்டிற் கண்டவை எல்லாமும்; அவற்றின் விவரம்; தானம், தவம், வேள்வி தர்மம், யோகம், பக்தி, வானம், பொருள், சாந்தி, வாய்மை, அருள், மோனம் நிலை, சாகாமற்சாவு, அறிவு, துறவு, வீடு, இன்பம் என இவை பாட்டிற் கூறப்படாவிடினும் அவை போன்ற நலங்கள் பிற எல்லாமும் ஆங்கே கொள்க.

## 2. அசுத்த மனம்

(குறள்)

1165. கறங்குபோற் சுற்றுங் கருத்தே தனைத்தான்
மறங்கலுற்ற மோக மனம்.

குறிப்பு :—மோகமனமே சுற்றுங் கருத்தென்பதாம். ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக.

1166. மோனஞா னுனுபவ முத்திப் பரசொருப
வானமே சுத்த மனம்.

## 3. அத்துவிதச் சீர்மை

(கொச்சகக் கலிப்பா)

1167. அறிவிலே தோன்று மகிலங் களும்அவ்
வறிவுருவே யன்றிமற் றன்மையால் உண்மை
யறிவுருவாந் தன்மயமே யாகவவை யொன்றச்
செறியதுகாண் அத்துவிதச் சீர்மைசேர் வாழ்வே.

## 4. அநுபூதி

1168. காரணவும் மோகமனக் கற்பனு பந்தமகல்
சீரணவும் முத்தித் தெளிவா ரனுபூதி
கோரவகங் காரக் கொடும்பேய் குலையவியல்
பூரணவாழ் வானவருட் போதத் துலக்கமே.

## 5. அமர நிலை

(குறள்)

1169. அங்கமக மென்ற வகந்தைமுனைப் பற்றொழிவே
பங்கமிலாத் தன்மையென் பார்.

1170. தெளிவார்ந்த சுத்தத் திருவருளிற் சிந்தை
யளேவே யமூத வுணர்வு.

1171. அளேதற் கரிய வமுதானு பூதி
விளேவிப் பதுமெய் யருள்.

(வெண்பா)

1172. மகத்தான வாழ்வு மடுப்பதோ ருண்மை
இகத்தே யிரண்டை யிகத்தல்—அகத்தே
அகந்தை மமதை ரகிதமே யான்றோ
ரகந்தேர் அமர நிலே.

## 6. அமுதத்துவம்

1173. ஞான சொரூபமா நண்ணலுற்ற சாந்தியே
யூனமில்பே ரின்பமா முண்மை நலன்—யானென
[தற்
றன்றமைந்த மோன வருள்வெளியாம் பூரணமாத்
தோன்று மமுதத் துவம்.

## 7. அர்ப்பணம்

1174. அர்ப்பணமாச் சிற்பதத்துக் காக்கலுற்ற வாழ்வுமனக்
கற்பனைசேர் மோகங் கழன்றொளிரும்—கற்புற்
றுதிப்பிடமாஞ் சிற்பதந்தன் னுள்ளுணர்வே யாகப்
பதைப்பறலே வாழ்வர்ப் பணம்.

## 8. அருட் கல்வி

(குறள்)

1175. தெள்ளத் தெளிந்தவருட் சீர்மையே பாசமனக்
கள்ளமறக் காணுங் கலை.

(வெண்பா)

1176. அறிவிற் கலந்த வனுபூதி யாலே
மறவியறக் கண்ட மனத்தில்—பிறிவற்
றொளிர்சொருப மோன வுணர்ச்சிகூர் சாந்திக்
களிபெருகல் வாழ்க்கைக் கலை.

குறிப்பு:—களிபெருகல் - களிபெருகக் கற்றல்.

## 9. அருட் சிந்தை

(குறள்)

1177. சிவசிந்தை சுத்த திருவருட் சிந்தை
அவசிந்தை யல்லாப் பிற

## 10. அருட் பார்வை

1178. பரஞ்சோதி யானவருட் பார்வையே வேத
விரிஞ்சா தியர்மெய் விழி.

## 11. அருட் பூரணம்

(வெண்பா)

1179. முத்திறத்த வாதனைக்கும் மூலமா மூண்டமலச்
சித்த மயக்கச் செருக்கறவே—சுத்த
வுணர்வொளியா முள்ளத் துலப்பிலா மோனப்
புணர்வே யருட்பூ ரணம்.

## 12. அருள்

(கொச்சகக் கலிப்பா)

1180. வெற்றுண்மை யாகத்தும் மெய்விளங்கி லன்றி அருட்
பெற்றி யடைந்ததெனல் பேதைமையே; வேண்டி
[யவை
பெற்றுவக்கும் பேற்றையருட் பெற்றியெனல் பிள்ளை
[மதி;
முற்றவெளி யாகவொளிர் மோனங்காண் மெய்
[யருளே.

1181. தோற்ற மனைத்துந் துரீய சொரூபசிவத்
தேற்றத்தி லற்பமுமச் சிற்பரத்தின் வேறன்று
சாற்றற் கரிய சதாசிவமா மோனவருட்
பேற்றியல்பு சுத்தப் பிரம்மானு பூதியே.

1182. வெளியாக வுள்ள விசுத்த சொரூப
வொளியே திருவருளி னுண்மை யலாமற்
களிசேர்ந்த மாயக் கனவில் அகந்தை
யிளிசேர்ந்த வேட்கைநிறை வெய்துவிப்ப தன்றே.

1183. நள்ளுநமன் பான நயப்பியல்பா நண்ணலால்
எள்ள வொணாத வியற்பரமா நள்ளிதயத்
துள்ள சொரூப வுணர்வொளியே நானெனும்
கள்ள மயக்கமறக் காணுந் திருவருளே. [பொய்க்

1184. விண்மையே போன்ற வியாமோகப் பாழிருளைத்
திண்ணியசூர் வாளாத் திருவருளே சேதிக்கும்
உண்மைப் பரமார்த்த வொட்பமா முள்ளுணர்வே
திண்மைசே ருண்மைத் திருவருளாத் தேர்கவே.

## 13. அருள் — மருள்

(குறள்)

1185. அருள்வெளியா வுள்ளதுசுத் தான்ம சொரூபம்;
மருள்வதகங் கார மதி.

## 14. அருள் வாழ்வு

(வெண்பா)

1186. இயல்பான வுண்மை நிலை யானென தென் றேங்கும்
மயல்போன சுத்தவருள் வாழ்க்கை—செயல்போக
வாண்டா னருட்பணியா வந்தரியா மிச்செயலா
மூண்டொளிரும் மோனவொளி வாழ்வு.

1187. உதிப்புற் றுழலும்பா ழூத்தை யகந்தைப்
பதைப்பறத்தன் மூலப் பதத்திற்—சதிர்த்துத்
தெளிந்தவனு பூதி சிவானுபவச் செல்வ
வளந்ததும்பு வாழ்க்கை மகிழ்.

(கொச்சகக் கலிப்பா)

1188. வருந்தலுற்ற சிந்தை கரந்தொழிந்த மாயம்
தெரிந்திலே னகத் தெளிந்தசிவ மோனம்
திருந்தவளித் தாண்ட பெருந் தெய்வப் பிரான்பாற்
பொருந்தலே சுத்தவருட் பூரணமெய் வாழ்வே.

1189. ஒன்றாக வுள்ளதன் னெட்பநுட்ப வுண்மையே
தொன்றாக வென்றுமுள்ள துங்கமா மங்களமாய்
நன்று வொளிர்சொருப ஞானனு பூதியே
பொன்றுப்பே ரின்பவருட் பூரணவாழ் வென்பரே.

1190. துள்ளுமகங் காரத் துடிப்பற் றியல்சாந்தத்
தெள்ளமுத வாழ்வே சிவானுபவ மோனமென
உள்ளவொண் ணாத வுணர்வொளியாக் கூரருளாற்
கள்ளமற்ற வுள்ளக் கருத்தில் விளங்குமே.

1191. உருப்படா வாறுதா னென்றெ றுசாவி
மருட்பா ழகந்தையை மாற்றலே தன்மெய்
யிருப்புணர் வான வியல்சே ரிதய
வருட் பூ ரணவாழ் வடையப் பெறலே.

1192. மாழ்குற் றுயிர்கள் வருந்துவதற் கேதுவாச்
சூழ்வுற்ற பாசத் தொகை*யதுவே யென்றறியிற்
றூழ்வற்ற வாழ்வாத் தருவது நா னென்னுமகப்
பாழைக் கடந்தவருட் பார்வைமீக் கூர்வதே.

*அது என்னுஞ் சுட்டு நானென்னு மகப்பாழ் எனப் பின்வருவதனைச் சுட்டிச் செய்யுளாதலின் முன்வந்தது

1193. துரியவுணர் வாகத் துலங்கு சொரூபப்
பெருவெளியே சுத்தப் பிரம்மவியல் வாழ்வு;
குருவருளின் மோனக் குறியான வுண்மைத்
தெரிவுடையோர் உள்ளமாத் தேர்ந்துதிளைப் பாரே.

## 15. அருளடைவு

(வெண்பா)

1194. தகத்தெளிந்த சித்த சமாதானத் தாலே
இகத்தோ வலாது பரத்தோ—அகத்தே
விருப்பற்ற வாழ்வா விளங்குந்தன் மெய்யே
அருட்பெற்றி யென்பரறிந் தோர்.

## 16. அருளெது மோனமெது

1195. அருளென் பதுவா லறிவே யிதயத்
திருளா மவிச்சையை யெற்றி—நிறைவான
வெற்றவெளி யாக விளங்குசிவக் கேவலமா
முற்றுவதே மோன முறை.

## 17. அறம்

1196. அறங்களுக் கெல்லா மடிப்படையாந் தன்மெய்த்
திறங்கலந்து சித்தந் தெளிந்தால்—அறம்பிறிது
செய்யவே வேண்டா சிவதரும மேகமழை
பெய்யப்பே ரின்பமுண் டாம்.

## 18. அறிவில்லார்

(குறள்)

1197. அறியுமுத லான வறிவுருவாந் தன்னை
யறிகிலார் பேதுபட் டார்.

1198. அஞ்சிக் கலங்குவோர் ஆன்ம சொரூபவருள்
விஞ்சைத் தெளிவிலா தோர்.

1199. கலங்கி மனுமையப்பொய்க் காட்சியிற்கா லாழ்ந்து
மலங்குவோர் நற்பா மரர்.

குறிப்பு :—'கவையாகிக் கொம்பாகி' என்னும் வெண் பாவில், "குறிப்பறிய மாட்டா தவன் நன் மரம்' என்றாற்போல், ஈண்டு பொய்க் காட்சியில் மலங்குவோர் ''நற்பாமரர்' எனப்பட்டார்.

## 19 அறிவின்பும் பாசவன்பும்

(வெண்பா)

1200. அறிவிற் பிறந்தமெய் யன்பே சொரூப
வுறவாம்பே ரின்ப முதவும்—குறிகுணஞ்சேர்
மோகமனப் பாசவன்பு முற்றமுற்றத் தானளவில்
சோகமே கூட்டு முயிர்க்கு.

## 20. அறிவு

(குறள்)

1201. அறிதற் கயலொன் றறியாத சுத்த
வறிவே யறிவெல்லை யாம்.

1202. மித்தைசேர் மோக விகற்பமனக் கற்பனைமுற்
றற்றொழியக் காண்ட லறிவு.

1203. மோனவருட் கைவல்ய முத்தியே தன்னுருவா
வூனமறக் காண்ப துணர்வு.

1204. முதறிவு சுத்தமா மோனமே; முத்திறமாம்
பேதவறி வூனப் பிழை.

1205. வெற்றறிவா மூண்மை விளக்கமே சுத்தவருள்,
*மற்றறிவோ ராக்கே வலம்.

*மற்றறிவு - வேற்றறிவு, பேதஞானம்.

1206. நித்தியமா மோன நிலைகண் டமைந்தவகத்
தத்தகவால் வாழ்வ தறிவு.

1207. கற்பனையிற் சற்றுங் கலங்கா திருத்தலே
*துப்பறிவுக் கான குறி.

*துப்பறிவு - அனுபவ ஞானம்.

1208. கனுத்தோற்றங் கண்டு கலங்குந்தன் னுண்மை
நனுத்தோற்ற மேமெய் யறிவு

(வெண்பா)

1209. குட்டியமே போன்றசடக் கொச்சையுட லேயகமென்
றொட்டியபொய்ம் மோக வுணர்வொழிவால்—சுட்டி
யறிதற் கயலொன் றறியா வறிவே
குறிகுணைந்தீ ருண்மைக் குலா.

குறிப்பு :—குட்டியம் - சுவர்.

1210. சுட்டற்று *வெற்றறிவாச் சும்மா விருப்பதே
முட்டற் றொளிர்சொருப மூதறிவு—பட்டிமைசேர்
சிச்சடமாத் துன்று சிதாபாசக் கற்பனையே
துச்ச மனச்சுட் டறிவு.

* சும்மா விருப்பதான வெற்றறிவு என மாற்றிக் கொள்க.

(கொச்சகக் கலிப்பா)

1211. முப்புடியுந் தாமொருங்கு மோகமனக் கற்பனையாச்
செப்படிவித் தைத்திறம்போற் றீர்ந்தொழியத் தான்
துப்பறிவே சுத்தத் துரீய சொரூபவியல்; [றுலங்கு
கற்பதற்கு யாதுமற்ற கைவல்ய மாட்சியே.

## 21. அன்பறிவு

1212. செறிவன் பறிவு சிவசொருப மென்பர்;
உறவொன்றும் மெய்யன் புணர்வின் றெளிவே;
பிறிதிலா வத்துவிதப் பெட்பார் சொருப
வறிவிலே யன்றிமெய் யன்புவிளங் காதே.

1213. பேயகக்கூத் தானபெரும் பித்தலாட் டக்கனவு
போயகல்புத் திப்பொலிவே போதவருட் பூரணமாம்;
தாயகமாத் தங்கு சதாசிவத்திற் சிந்தைதீர்
நேயமகம் பற்றலுற்ற நீர்மைசிவச் சீர்மையே.

## 22. அஜாத சித்தாந்தம்

(வெண்பா)

1214. பந்தப் படாதவருட் பார சொரூபமே
சொந்த வியல்பாச் சுடர்தலால்—அந்தத்
தஜாதவா தங்கூ றரும்பொருளே யான்ற
சுஜாதயா மோனத் துணிபு.

குறிப்பு :—அந்தம் - மறைமுடியின் முடிவு கூறுகின்ற அரும் பொருள் என்க.

## 23. ஆராதனை

1215. பசைந்தபசு பாசமயற் பற்றற் றொழிய
விசைந்துசிவ பத்த ரினத்தே—கசிந்துசிந்தை
நீராள மாயுருகு நேயமே யாண்டவனுக்
காரா தனைசெய் யடைவு.

## 24. ஆன்ம இயல்

1216. மனோமயமாஞ் சிச்சடஜீ வத்துவமே யுண்மைத்
தனுதியல்போ லெண்ணித் தருக்கும்—இனுதகொடும்
பொல்லாங் கிலாதொளிர்சற் போதவருட் கேவலமே
நல்லான்ம வுண்மை யியல்.

## 25. ஆன்ம சொரூபம்

1217. ஈண்டுவதா யுள்ளத்தே யானுரென் றாடுருவித்
தூண்டவெளிப் பட்டுத் துலங்குவதாய்—மூண்டபழ
மூலா ணவப்பிழையை மோசிப்ப தாகவொளிர்
வாலறிவே யான்ம வடிவு.

## 26. ஆன்ம தரிசனம்

(குறள்)

1218. ஓர வொளுதபர வுண்மையே தன்னுருவாக்
கூரறிவே *காட்சிக் குலா.

*காட்சி - பரமான்ம தரிசனம்.

## 27. இதய வெளி

(கொச்சகக் கலிப்பா)

1219. சுடர்விடுசற் போதத் துரீயமே யுண்மைக்
கடவுளா வுள்ளங் கலந்துநீங் காமற்
றொடர்வதால் †ஏனையதஞ் சோபை யிழக்கப்
படர்வளா கங்காண் பரநிலையென் பாரே.

†ஏனைய - ஜாக்ர ஸ்வப்ந சுஷுப்திகளான மற்றைய மூன்றவஸ்தைகள்.

## 28. இதய ஜோதி

(வெண்பா)

1220. உண்டில்லை யென்னு முபயத்திற் பட்டதன்று
கண்டதில்லை யாருமதைக் கட்புலனுப் – பண்டுபோ
லென்றும் பராற்பரமாய் யானெனன் பதப்பொருளாய்த்
துன்று மிதயச் சுடர்.

## 29. இறை

(குறள்)

1221. காண்பானுந் தன்னிலே காட்சியற வூன்றியுளத்
*தேண்படநின் றேனே யிறை.

*ஏண் – உரம்.

## 30. இறை பணி

(கொச்சகக் கலிப்பா)

1222. மோனத்தா லன்றி முகக்கவொணுச் செம்பத
தானத்தில் வாழ்வு சதாசிவமாத் தானலர [மெய்த்
ஞானத் தபோதனனு நாயேனை யாண்டவன்பால்
யானற் றொடுங்கி யியங்கல் இறைபணியே.

1223. ஊனக் கலக்க மொழிய வுதாரமெய்ஞ்
ஞானவருட் பார்வையொளி நல்கியநல் லாண்டவனுக்
கானதிருத் தொண்டுநா மாற்றுவது பாழ்மோக
நானுதியாத் தன்னிழப்பு நாட்டமகம் பேணலே.

## 31. உண்மை

(குறள்)

1224. அறிவான வுண்மையே யுண்மைமற் றல்லாப்
பிறவான வுண்மை *பிழை.

*பிழை - பொய், மித்தை.

1225. அறிவான மெய்யன் பலர்தலே இன்ப
நிறைவான வுண்மை நிலே.

1226. உண்மை நிறைவா வுளத்தொளிர்சற் போதவருள்
வண்மையே பேரின்ப வாழ்வு.

(கொச்சகக் கலிப்பா)

1227. உள்ள சொரூப வுணர்வொளியிற் கற்பனையாத்
துள்ளு மனந்த்விதத் தோற்றப் புலங்களைமுற்
றெள்ளி யுபேட்சித் திதயத்தில் யானுரென்
றுள்ளுணர்வா லாராய்ந் துறுவதுகா ணுண்மையே.

1228. வெறிசே ரகந்தை விளிந்தொழியத் தம்முட்
செறிவான சுத்த சிவத்தியா னத்தால்
அறிவான மோன மகத்தொளிர்கை குன்று
நிறைவான வுண்மை நிலேயி னியல்பே.

1229. மற்றவறி வெல்லாம் மனுமையப்பொய்க் கற்பனையா
அற்றொழிய வுள்ளத் தகப்பாழை யூடுருவி
வெற்றவெளி யாக விளங்கு சொரூபமா
வுற்றவறி வென்பர் உபநிடந்தேற் றுண்மையே.

1230. சுற்றுமனக் கற்பனையாத் தொக்கதொரு நானெனும்பா
முற்றமறச் சூழ்வா லறிவாந் துரீயமே
முற்றமுடி வானபர முத்திப் பெரும்பதமா
வுற்றடைய வேண்டு முயர்சொருப வுண்மையே.

1231. *உளனென்னு மவ்வளவா வுற்ற வுணர்வே
களமில் கடவுளியற் கைவல்ய வுண்மை
வளமொன்று சுத்தவருள் வாழ்வாக வுள்ளத்
தளையின்ப மோன வகன்பெற்றி வீடே.

*உளன் - உள்ளேன், இருக்கின்றேன்.

## 32. உண்மை அரசு

(வெண்பா)

1232. ஆட்சிசெய் கின்ற தனைத்துலகுந் தானிமையாச்
சாட்சியா நின்றொளிர் சிற் சத்தியே—மாட்சிசேர்
காட்சியா மந்தவருட் கைவல்ய சித்திபெற்றோ
ராட்சியே யுண்மை யரசு.

1233. தள்ளற் கரிய சதாசிவமா மோனவருள்
வெள்ளப் பரவெளியே மெய்யாக—உள்ளத்
தவலோ கனமா வவிர்சொரூப வாழ்வே
சிவலோக சாம்ராச் சியம்.

(கொச்சகக் கலிப்பா)

1234. சிவத்தையல் லாது செழும்பொருள்வே றில்லை;
தவத்தா லதனைத் தலைப்பட்டோர் மோக
வவத்தை யறச்சே ரதீதவாழ் வான
சுவத்த வியல்காண் சுவாராச் சியமே.

## 33. உண்மை நஞ

(வெண்பா)

1235. கதிகண்ட வாழ்வே கடக்கவொணு மாயை
யதிகார வாட்சி யடங்கச்—சதிகார
மாயமனஞ் செத்து மனதீத மாகவொளிர்
நாயகமா முண்மை நஞ.

## 34. உண்மை வழிபாடு

1236. அகத்து டகமா வவிரும் பரனுக்
ககமே நிவேதன மாக—அகம்பரமாக்
கூடுமனு பூதிக் குலாவான சாந்தியே
நீடுபர பூஜை நிறைவு.

(கொச்சகக் கலிப்பா)

1237. மருட்செருக்கா(ம்) நானெனும்பொய்ம் மானம்
[முதலா
ஒரிச்சையுமில் லாவெற் றுணர்வான வுள்ளத்
தருட்சிற் பரமா வமைந்த சிவத்தை
அருச்சிப் பதுமெய் யறிவிற் செறிவே.

1238. சுத்த வறிவே தொழத்தக்க தெய்வமா
வித்தகசற் பத்தி விளைவேமெய்ஞ் ஞான நிஷ்டை;
உய்த்துணரும் பெற்றியோ ரோமென் றுடன்படுதற்
கொத்த சமரசமா முண்மை வழிபாடே.

1239. கணிக்கவொண்ணுக் கைவல்யக் காட்சியுண் டாக
அணுக்கமா வுள்ளத் தழுந்தலாற் சற்றுந்
தணக்கவொண்ணு வத்துவிதத் தன்மையிற்று
[ஞென்று
மிணக்கமே ஞான வணக்கத்தின் மெய்யே.

1240. ஞானபூ மிக்கண் ணடப்பார்க் குடற்சடத்தில்
யானென்று(ம்) மோகவுணர் வெய்த்தொழிவே
[சுத்தவருள்
வானக் கடவுள் வணக்கமென மன்னுபர
மோனந் தெளிந்ததிட மூதறிஞர் சொல்வரே.

1241. தணவலுக் கேதுவாச் சார்ந்தமனத் தஞ்ச
வுணர்வே தனக்குகந்த வூணாக வுட்கொண்
டணவலுற்ற மோன வருள்வெளியாம் பாத
வுணர்வே சிறந்த வுபாசனையென் பாரே.

குறிப்பு :—தணவல் - பிரிதல்; தஞ்சவுணர்வு - எளிமை
யான வுணர்வு; என்றது 'நான்' என்னும்
அகந்தை வடிவான ஜீவபோதத்தை.
பாதவுணர்வு - பாதவடிவான வுணர்வு.

## 35. உணர்வு—அறிவு

(குறள்)

1242. சத்திசிவந் தம்மிலொரு தன்மைத்தாத் தன்னிடத்தி
லொத்தியங்கக் காண்ட லுணர்வு.

1243. சலித்தமனஞ் சத்தி, சலியா தகமா
நிலைத்தமனந் தற்பரமே காண்.

## 36. உள்ளம் (இதயம்)

1244. உள்ளம் பரந்த வொளிவெளிப்பே ரின்பவருள்
வெள்ளம், பரந்தெளிந் தால்.

1245. ஒளியுள்ள மான வுணர்வே சொரூபக்
களிவெள்ள மான கருத்து.

1246. உண்மைப் பரசொருப மோர்த்துணர்ந்தா
வண்மைசே ரின்பவருள் வாழ்வு. [ருள்ளமே

(கொச்சகக் கலிப்பா)

1247. மதியை யகத்தே மடக்கித் தனுஅ
துதயமெங் கென்றுதன்னுள் ளூடுருவிக் கண்ட
விதய வடிவா விருந்தொளிர்சச் சித்தே
பதியின்மெய் யென்பர் பரங்கண் டவரே.

1248. சததவாழ் வான சதோதயமாப் பொங்கும்
இதயமே காண்கவுயிர்க் கேமமா முத்தி;
இதமக மென்ன விரண்டு படத்தன்
னெதிர்மலை ஞான வியல்பே *மயல்பே.

*மயல்பு - அஞ்ஞான சம்சாரம்.

1249. கயக்க மகிழ்ச்சி கலக்க மிலக்கம்
மயக்க விகற்பமா மாய மனப்பொய்ம்
மயற்கற் பனைசேர் வறும்பாழ் கடந்த
வியற்சிற் பரந்தா னிதயமென் பாரே.

1250. துனிப்போ டுவத்தல் சுரிதல் விரிதல்
முனைப்பு முடங்கல் முழுங்க லமுங்கல்
நினைப்புமறப் பற்றசிவ னேயமே தன்மாட்
டெனைப்பற்று மற்ற விதயத் தியல்பே.

## 37. ஒடுக்கம்

(குறள்)

1251. அடங்கி யொடுங்கி யமைந்தொழுகும் மோனம்
மடங்கலரு முண்மை வலன்.

(கொச்சகக் கலிப்பா)

1252. சுட்டறிவு சாலச் சுருங்கிச் சுருங்கிப்பின்
சுட்டுமகங் காரமனச் சூதே தொலைதலால்
வெட்டவெளி யாக விளங்கு சொரூபவறி
வுட்டெளிந்த மோன வுரன்கா ணொடுக்கமே.

## 38. குரு

(வெண்பா)

1253. எவரிடத்துன் சித்த மியல்பாக முற்றக்
கவரப் படுவதாக் காண்பாய்—அவரே
உலகிலுனக் கேற்ப வுடையான் வடிவாக்
குலவுறுசற் போத குரு.

1254. கருக்களவு கொள்ளுங் கருணை நிதியா
வுருக்கிளர்வுற் றோங்கு மொருவன்—இருக்கத்
தெருக்களிலே வந்து திரிந்துழலும் போலிக்
குருக்களை நீ கொள்ளா தொழி.

1255. செத்துவாழ் சித்தனுந் தெய்வத் திருஞான
புத்தனே சற்குருவாப் பொங்குவான்—புத்திக்
கலைஞானி தானே கதிகாணு னுண்மை
நிலையுணர்த்த வெங்ஙன் பிறர்க்கு.

1256. வானவர்க்கு மேலான வான்பதமா வோங்குசுப
மோனவருட் செம்பதமா முத்தியொளி—மானவரா
மீனவருள் ளத்தூ டெறிப்பமுகங் காட்டுறுமெய்ஞ்
ஞானரவி ஞான குரு

(கொச்சகக் கலிப்பா)

1257. ஒன்றான வுண்மை யுணர்வால் உறுதிசேர்
தொன்றுண வாழ்வு சொரூப சுபாவமா
நன்றாத் தெளிந்து நடைபெறு(ம்)மோ ஞனுபவக்
குன்றேறி நின்றார் குருக்களாத் தக்காரே.

## 39. குரு பாதங் கூடல்

(குறள்)

1258. வெம்பந்த பாசவகம் வீடல் குருபாத
சம்பந்த மாமெய்ச் சதிர்.

## 40. கைவல்யம்

1259. உள்ளத் துணர்வொளியா வுள்ளவருட் பேரின்ப
வெள்ளவியல் கைவல் லியம்.

(கொச்சகக் கலிப்பா)

1260. தெரிவரிய மோனந் தெளிந்தவகந் தானே
பிரிவரிய சுத்தப் பிரம்மகை வல்யம்
துரியவியல் பாகத் துலங்கு சொரூபம்
விரியப் பரந்த விசுந்தவெளி யன்றே.

1261. வெற்றறிவே தானா விளங்குறுமெய்ஞ் ஞானமன்றி
மற்றறிவு யாவும் மயக்கமனக் கற்பனைகாண்
உற்றறிய யாதோ ருபயமுமங் கில்லையெனக்
கற்றறிவே யத்துவிதக் கைவல்யக் காட்சியே.

1262. கண்ணு விதரங் களைப்புலனைக் காண்டலன்றிக்
கண்ணால்அக் கண்ணையே காணவொணு வாங்கே [அக்
கண்ணுக்குங் கண்ணான தன்னையும்வேற் றுப்புலன் [போற்
கண்டறிய வொண்ணாமை கைவல்ய வுண்மையே.

1263. கண்டதே கண்டதே காணுது சுட்டறிவாற்
கண்டிடவொண் ணுதவருட் கண்ணுன தன்னியலை
உண்டகமென் ருெட்பநுட்ப வுள்ளுணர்வாம்
[மோனத்தாற்
கண்டிடல்காண் அத்துவிதக் கைவல்யக் காட்சியே.

1264. ஈட்டமுற்ற வொன்ருய் இதுபோற்கா னென்றெ
டுத்துக்
காட்டவிரண் டற்றவருட் கைவல்யச் சீர்மைசேர்
வீட்டுருவா வென்னுள் விளங்குங் குருரமண
நாட்டமே மிக்கசிவ ஞானவியற் காட்சியே.

1265. அறிவிலே மற்ருென் றறியப் படாமெய்ச்
செறிவே பரம சிவக்கே வலமாம்
பிறிவிலா வந்தப் பிரம்ம சொரூப
வறிவிலே யில்லை யகப்பேய் மனமே.

1266. துளங்குமகங் காரமனச் சுட்டுணர்வாம் புத்திக்
களங்கமில்கை வல்யக் கடவுளியற் காட்சி
உளங்கொள்பா சாணவப்பா ழுடுருவித் தானு
விளங்குபர மான்ம விசுத்தவருட் பேறே.

1267. கலக்கமில்வாழ் வானவருட் கைவல்ய வுண்மைத்
துலக்கமே சுத்த சொரூபானு பூதி;
அலைக்கு மகப்பே யறிவான மோகப்
புலைக்கலிபொன் றத்தொலையப் பொங்குசிவ
[மாண்பே.

1268. ஊனமனக் கற்பனைதீ ரொட்பநுட்ப மாட்சியால்
யானெனதற் றுள்ள வியற்கே வலவுணர்வே
மோனவருள் வாழ்வான முத்திநிலை, மிக்கபர
வானவெளி யாக வளங்கெழுமை வல்லியமே.

## 41. சதாசாரம்

### (குறள்)

1269. சிவமா வியல்சொரூபச் சீர்மைசேர் மோனத்
தவமே சதாசாரச் சால்பு.

## 42. சாகாத திறன்

(வெண்பா)

1270. அறிவுக் கறிவா வவிர்சுத்த மோனச்
செறிவாக வுள்ள சிவத்தே—குறிகுணஞ்சேர்
மோக வகந்தைமுழு முற்றும் பலியாகச்
சாகலே சாகாத் திறன்.

## 43. சாட்சி

1271. கர்த்தத் துவத்தாற் கலங்கு மகந்தைமதிச்
சித்தக் கலக்கந் தெளிந்துநின்ற—சுத்த
வறிவொளியாந் தானே யகிலங் களுங்கண்
டறிவதோர் சாட்சி யறி.

## 44. சாதனை

(குறள்)

1272. சிவமே வடிவாந் தியானமே சுத்தத்
தவமா வியல்சா தனே.

(கொச்சகக் கலிப்பா)

1273. மூண்ட வகங்கார மோகமுனேப் பற்றொழியக்
காண்டலா லன்றிக் கருத்துக் கமைதியில்லை;
மீண்டுமீண் டுஞ்செய் விசாரத்தா லந்தமுனேப்
பீண்டலற வுள்ளத் திறப்பித்தல் சாதனேயே.

## 45. சாந்தி

(குறள்)

1274. உண்மை யுணர்வா லுளத்தே யுறைத்தமனத்
திண்மையே சாந்தித் திறன்.

1275. ஐம்புலச் சேற்றிலழுந் தாவேச மோகவகப்
*பம்பறலே சாந்திப் பதம்.

*பம்பு - எழுச்சி, பரத்தலுமாம்.

1276. கற்பனைசேர் மோகக் கருத்தற் றொழியவொளிர்
துப்பறிவே சாந்தி சுகம்.

1277. உரைகடந்த மோன வுணர்வொளியாம் பாதம்
கரைகடந்த சாந்திக் கடல்.

1278. அருள்விளக்க மான வனந்தசிவச் சீர்மை
மருவலுற்ற வாழ்வே மகிழ்.

(வெண்பா)

1279. குறையா மகந்தைமனக் கோலா கலங்கெட்
டறவொழிய வாண்டா னருளால்—அறிவாகச்
சித்தந் தெளிந்த சிவத்துவமா மோனமே
சத்தமற்ற சாந்திப் பதம்.

(கொச்சகக் கலிப்பா)

1280. அணவலுற்ற மோக வகந்தையறத் தன்மெய்
யுணர்வுதெளிந் துள்ளத் தொளிவெளியாஞ் சீர்மை
புணர்வதே சுத்தவருட் பூரணவாழ் வாகத்
தணவலற்ற சாந்தி சதாசிவமென் பாரே.

1281. கொள்ளக் குறையாக் குணாதீத மோனவருள்
வெள்ளக் கடலா விளங்கு சுபாவநிலை
தெள்ளத் தெளிந்து திளைத்தலே சாந்தியன்றிக்
கள்ளமயக் கத்திற் கருத்து முடங்கலன்றே.

1282. மலக்கமா மோக மனப்பாழுக் கப்பால்
உலக்கலரு முண்மை யுணர்வா லகந்தைக்
கலக்கமற நீடுசிவக் கைவல்யக் காட்சித்
துலக்கமார் சாந்தி துரியமனப் பண்பே.

குறிப்பு :—**அப்பால்** நீடு என வியையும்.

## 46. சான்றாண்மை

(வெண்பா)

1283. அகந்தை மதியே யனைத்துப் பிழையும்
முகந்துநிற் கின்ற முதலாம்—அகந்தைமதி
தோன்றா தொழிந்த சொரூபானு பூதியே
சான்றாண்மை யென்னத் தகும்.

## 47. சித்தா

(குறள்)

1284. ஸித்தமா வுள்பொருளைத் தேர்ந்துறைவோர் ஸித்த
மத்தரே மற்றவரெல் லாம். [ரன்றி

## 48. சிவ சாக்ஷாத்காரம்

(வெண்பா)

1285. இறைவன் பரமா வெலாவற் றையும்விட்
டிறைவனினை வன்றிமற்றென் றின்றி—இறைவன்
செயலாக வெல்லாச் செயலுந் தெரியு
மியல்புசிவ ஞானமென் பார்.

1286. உண்மை நனுவா வொளிர்சொருப ஜீவியமே
திண்மைசேர் சுத்த சிவானுபவம்—வண்மைசே
ரந்தவருட் பார்வை யகண்டபர மாத்துவித
விந்தைசேர் மோன வெளி.

(கொச்சகக் கலிப்பா)

1287. நானெனும்பொய்த் தன்மை நழுவலே சுத்தசிவந்
தானெனுமெய்த் தன்மை தழுவுமுண்மை, மன்னு
டானமா வுள்ள சதாசிவமாந் தற்பரமெய்ஞ் [மதிஷ்
ஞானசொரூ பத்திலில்லை நஷ்டமொடு லாபமே.

1288. வெளியாக வுள்ளம் விளங்கலே உண்மைத்
தெளிவான சுத்த சிவானுபவ மாட்சி
களிசே ரகந்தைமனக் கற்பனு பேதம்
அளையா வருட்கே வலசொரூப வாழ்வே.

1289. புத்தமுத மானசிவ போகமாப் போற்றுவது
வித்தகமெய்ஞ் ஞான விசாரத்தா லுள்ளத்து
மத்தவகப் பேய்ச்செருக்கு மாய்ந்தொழியப் பொங்கி
சுத்தவருட் பார சொருபானு பூதியே. [யெழு

## 49. சிவ நாட்டம்

(வெண்பா)

1290. திரிசியத்து நாட்டமறத் தீர்தலே சுத்தப்
பரசிவத்து நாட்டமகம் பற்றல்—தெரிஜகத்தைத்
தேர்சுட் டறிவைத் திருப்பிற்றன் னுண்முகமாய்த்
தேசுற் றொளிருஞ் சிவம்.

## 50. சிவ மாண்பு

(குறள்)

1291. உறங்கல் விழித்தலற வுள்ளுணர்வாப் பொங்குந்
திறங்காண் சொரூபசிவச் சீர்.

1292. சும்மா விருக்கத் துலங்குசொரூ பானுபவச்
செம்மாண் பதமே சிவம்.

1293. வித்தார மாக விளங்கு சிவத்துரிய
சுத்தோகந் தானே சுபம்.

1294. ஒளிவெளியே தாமா வுறங்குவோ ருள்ளத்
தெளிவியலே சுத்த சிவம்.

1295. உண்மையள வாக வுணர்வு தெளிந்தவகம்
திண்மைசேர் சுத்த சிவம்.

1296. அறிவான வுண்மை யகமேகாண் எங்குஞ்
செறிவாக வுள்ள சிவம்.

1297. உள்ளலற்ற மோன வுணர்வான வுள்ளமே
தெள்ளத் தெளிந்த சிவம்.

(வெண்பா)

1298. உத்தமசற் பத்தி யுணர்வொளியின் சீர்கிளரும்
சித்தமே சுத்த சிவலோகம் *பத்தியருள்
வெள்ளத்தின் மூழ்கலாற் பாசம் விமோசனமாய்த்
தெள்ளிதாஞ் சீவன் சிவம்.

*பத்தியருள்வெள்ளம் - பரபத்திவடிவான அருள் வெள்ளம்.

1299. நட்ட நடுவே நமது சொரூபமாய்
நிட்டையிலே யாது நிகழுமோ—சுட்டற்ற
சுத்தவருட் கேவலமாய்ச் சூனியங்காண் சாட்சியாஞ்
சித்ததுவே சத்தாஞ் சிவம்.

1300. சிவானந்த மோனத் தெளிவிலே ஜீவ
சுவாதந் திரியமறச் சொக்கி—அவாவுந்து
கர்த்தத் துவஞ்சேர் கதகதப்பாஞ் சிந்தையறிற்
சித்தத் துருவே சிவம்.

1301. நிலமான மோன நிறைபதமா மொன்றைப்
பலவிகற்பம் போற்கற் பனையாற்—புலமா
வறிந்தவறி வெல்லா மறியாமை யாகத்
திறந்தவெளி தானே சிவம்.

குறிப்பு :— **நிலம் - அடித்தளமான அதிஷ்டானம்**

1302. மற்றுப் பிறிதை மதித்துத் தடுமாறும்
பெற்றி யகந்தைமனப் பேதைமையே—வெற்றறிவாச்
சும்மா விளங்கு சொரூபவுண்மை தானகச்
செம்மாந் திருத்தல் சிவம்.

1303. வாக்கு மன முள்ளே மடங்கியமெய் யன்பர்க்கு
மாக்கருணை வெள்ளவருள் வாழ்வாக—யார்க்கும்
விரோதமற்ற மோன வெளிதானே சற்றுந்
திரோதமறப் பொங்கு சிவம்.

1304. நினையா நினைவான நிஷ்டை யுணர்வாற்
றனையா றறிந்து தரிப்பார்—தனியான
சுத்தவருட் கேவலமாத் தன்றுபரஞ் சோதியில்
சித்தரவர் தாமே சிவம். [வாழ்

1305. ஊறுவகா மோன வுணர்விலே தானதுவாத்
தேறுவதே ஞான சிவானுபவம்—வேறுபடத்
தோன்றுந் துவிதமயல் சொப்பனமாங் கற்பனையே
போன்றொழியும் போதப் புலத்து.

1306. பரமாணு வுக்கும் பரமாணு வாகத்
திரமோன வாயிலாத் தேரும்—பரமான
வவ்வுண்மை தானோ யகிலமுந்தன் ஞெரொளியால்
வவ்வு சிவக்கே வலம்.

(கொச்சகக் கலிப்பா)

1307. களங்கலந்த பாழ்மயக்கக் கற்பனையூ டாழ்ந்து
துளங்குமனச் சுட்டறிவாஞ் சூதற் றொழிய
விளங்கலுற்ற சுத்த விபூதிநிலை நானற்
றுளங்கிளர்வாழ் வாவோங் குதாரசிவ மாண்பே.

1308. ஒளிவெளியா முண்மை யுணர்வுருவா வுள்ளந்
தெளிவுறலே சுத்த சிவானுபவ மாட்சி
இளிவளர்யா னென்னும்பா ழெவ்வாற்று லேனும்
விளிவுற்று லன்றி விளங்காத்தன் மெய்யே.

1309. கப்புமகங் காரமனக் கங்குலா மங்குலறச்
செப்பமா வுள்ளசிவச் செம்பதமே ஆருயிரின்
முப்புடியாங் கற்பனையை முற்ற முருக்கியகத்
தொப்பமா வைகு முபசாந்த வொண்பதமே.

## 51. சிவயோகம்

(வெண்பா)

1310. உள்ளமாந் தானே யொளிசேர் பரமாக
வுள்ளலற வுள்ளல் சிவயோகம்—கள்ளமனச்
சிச்சடம்பே திக்கத் திறந்தொளிர்சற் போத*வெளி
நிச்சலமெய்ஞ் ஞான நிலை.

*வெளி - வெளியாக நிற்றல்.

## 52. சிவ லோகம்.

1311. மெய்யகமா வுள்ள விசுத்தவருட் செம்பதமே
தெய்வவொளி சேர்ந்த சிவலோகம்—வையகமும்
வானகமுந் தன்மயமா வாரி வளைத்தசிவ
மோனவெளி முத்தி முதல்.

## 53. சிற்றம்பலம்

1312. செருக்கற் றொழியத் தெளிந்த வுணர்வால்
இருக்கையாப் பெற்ற விதயம்—வெருக்கொண்
டியன்ற மனோமயத்தை யெற்றியதற் கப்பாற்
பயின்றுவளர் சிற்றம் பலம்.

## 54. சிறப்பு

(குறள்)

1313. மறப்புநினைப் பற்ற மனத்தெளிவே சுத்தச்
சிறப்பென்னு முண்மைத் திறம்.

## 55. சின்முத்திரை

(வெண்பா)

1314. உண்மை யுணர்விரண்டு மொன்றியொன்று
[வேறின்றித்
திண்ணமொன் றேயாந் திறத்தால்வேற்—றெண்ண
தற்குறியா வவ்வுணர்வு தான்றான நிற்றலே [மறந்
சிற்குறியாற் றேறும் பொருள்.

## 56. சுகம்

(வெண்பா)

1315. சாட்சியா வுள்ள வருட் சைதன் னியசொருபக்
காட்சியே கேவலமெய்க் காட்சியென்பர்—பூட்சிசேர்
யோக வுணர்வா லொடுங்கியுளத் தோன்றுபடல்
சோகமோ கந்தீர் சுகம்.

1316. மயக்கவுணர் வாலே மடுப்பரிதாய் நானற்
றுயிர்க்குமுணர் வுக்கே யுரித்தாய்—நயக்க
வகமகமென் றுள்ளே யவிர்சொருப மோன
சுகமே பிரம்ம சுகம்.

## 57. சுபம்

(குறள்)

1317. பரந்தியல் சாந்திப் பதவுணர்வா மோனஞ்
சுரந்தவியல் வாழ்வே சுபம்.

1318. தெரியமற்ருென் றற்ற சிவாத்துவித மோனத்
துரியவியல் வாழ்வே சுபம்.

(வெண்பா)

1319. இரண்டற்ற வுண்மை யியல்பா முணர்வை
மருண்டமனக் கற்பனையான் மாற்றி—வெருண்டு
கலங்குந் துவிதவகங் காரமயல் செற்றுத்
துலங்குபரந் தானே சுபம்.

## 58. சொரூப அடைவு

(குறள்)

1320. எவ்வறிவை யன்றி யெதுவுமே யின்ருமற்
றவ்வறிவே தன்மெய் வடிவு.

1321. உள்ளமே யாகவவ் வுள்ளத்தே யுள்ளானுக்
*கொள்ளிமையே யுண்மை யுரு.

*ஒள்ளிமை - பிரஞ்ஞானம்.

(வெண்பா)

1322. அடங்கி யடங்கி யகத்தூ டகந்தை
யொடுங்கவுற்ற மோன வுணர்வில்—கொடுங்கலி
யாட்சியறப் பொங்கு மகண்ட சிவானுபவ [செய்
மாட்சியே தன்சொருப வாழ்வு.

1323. உள்ளவெளி யான வுதாரவருட் சிற்பரமே
துள்ளலற்ற மோன சொருபவியல்—கள்ளமனக்
கற்பனை மோகக் கலக்கமற்ற சாந்தியே
சிற்பரா னந்தத் திறம்.

குறிப்பு :—உள்ள வெளி - தகராகாசமான இதயவெளி;
கலக்கமற்ற - கலக்கமறத் தெளிந்த

(கொச்சகக் கலிப்பா)

1324. உணர்வான தானே பரமார்த்த வுண்மை
புணர்வான மற்றனைத்தும் பொய்யே அயல்போல்
அணவவொண் ணாத வதீதமாந் தன்னைப்
புணர்வதுநா னென்னுமயற் பூண்டற் றெழிவே.

1325. விந்தைசே ரின்ப விழுப்பதவி துன்பமயச்
சிந்தைசேர் மோகச் செருக்கற்ற தன்னியலே
நிந்தைதீர் சுத்தமெய்ஞ் ஞேயசொரூ பானுபவப்
புந்தியே ஆன்றசிவ போகமாப் பொங்குவதே.

1326. உணர்வே பரமார்த்த வுண்மையாந் தன்னிற்
றணவா துறைத்தலே ஞான சமாதி
அணவ வொணாத வதீதப் பரத்தை
யணவல்யா னென்னு மகந்தையுணர் வோய்வே.

1327. ஒப்பமா வுள்ள வுதார குருரமணச்
செப்பமா மோனஞ் செழிக்கலாற் சிந்தைநிறை
பப்பறுவாழ் வாமோர் பரமோப சாந்தசிவத்
துப்புரவே சொந்த சுவாராச் சியவியல்பே.

1328. உணர்வுருவே யாக வொளிர்கலால் வேறு
வுணரவொண்ணா தசொரூபமாந் தன்னைப்
புணர்வதுநா னென்னுமகப் பூட்டுடைந்த வுள்ளத்
தணவலுறும் மோன வலர்ச்சித் தெளிவே.

1329. சித்திகளி லெல்லாஞ் சிறந்த சொரூபசித்தி
புத்தியித யத்தே பொருந்தலாற் கற்பனைதீர்
வித்தகமெய்ஞ் ஞான விளக்கமாத் தன்றுசுப
முத்தி மனோதீத மோனப் பரவெளியே.

1330. பிறிவற் றியல்சிவப் பெட்பான தன்மெய்
யுறவற் றுருவெளித் தோற்றநோக் கத்தால்
அறிவற் றெழிந்த வகந்தை மனப்பா
முறவற் றெழிவே சொரூப வடைவே.

1331. சித்தோப சாந்தித் திளைப்பில் விளங்குவதே
முத்தோக மாக முடிந்தநா னனுபவம்
*முத்தோட மேய்ந்த முனைப்பா மகந்தையறச்
செத்தோ ரகமே சிவசொருப மென்பரே.

*முத்தோடம் - காம வெகுளி மயக்கங்கள்.

1332. மிச்சையாத் தோன்று வெறுங்கற் பனைஜாலத்
தச்சங் களுக்கு மவாக்களுக்கும் வித்தான
குச்சிதமா மோகக் குடில வகந்தையற்றுற்
சொச்சமாத் துன்று சொரூபம் பரவெளியே.

## 59. சொரூப வாழ்வு

(வெண்பா)

1333. போதவருட் பூரணமாப் பொங்குசிவம் நானென்
சோதனையாற் சொந்த சொரூபமாய்—ஏதமனப்
பொல்லாங்கா மூனப் புணர்ப்பகல்சாந் தானுபவம்
நல்லாங்கு நண்ணலருள் வாழ்வு.

1334. தெய்வவாழ் வாகச் சிறந்து விளங்குவது
பொய்வளர்மா மோகப் புலம்புலம்ப—மெய்வளர்சற்
போத சொரூபவருட் பூரணசாந் தானுபவம்
பாய்தலே தானைப் பரந்து.

## 60. சொரூபானுபூதி

1335. உணர்வுதன் னுண்மையை யோர்ந்துணர்ந்து
புணர்தல் சொரூபானு பூதி—உணர்வின் [சாந்தி
முனைப்பா மகந்தை முடிந்திதய மூலத்
தனைத்துமொன் றுமெய் யறிவு.

(கொச்சகக் கலிப்பா)

1336. அலைக்கலுற்ற வஞ்ச வகப்பேய் மயக்கக்
கலக்கமற்ற சுத்தவருட் கைவல்ய சித்தித்
துலக்கமே மோன சொரூபானு பூதி;
சொலற்கரிய வஃது துரீயப் பரமே.

1337. கருமையல் சேர்ந்தமனக் கற்பனையற் றோங்கும்
பெருமைசால் சுத்தப் பிரம்மானு பூதி
அருமைசேர் சுத்தஞா னன்ம சொரூபத்
தொருமைசேர் மோன வுணர்வா மியல்பே.

1338. அறிப வுறுப வனைத்துமகப் பாழில்
வெறுவியபொய்ம் மாயா விசித்திரமென் றோர்ந்தால்
வெறுவெளியே யாக விளங்கும் பரத்தை
யுறுவதுநா னுட்படமற் றெல்லா மொழிவே.

### 61. ஞானம்

(குறள்)

1339. மூவிடனு மோரிடனு முப்பொழுது மோர்பொழுதா
மேவியது மெய்வித் தகம்.

1340. பொல்லா வகந்தையறப் பொங்குசுப மோனமே
நல்லமெய்ஞ் ஞான நடை.

(வெண்பா)

1341. இருள்வண்ண மில்லா வியல்பான வுண்மைத்
தெருள்வண்ண மான சிவத்தில்—வெருள்வண்ண
மாஞ்சீவ போத வகந்தைமனச் சுட்டறிவு
சாஞ்சீர்மை ஞானச் சதிர்.

1342. அடர்வறுமை யான வவிச்சையின் மூழ்கிப்
படருழக்கும் பாழ்ங்கலக்கந் தீர—உடல்யா
னெனுதெனுபா லற்ற வியலறிவா முண்மை
சனுதனமா வுள்ள தனம்.

1343. இறையருளை முன்னிட் டியற்றுந் தியான
முறையா லிருள்சேர் முனைப்பற்—றிறையொளிசேர்
சுத்த வருள் வெளியிற் சுட்டறிவாம் பேதமறல்
வித்தகமெய்ஞ் ஞான விழிப்பு.

1344. உள்ளதாந் தன்னையயர்த் தூனுடலே நானென்னும்
துள்ளலாம் பந்தமயற் றொந்தமற—உள்ளத்தில்
வேற்றுமைதீர் மோன விழுப்பதமாஞ் செம்பொரு
டேற்றுமதே ஞானத் திறன். [ளைத்

(கொச்சகக் கலிப்பா)

1345. உள்ளத் தொளிவெளியா வுள்ள சொரூபத்தைத்
தெள்ளத் தெளிதலருட் சிற்பரமெய் யோகமென்பர்
தள்ளருமெய்த் தன்மையாத் தாஞெளிரவ் யோகமே
கள்ளவகப் புன்கலக்கக் கட்டறக்காண் கிற்பதே.

1346. ஒன்றான தானே பரமார்த்த வுண்மையா
நன்று வவிர்சொருப ஞானு பூகியே
வென்றங் கனைத்தையுந்தான் மேம்படுமெய்ஞ் ஞான [வெற்றி
பொன்றாத மோனவியற் பூரணசாம் ராச்சியமே.

1347. நுண்மைசேர் நோக்கா விருட்பகையை நூறிலாட்
டுண்மை யுணர்வே யுரன்சேர் விறல்வெற்றி;
கண்மயமா யாவுங் கடந்தொளிர்மெய்க் கைவல்ய
வண்மைசேர் வாழ்வா வளஞ்சுரக்கும் மாண்பதமே.

1348. குற்றமனைத் துக்குமோர் கொள்கலமாம் மோகவகப்
பற்றறச்செற் றுண்ட பரஞ்சோதி பாதமெனக்
குற்றதுணை யாக வுளத்தி லுறைதலால்
அற்றமற வுற்ற தருட்பார வெற்றியே.

1349. ஊனமில்பே ரின்பமா வுள்ளதுநம் மாருயிர்க்கு
நானற் றியல்சொருப ஞானமார் சாந்தியே;
நானெனுமா மோக நவைப்படுபொய்ம் மானமாந்
தீனமற்ற வுண்மைத் தெளிவுசிவா னந்தமே.

1350. பொருத்தி மனத்தைப் புரண விதயத்
திருத்தலே சும்மா வியற்றுபர யோகம்;
கருத்திலே மற்றோர் கருத்துக் கலவாத்
திருத்திசேர் சுத்தத் தெரிவுபே ரின்பே.

குறிப்பு.—மனத்தை இதயத்திற் பொருத்திச் சும்மா விருத்தல் என வியையும். புரணவிதயம் - சுத்தத் தெரிவெளி மாத்திரமான இதயம்.

## 62. தத்துவம்

(குறள்)

1351. நானென்ற மூலவஞ் ஞானமறக் காண்பதே
தானென்ற மெய்த்தத் துவம்.

(வெண்பா)

1352. ஏத்துவமற் றுள்ளவெறு ஞானமே சுத்தவருட்
சித்துவமா மோனச் சிவசொருபம்—புத்திக்
கலக்கத்தாற் சேருமனக் கற்பனைதீர் சாந்தித்
துலக்கமே தேர்தத் துவம்.

(கொச்சகக் கலிப்பா)

1353. மோனப் பொருளா முடிந்த முழுமுதலை
*யானெனலே பந்தமெனின் யானதுவென் றெண்ணலெவன் [லெவன்
ஊன வகந்தை யுதிப்பிடத்தை யோர்ந்துணர்ந்தங்
கீனமறச் சும்மா விருக்கையென்பர் தத்துவமே.

*யானெனலே பந்தமெனின் என்பது இடைப்பிறவரல். "சொல்லுக்கடங்காச் சுகப் பொருளை" என்னும் தாயுமானவர் பாடலை இப்பாட்டின் பொருளோடு ஒப்புக் காண்க.

1354. விருப்புறவே ஞென்றாய் விராந்தவெளி யாந்தன்
*னுருப்பரத்தி லிலா தொழிதலால் ஒழிமென்
றருட்பெருவாழ் வாக வவிர்சொருபத் தன்மை
இருப்புணர்வின் பான வியல்பா மிருப்பே.

*உருப்பரம் - பரசொரூபம்.

1355. தன்னிலே தானுத் தழைத்ததோ ருண்மையைவிட்
டன்னியமே நாடி யலைக லறியாமை;
நன்னயமார் கேவலமெய்ஞ் ஞான சொரூபமே
தன்னியலா வோர்த்தறிகை தத்துவமெய்ஞ் [ஞானமே.

## 63. தவம்

(குறள்)

1356. இழுக்கல் வழுக்கல் எனைத்துமில்சற் போத
வொழுக்கமே சான்றோர் தவம்.

1357. சிவமே சொரூபமாக் தேற்றுமெய்ஞ் *ஞானத்
தவமே சிறந்த தவம்.

*ஞானத்தவம் - ஞானவிசார வடிவான தவம்.

(வெண்பா)

1358. அபலறிவு முற்ற வனர்த்தமே தன்மெய்
யியலறிவே யுண்மை யெனவே—அபலறிவு
மோனமாப் பொன்றும் முறையான்மற் றஃதறியும்
தானுரென் றுய்வே தவம்.

1359. ஊமைமொழி யுள்ளத் துறைத்தலே தானகிலப்
பாமறையின் மெய்ப்பொருளுட் பற்றலாம்—சேம
யாக்கமாம் போத வருட்சிற் பரவெளியாத் [வொளி
தாக்குமதே மோனத் தவம்.

**குறிப்பு:—ஊமைமொழி - பேசாத மந்திரம்;
பாமறை - சந்தோ ரூபமான வேதம்;
உட்பற்றல் - இதயத்திற் பற்றல்.**

1360. நிட்டையுணர் வான நிலைகலங்கி நெஞ்சத்து
நிட்டூரமா மோக நினைவூர்ந்து—சுட்டுணர்வுக்
காக்கம்போற் றேன்று மனர்த்தப் புலன்களாற்
றக்கப் படாமை தவம்.

(கொச்சகக் கலிப்பா)

1361. யானு ரெனத்தன் னியலோர்த் துணரிலன்றித்
தானுன வுண்மை தலைப்படுமா றின்மையால்,
யானு ரெனத்தன் னியலை யுசாவலே
தானுன வுண்மைத் தவமென்பர் தக்கோரே.

## 64. தன் மெய்ந் நிலை

(குறள்)

1362. ஒப்புயர் வற்ற வுதாரப் பெரும்பதமா
நிற்பதுதன் னுண்மை நிலை.

1363. இன்றியமை யாத்தன் னியல்பறியா தன்னியமாத்
துன்றறிவு முற்றுமே சூது.

1364. அறிவாந் தனைத்தா னறிதலெவன், தானவ்
வறிவா யிருத்தலின் மற்று.

1365. தனித்தியல்கை வல்லியமா வுள்ளதே சற்று
மினைத்தெனவொண் ணாத்தன் னியல்.

1366. தூய மனத்திற் சுடர்சொருப சாந்தியே
ஞேயமா முண்மை நிலை.

(வெண்பா)

1367. செய்யும் வகையோர் சிறிதுமற்ற மோனவருள்
வையத் துறுதிபெற வாழ்வகையால்—எய்யும்
பிறவி மயக்கப் பெருங்கற் பனைதீர்
நிறைவெளியா முண்மை நிலை.

**குறிப்பு :—மோனவருள் வையம் - மவுன வடிவான திருவருட் பூமி.**

## 65. திட்பம்

1368. அதுவே யெதற்கு மதிராம லூன்றும்
மதுகைசேர் தன்னியல்பா(ம்) மாண்பால்—எதிரிலா
வொட்பங்கூ டுண்மை யுணர்ச்சியாந் திட்பமே
திட்பமற் றல்ல பிற.

## 66. தியானம்

(குறள்)

1369. ஆன்ம சொரூப வருட்பரத்தை யெண்ணுவது
யானற்றுள் ளூன்றி யிருப்பு.

(கொச்சகக் கலிப்பா)

1370. தனித்தசுத் தாத்துவிதத் தத்துவ வுண்மை
நினைத்தலரு கேவலமெய்ஞ் ஞேய சொரூபம்
முனைத்தலற வுள்ளத்து மோனமா நிற்கும்
அனைத்தே *பரமார்த்த மான நினைப்பே.

*பரமார்த்தமான நினைப்பு - நினைப்பின் பரமார்த்தம். 'உள்ளபொரு ளுள்ளலெவன் உள்ளத்தே யுள்ளபடி யுள்ளதே யுள்ள லுணர்' - உள்ளது நாற்பது - மங்கலம்.

1371. எண்ண வொழுதை வியற்சிற் பரவடிவை
எண்ணுவது சும்மா விருப்பென்பர், மோகத்தாற்
றுண்ணென் றெழுந்து சுழலுமகப் பேய்முனைப்பை
நுண்ணுணுகித் தேருமுசா நோககா லகற்றியே.

1372. கள்ள மனத்தாற் கலங்கலுக் கேதுவாத்
துள்ளி யெழுந்த துடிப்பா மகந்தையை
எள்ளி விசார வியல்வாளால் வெட்டியறத்
தள்ளினன்றிச் சித்தோப சாந்தவுணர் வெய்தாதே.

1373. உள்ள வொழுதைதநன் குள்ளு தியானமுறை
துள்ளு மகந்தைத் துடிப்பாலே யானிதுவென்
றுள்ளுமனக் கற்டனையை யுள்ள லயர்த்தலின்றி
யுள்ளுணர்வு மாத்திரமா வுள்ளத் துறைந்திடலே.

## 67 திரு

(குறள்)

1374. அவமாம் பிறவி யரிட்டமற மாற்றுஞ்
சிவமே சிறந்த திரு.

## 68. திருவடி

1375. பேத மயக்கவகப் பேய்பிரியச் செற்றொளிர்சற்
போதமே பாதப் பொருள்.

1376. அருட்போத மான வனந்தசிவந் தானே
திருப்பாத வுண்மைத் திறம்.

(வெண்பா)

1377. அத்தியா சஞ்சே ரனர்த்தமற வாழ்ந்தகத்திற்
புத்தியோ கத்தாற் புணர்சொருபம்—பத்தியா
லுண்ணீர்மை சான்ற வுரவோர்ஞா ஞனந்தக்
கண்ணீரா லாட்டுங் கழல்.

1378. மருள்சே ரகந்தையற மாண்டா ரகத்திற்
பொருள்சேர்ந்த வாழ்க்கை பொலியப்—பொருளாத்
தொடர்ந்தியல்சற் போத சொரூபமாய் ஞானங்
கடந்தவருட் பூமா கழல்.

(கொச்சகக் கலிப்பா)

1379. திருவடி ஞானந் தெளிந்த மனத்தோர்
திருவடி ஞானமே ஜீவன மாவார்
திருவடி யென்பது சிற்பர மோனப்
பரவெளி யாகப் பயில்சிவந் தானே.

1380. ஏமவியல் சான்றநல் லீசனருள் கூட்டுகின்ற
காமருசற் போதக் கழல்விளக்கம் யாதெனிலோ
நாமரூ பங்கடந்த நாட்டமெழ நள்ளிதயத்
*தோமுருவாத் துன்றுபர வுண்மை யுணர்
[வொளியே.

*ஓமுரு - பிரணவ சொரூபம்.

## 69. திருவடி வாழ்வு

(வெண்பா)

1381. தொக்கசுக போகங்கள் சொக்க மஞேமூலத்
தக்கரமா மோன வமுதமாய்—மிக்க
விருப்பார் சொரூப விசுத்த வுணர்வே
திருப்பாத வாழ்க்கைத் திறம்.

## 70. துரீயம்

(குறள்)

1382. உறக்கவிழிப் பற்ற வுணர்வான வுண்மை
புறக்கணிக்க வொண்ணுப் பொருள்.

1383. பாழிருளா வெங்கும் படர்ந்தவெம் பாசமனச்
சூழல் துரீய வெளி.

குறிப்பு :—சூழலின் உண்மை துரிய வெளி யென்பதாம்.

1384. துரியவெளி யாகத் துலங்குபரத் தில்லை
சுரியலுற்ற பாசச் சுருள்.

(வெண்பா)

1385. தொடர்பற்ற வாழ்வே சொரூபானு பூதி
சுடர்வுற்ற சாந்தத் துரீயம் இடர்வற்றி
இன்பமய மாக விதயத் தகமகமென்
றன்புமயம் பொங்கு மறிவு.

1386. திகந்த மளாவச் செழித்த சிவத்தே
சுகந்ததும்ப நிற்கை துரீயம்—அகந்தை
முனைப்பற் றொளிர்சொரூப மோனமா மஃதே
நினைப்புமறப் பற்ற நிலை.

1387. செறிவான சுத்த சிவத்திலே தோன்றும்
பிறவா மவத்தையறப் பேர—அறிவா
லதுவேதா னாக வமைந்ததிட மோனப்
பொதுவே துரீயப் புலம்.

## 71. தெய்வம்

(குறள்)

1388. உள்ளத் துணர்வான வுண்மையே மெய்த்தெய்வம்
தெள்ளத் தெரிகிற் பவர்க்கு.

குறிப்பு :—உள்ளமே மெய்க் கோயில் என்பதும் குறிப்பா லுணர்ந்து கொள்க.

1389. சுத்தவறி வான சொரூபம் பரதெய்வம்
பொய்த்தொழியா வுண்மைப் பொருள்.

(வெண்பா)

1390. இளந்தெய்வ மாகமற் றேதிலவை நீக்கிக்
களந்துறந்த மோனக் கருத்தால்— உளந்திகழ்ச்
சிற்பரமா மிக்கபெருந் தெய்வமே யத்துவிதத்
தற்பரமா முற்றமுழுத் தான்.

## 72 தெய்வீகம்

1391. வென்றிசே ருண்மை விளங்கிடு வுள்ளத்து
நன்றிசே ரெல்லா நலனுமுண்டாம்— *ஒன்றியா
முண்மையிலே வாழ்க்கை யுரம்படலே பேரின்பத்
திண்மைசேர் தெய்வத் திறம்.

*ஒன்றி - இரண்டற்ற ஏகான்ம சொருபம்.

## 73. துறவு

1392. அசாரமா மங்கு மசச்சடமாந் துக்கம்
மசாரதமாத் தோற்றுமனோ மாயம்—விசாரணையால்
அங்கத் தகம்புத்தி யற்றொழியக் காண்டலே
துங்கமா முண்மைத் துறவு.

## 74 நமஸ்காரம்

(குறள்)

1393. கணிக்க வொணாத கனஞ்சேர் சொரூப
வணக்கம் அகந்தைமுனைப் போய்வு.

## 75. நிட்டை

1394. எணைப்பற்று மற்ற வியற்சிற் பரத்தில்
நினைப்பற் றியல்வே நிலை.

1395. அத்தகவே நிற்கும்மோ னனுபவச் சீர்மையைமற்
றித்தகைய தென்ன லெவன்.

(வெண்பா)

1396. அறிவுக் கறிவான வாண்டான் பதத்திற்
செறிவதாற் சிந்தையறச் செத்தே—நிறைவுற்
ருளிர்சொருப மோன வுணர்ச்சிசேர் வாழ்வே
வளர்சகஜ நிஷ்டை வடிவு

1397. அறிவுணர்ச்சி யாற்சே ரருட்பரமா மோன
நிறைவுணர்ச்சி யேசொருப நிஷ்டை—செறிவுணர்ச்சி
நல்குங் குருரமண நம்பனருட் செம்பதத்தே
மல்குமனச் சீர்மையந்த மாண்பு.

1398. அறிவொளியா வுள்ளதோ ரான்ம சொரூப
நிறைவொளியா நிற்றலே நிஷ்டை—வெறுவெளியா
மவ்வியத்தப் பாழ்வறும்பா ழாவொழியத் தாஞெளி
செவ்வியொத்த வுண்மைத் திறம். [ருஞ்

1399. சுத்தி ரஜதம்போற் றோன்றும் புலங்களிலே
புத்தி கலங்கிப் புலம்பாது—புத்தி
தரித்தலாய்த் தன்னிலே தான்றாுச் சும்மா
விருத்தலே நிஷ்டை யியல்பு.

1400. மதித்தலரு மோனவருள் வண்மைசேர் சாந்தி
சதிர்த்தலே ஞான சமாதி—அதிர்த்தலற
யாதொன்றி னுலு மிரண்டற்ற தன்னியல்பா
மீதொன்று ஞான விறல்.

1401. பொக்கமறப் பொங்குபரி பூரணமாஞ் செம்பொருளே
தொக்ககமா நிற்றல் சொரூபநிஷ்டை—சொக்கி
யறிவு மயங்கா தகமகமென் றுன்ற
வறிவுண்மை தானே யது.

(கொச்சகக் கலிப்பா)

1402. ஒன்றுன தன்சொருப வுண்மையைத்தா
[னுள்ளபடி
நன்ருக வுய்த்துணர்ந்த ஞானதிடம் மோனநிலை
என்றுல் உபாதிகளுள் யாதுமே தன்னுடியை
பின்று வொதுக்கி யிருப்புணர்வா நின்றிடலே.

1403. ஏன்றமனக் கற்பனையில் யானிதுவென் றாடாடி
மான்ற வகந்தை மயக்கமற வுள்ளத்தூ
டூன்றியமெய்ஞ் ஞான வுரஞ்சே ரமுத்கங்காண்
ஆன்ற சொரூப வருட்பரவாழ் வாவதே.

1404. பிறவனைத்தும் பேதவகப் பேய்மனப்பா ழாகச்
செறிவுபடு சுத்தவருட் சிற்பரமாந் தன்மெய்
யறிவிற் பிறிதோ ரனுபவமின் றாக
வுறைதலே மோன வுறுதியென் பாரே.

1405. உள்ள வொன்றை வொருமையால் தான்றனு
வுள்ள வுணர்வேகாண் தன்னைத்தா னுள்ளுமுண்மை
துள்ளு மகந்தைமனச் சுட்டறிவாஞ் சேட்டையறத்
தெள்ளி யிருத்தலே தன்னைத்தான் தேறலே.

1406. அறிவு தெளிந்துதூய் தானுலே யன்றி
அறிவரிது சொந்தசுத் தாத்துவித வுண்மை;
பிறிவருதன் னுண்மை பிரம்மமே யாக
நிறையுணர்வு சுத்தசிவ ஞேயத் தமிழ்வே.

## 76. நிர்வாண நிலை

(வெண்பா)

1407. நினைப்பே மறப்பா நிகழு மகப்பேய்
முனைப்பான மோகம் முசிக்கத்—தனிப்பரமார்
சுத்தமெய்ஞ் ஞான சொரூபத் தழுர்தலே
நித்தநிர் வாண நிலே.

## 77. நிறைவு

(கொச்சகக் கலிப்பா)

1408. அறிவை விளக்கிய வாண்டா னருட்சிற்
குறியே முடிந்த குறிக்கோளாம் போதச்
செறிவில் விளைந்த சிவானுபவ மோன
நிறைவே நிறைவு குறைவுமற்றெல் லாமே.

## 78 பந்தம்

(குறள்)

1409. சிற்பரமாத் துன்று சிவத்தே நா னென்னுமனக்
கற்பிதஜீ வத்துவமே கட்டு.

குறிப்பு:—ஜீவத்துவம் - ஜீவபோதம்; கட்டு - பாசபந்தம்.

(கொச்சகக் கலிப்பா)

1410. இளிதீர்பே ரின்ப வியற்பரவாழ் வுள்ளத்
தொளிசேர் பரமார்த்த வுண்மை யுணர்வே;
களிசேர்வெம் பாசமனக் கற்பனையே நானென்
றுளேசேர மாழ்கி யுயிர்க்கும் பிறப்பே.

## 79. பரபக்தி

(குறள்)

1411. *இருப்பறிவின் பான வியல்வடிவில் மோன
விருப்புறல்சற் பக்தியென் பார்.

* இருப்பு .... வடிவு - ஸச்சிதானந்த சொரூபம்.

(வெண்பா)

1412. இன்ப வியல்பா விதயத் திருந்தொளிர்பே
ரன்புமய மான வருட்பதத்தே—துன்பியல்பொய்ம்
மூட வகந்தை முனைப்பற்று மோனநிலை
கூடலுயர் பத்திக் குலா.

குறிப்பு :—உயர்பத்தி - பரபத்தி.

1413. சேமவாழ் வாகச் சிறந்த சிவானுபவக்
காமமே யான்றநிட் காமபத்தி—ஏமமுயிர்க்
கன்புசிவ மாக வகந்திளைக்கத் தன்னியல்பா
லென்புருகி நையு மியல்பு.

1414. சுத்தவறி வானவருட் சோதித் துலக்கமே
உத்தமசற் பத்தி யொழுக்கமாம்—சித்தசங்
கோச வகந்தை குலைதலாற் சிற்சொருப
நேசமியல் பான நிலை.

1415. அறிவான வுண்மையே யாரா தனையின்
குறியாக வுள்ள குறிக்கோள்—அறிவால்
அறிவான தன்னி லயரா து நிற்கை
நிறைவான பத்தி நிலே.

1416. சுத்தவருட் சிற்பரத்திற் சுட்டுணர்வு கெட்டொழுகல்
உத்தமசற் பத்தி யொழுக்கமாம்—சுத்த
வருட்சிற் பரத்தி லழுந்தசுக மோனத்
திருச்சிப் பவர்யா ருளர்.

(கொச்சகக் கலிப்பா)

1417. இதயத் தியற்பரமா வேய்ந்த சொரூபப்
பதியிற் றிளேத்தலே பத்தியென்பர் மூல
வுதயத் தொடுக்கலாற் றன்னை நல் லூரு
வதிபனுக் காக்கி யருள்வடிவாத் தானே.

1418. யானெனும்பா ழாசை யிகப்ப வகத்தொளிர்சுத்
தான்ம சொரூபமெய் யன்புணர்வே சற்பத்தி;
ஊனவகங் கார வுணர்வொழிய வுள்ளத்திற்
ருனதைநன் காராய்தல் சற்பத்தி சாதனமே.

1419. சிவசொருப மாகத் தெளிந்தமெய் யன்பே
பவிசுபெறு சாந்தப் பரபத்தி மாட்சி
சிவசமய வுண்மைநா னென்னுஞ் செருக்கற்
றவிர்சொருப மோனஞா னுபவ மன்றே.

1420. எங்குமா வென்றுமா யாவுமா வேய்தலாற்
பங்கமற்ற வேகப் பரமே பரமார்த்தத்
துங்கவக மாவறிந்து நில்லாத் துவிதபத்தி
அங்கமக மென்ற வகந்தைமனக் கற்பனையே.

1421. மயல்சேர்ந்த வஞ்ச மனப்புன் செருக்கால்
இயல்பாக வுள்ளத் திருக்கும் பரத்துக்
கயலாக வாற்று மனந்தமாம் பூஜைச்
செயலோர்ந் திடுங்காற் சிறுர்வினை யாட்டே.

குறிப்பு :—செருக்கால் அயலாக வாற்றும் பூஜை எனக் கூட்டுக.

1422. உள்ள லயர்த்தலற்ற வுள்ளுணர்வா(ம்) மோன
வெள்ளவெளி யாக விளங்கும் பரசிவத்தை [வருள்
எள்ளி யிகழ்ந்திடல்கா ணென்பர் இரண்டுபடத்
துள்ளு மகந்தைத் துடிப்பாற் றெழுதலையே.

## 80. பரஞ்சோதி

(வெண்பா)

1423. வெளியா வகத்தில் விளங்கு சொரூப
வொளியான தன்மெய் யுணர்வே—களிசேர்
வறுங்கனு வான மயற்பிறவி மங்கப்
பிறங்குபரஞ் சோதிப் பிழம்பு.

## 81. பரந்தாமம்

1424. கள்ளங் கரவுசேர் கற்பனைக்குக் காரணமாத்
துள்ளுமுனைப் பானபேய்த் தோற்றமற—உள்ளந்
திறந்தவெளி யாகத் திகழ்ச்சிசேர் வாழ்வே
நிறைந்தபரந் தாம நிலை

1425. நானேநா னாகை நலங்கிளர்மெய்ஞ் ஞானவருள்
வானே பரந்தாம வைகுந்தம்—தானேதா
னாகத் தழைக்கு மதேகா ணதிட்டான
மேனைப் பதங்களுக்கெல் லாம்.

1426. அற்றமா மோக வகந்தைமுடிச் சிச்சடம்வே
றற்றெழிய ஞான வருள்வாளால்—முற்றத்
திறந்தவெளி யாகவொளிர் சித்தமே சாந்தி
நிறைந்தபரந் தாம நிலை.

1427. போதப் புலமாகப் பொங்கு சொரூபவருட்
பாதமே யுண்மைப் பரந்தாமம்—பேதக்
கலக்கமோ ரற்பமுமில் கைவல்ய வுண்மைத்
துலக்கமே சுத்த சுகம்.

## 82. பரநிலை

1428. உண்மைநிலை யென்றென்று முள்ளநிலை மோன [வியல்
வண்மைசேர் சுத்தவருள் வாழ்க்கைநிலை—திண்மை [சேர்
கேவலசற் போதக் கிளர்ச்சியான் மோகவகப்
பேய்வலியைச் சாடு நிலை.

## 83. பரமார்த்தம்

(குறள்)

1429. ஒன்றும் பரந்தன் னொடுபுணர்த்திக் காணலன்றி
யன்றும் பரமார்த்த மஃது.

1430. ஒன்றும் பரமார்த்த வுண்மை யுணர்விலன்றித்
தன்றுது சாந்தி சுகம்.

## 84. பரவெளி

(வெண்பா)

1431. கணக்கு வழக்கைக் கடந்தவருட் பாத
மிணைக்கமுற்ற தாலே யிதயம்—பிணக்காங்
கிரந்திபே தித்துக் கிளர்சொருப சாந்தி
பரந்தவெளி தானே பரம்.

(கொச்சகக் கலிப்பா)

1432. நிரந்தரமா வுள்ள நிலைக்களமாந் தன்மெய்
தெரிந்திடவா லூனச் செருக்கற் றொழியிற்
சுரந்தருள்வே தாந்த சொருபானு பூதி
பரந்தியல்வாழ் வேகாண் பரவெளியின் பண்பே.

## 85. பற்றறல்

(குறள்)

1433. நினைப்பற் றியல்சொருப னெய்தி யளவே
*எனைபற்று மற்ற வியல்.

*எனை - எந்த.

(கொச்சகக் கலிப்பா)

1434. பற்றற்ற பாவனையென் பார்பெரியோர் மோகவகப்
பற்றற் றகத்தொளிர்சற் பாவமே காண்கவது
பற்றற்ற வுண்மையைத்தாம் பற்றுமுண்மை பற்று
[மகப்
பற்றறலான் மற்றனைத்துப் பற்றுமறக் காண்ட
[லன்றே

குறிப்பு :—பற்றற்ற பாவனை - யாவையும் யவரும் என்னுந் திருவாய்மொழி (3, 4, 10)ப் பாசுரத்திற் காண்க

## 86. பாத பூஜை

(வெண்பா)

1435. பாதமா முண்மைப் பரம்பொருளே பந்தமகல்
போத சொரூபவருட் பூரண மாம் - பேதமில்சுத்
தான்ம சொரூபமா வன்புணர்ச்சி பொங்கவகந்
தான்மகிழ்த லாரா தனை.

## 87. பிரம்ம பதம்

(குறள்)

1436. உரவொளியா மோன வுணர்வால் இதயப்
பரவெளியே யுண்மைப் பதம்.

1437. பரவெளிவாழ் வானசிவ பாக்கியமே சுத்தத்
திருவருளாற் சேரும் பயன்.

(வெண்பா)

1438. மெய்த்துரிய மான விசுத்த மிடைவிடா
தொத்தொளிர வுள்ளத் துரம்படவே—பொய்த்துவித
வாதனைசேர் மோக மனோமயமா மூன்றவத்தை
சாதல் சகஜநிலை தான்.

1439. கடந்தவுண்மை யானவருட் கைவல்ய நீதி
படர்ந்துவிளங் கான்ம பதத்தே—நடந்தருபொய்ம்
மாயா விலாச வகைவகையாம் பேதமறல்
பேயா ணவந்தீர் பிறப்பு.

1440. அறிவோ மயலோ வகமிதமோ அன்றி
நிறைவோ குறைவோ நிலம்பரமோ ஒன்றும்
மறவா நினையா மனத்தெளிவின் மாண்பே
பிறவா விறவாப் பெரும்பதமென் பாரே.

**குறிப்பு :— நிலம் பரம் - இகம் பரம்; பெரும்பதம் - பிரம்ம பதம்.**

1441. கடந்து விளங்குசிவக் கைவல்ய மோனம்
படர்ந்தவகந் தானே பரமபத மென்பர்;
அடந்தருபொய்ம் போக வகந்தைமுனைப் பாம்பேய்
நடங்குலையி லன்றி நகாதவ் வகமே.

**குறிப்பு :— நகுதல் - விளங்குதல்; அவ்வகம் - பரமபத வடிவான அந்தப் பரமார்த்த வகம்.**

## 88. பிரம்மாகார விருத்தி

(வெண்பா)

1442. திருந்தி யமைந்தவருட் சித்த விருத்தி
விரிந்த பிரம்ம விருத்தி—பொருந்துங்
கடலுருவ மாணவருட் கங்கைநதி போலப்
படருமது மோனப் பரம்.

**குறிப்பு :— அருளால் திருந்தியமைந்த சித்தம் அவ்வருள் வடிவேயாதலால், அருட்சித்த விருத்தி என்றதாம். பிரம்ம விருத்தி - பிரும்மாகார விருத்தி.**

## 89. பிரமாதம்

(குறள்)

1443. ஒன்றையிரண் டாக வுறமுமகப் பேய்மதியே
துன்றுபிர மாதத் துயக்கு.

## 90. பிறவித் தொடர்

1444. மோகவகப் பாழா முனைப்பிற் படர்வதே
சோகப் பிறவித் தொடர்.

## 91. புருஷார்த்தம்

(வெண்பா)

1445. புருடார்த்தங் கோரும் புருடனுஞ் சீவத்
திருடனே காணுத் திறத்தால்—புருடார்த்தக்
கோரிக்கை யற்றொழியக் கூடுசொரூ பானுபவ
மாரக் கிளர்வே யடைவு.

குறிப்பு: —சொரூபம் - அந்தப் புருஷனுடைய எதார்த்த சொரூபம்; அடைவு - உண்மையான புருஷார்த்த சித்தி.

1446. சிறுகல் பெருகலற்ற சிற்பரமா மோன
வுறுதிசே ரோம்படையா வுள்ளத்—தறிவிற்
சலனமறப் பொங்கு சதாசிவமாம் போகங்
குலவவுறல் வாழ்க்கைக் குறி.

1447. சுத்தமா மோனத் துரீய வருட்பதத்தில்
வித்தகமெய்ஞ் ஞான விழிப்பாலே—நித்தசித்த
மாகக் குலவு மனந்த சிவானுபவச்
சீர்கலத்தல் வாழ்க்கைத் திறம்.

(கொச்சகக் கலிப்பா)

1448. பரமார்த்த முத்தி பரசிவத்தி லென்பர்;
தருமார்த்த காம சமத்தமுந்தா மாங்கே;
திரமாத் தெளியத் திகழ்சிவஞா னத்திற்
றருமார்த்த காமமோட் சச்சார்பொன் றின்றே.

1449. ஊறுபா டற்றதோ ரொட்பநுட்ப முற்றமுழுப்
பேறுநா னென்னுமகப் பேய்மனந்தீர் மோனநிலை;
வேறுபா டற்ற விசுத்தவருட் சிற்பரத்தைக்
கூறுபடக் கொல்லுமனக் கோட்டங் குலைதலே.

## 92. பூமா

(வெண்பா)

1450. உண்ணு ரமுத வொளிநிறைவா மோனவருள்
விண்ணுக வுள்ள விழுப்பதமே—கண்ணுகக்
காண்டலாற் சுட்டிக் கதுவுபுலம் பூரணமா
வீண்டலே பூமா வியல்.

1451. மோகமறக் கூர்சொருப மோனத் தகமிதமாம்
பாகமறப் பார்வை பரவெளியாம்—ஏகபரி
பூரணமாப் பொங்கலாற் பூமாவா மந்நிலையே
பாரசொரூ பானு பவம்.

1452. ஆய்ந்தாய்ந் தகந்தை முனைப் பானவகப் பேய்க் [கலக்கந்
தேய்ந்துதேய்ந் தற்றுமுற்றுத் தீர்தலால்—வாய்ந் [தொளிர்சற்
போத சொரூபமே பொங்கும் பரப்பிரம்மம்
பேதமில்பே ரின்ப வெளி.

1453. அமுத சொரூபமா வாண்டான் பதத்தில்
அமைதிசேர் சுத்த வறிவே—அமிதமாஞ்
சிற்பரமா நீடு சிவானந்த மாட்சிசேர்
தற்பரமாம் பூமா தரி.

(கொச்சகக் கலிப்பா)

1454. களங்கமற்ற சுத்தவருட் கைவல் லியமா
விளங்கலுற்ற மெய்யுணர்வே வித்தகப்பே [ராண்மை;
வளங்குலவு வாழ்வா மலர்ந்த சொரூப
தளங்கா ணகண்ட சதாசிவபூ மாவே.

## 93. பேரின்பம்

(குறள்)

1455. உண்மையுணர் வாகவிளங் கொட்பறுட்ப மோன
வண்மையே யுண்மை மகிழ். [வியல்

(வெண்பா)

1456. இளைத்துக் களைத்தகமென் றேங்குமனஞ் செத்துத்
திளைத்தற் குரிய சிவமாய்—உளத்தில்
வெறுவிதா வுள்ள விசுத்த வுணர்வே
மறுவிலா வுண்மை மகிழ்வு.

## 94. பொங்கல் விழா

(குறள்)

1457. மங்களவாழ் வாக மனந்தன் சொரூபத்திற்
பொங்கலே பொங்கல் விழா.

## 95. பொருள்

1458. இதயமா மோன வியற்சிற் பரமே
நிதியமா வுள்ள நிறைவு.

1459. நீதியிற் சற்றும் பிறழா நியமவருட்
போதியே யுண்மைப் பொருள்.

குறிப்பு :—அருளே பொருள் - அறிவே உண்மை யென்
பதாம்.

1460. தொன்றான சொந்த சொரூபமா வுள்ளதே
பொன்றாத வுண்மைப் பொருள்.

(வெண்பா)

1461. பொருளென்று லஃதே பொருளன்றி மற்றைப்
பொருள்பொருளோ மாயப் புலமே—தெருளுருவாய்
எந்தப் பொருளொன் றிருந்தொளிருந் தன்னொளி
அந்தப் பொருளே பொருள். [யால்

(கொச்சகக் கலிப்பா)

1462. உள்ளும் புறமு மதுவிதுவென் றோர்ப்பவெல்லாம்
கள்ளவகங் காரக் கருத்தான கற்பனையே
துள்ளு மகந்தைமனச் சுட்டறிவாங் கற்பனையற்
றுள்ளமா வுள்ள வுணர்வேகாண் மெய்ப்பொருளே

## 96. போதம்

(வெண்பா)

1463. போதமா வன்றிப் பொருளில்லை சுத்தவருட்
போதமே யுண்மைப் பொருள்வடிவாம்—மேதகுசற்
போதமா வன்றியனு பூதியில்லை மிக்கவனு
பூதியே போத வடிவு.

## 97. மனோதீதம்

(குறள்)

1464. அனர்த்தமற்ற சுத்த வருள்வா லறிவே
மனத்தைக் கடந்தபெரு மாண்பு.

குறிப்பு :—இந்த அருள்வாலறிவே இதயமென் றிசைக்கப் படுவதாம்.

## 98. மாயை

(வெண்பா)

1465. நெஞ்சிலே யுள்ள நிறைபொருளாஞ் சிற்பரத்தைச்
செஞ்செவே தாமதுவாத் தேருது—வஞ்சமனக்
கற்பனையான் மாற்றிக் கலங்குவதே போலுமியல்
சொப்பனமா மாயைத் துயக்கு.

1466. அறிவான தன்னை யயர்த்து மனத்தாற்
பிறவற்றை நானென்று பேணிக்—குறிகுணஞ்சேர்
கற்பனை சொப்பனத்திற் கட்டுண் டழுங்கல்காண்
மைப்படுபொய்ம் மாய மயக்கு.

1467. விதவிதமாத் தோற்று விசித்திரமா மாயை
மதமதெனத் தம்மை மயக்கக்—கதகதனைக்
காயுமா சாபாசக் கட்டழலிற் பட்டழுங்கும்
மாயமே மோக மயல்.

1468. வண்மைசேர் வாழ்வுளத்தில் வைகுவதை யோராது
கண்மயல் கொண் டைம்புலப்புன் காட்சியிலே—
[உண்மைபோல்
வஞ்சனைசெய் மாயிகப்பொய் வாழ்விலுயிர் மாழ்கு
சஞ்சலமே பாசச் சதி. [மனச்

## 99. முத்தி

(குறள்)

1469. மனத்திலே சுத்தவருள் வாழ்வு மலர்தல்
எனத்தெரிக முத்தி யியல்.

1470. அறிவான வுண்மையே யான்ம சொருப
நிறைவான முத்தி நிலை.

1471. சித்தக் கலக்கச் செருக்கா மகந்தை புணைப்
பற்றெறிவே முத்தி யடைவு.

1472. வெளியில் வெளியா விளங்கு சொரூப
வொளியுணர்வே முத்தி யுரு.

1473. பரசொருப மோனப் பதியா மிதய
வரசுரிமை முத்தி யடைவு.

குறிப்பு :— அரசுரிமை - அரசுரிமையார்தல்.

1474. கண்ணு வியல் சொருபக் காட்சியிலே சுத்தவருள்
விண்ணு விளங்குவது வீடு.

1475. மோனவெளி யாக முடிந்தமனச் சீர்மையே
ஊனமறு முத்தி யுரு.

1476. *சத்தி சொரூபசிவத் தன்மை தலைப்படலே
முத்திப் புலமா முடிபு.

*சத்தியென்றது மாயை வடிவான மனத்தை.

1477. மோன வுணர்வொளியே முத்திப் பரவொளியா
வானவியல் காணும் மனத்து.

1478. அகந்தை மனக்கட் டவிழப் பரமா
வகந்தலங்கல் *வீட்டியலென் பார்.

*வீட்டியல் - மோக்ஷ லக்ஷணம்.

1479. ஏதமில்பே ரின்ப வியல்பிற்றுந் தன்சொருப
மேதகவே வீட்டு நிலை.

(வெண்பா)

1480. அலயோக மானதே கான்மபுத்தி நீங்கல்
சிவயோக மாம்பிரம்ம சித்தி—பவரோக
மோகப் பசுபாசம் முற்றுமறத் தான்பதியோ
டேகத் துவமா மியல்.

1481. முகக்கிலன்றி யுள்ளத்து மோனுனு பூதி
இகத்தலில்லை மோக வியற்கை—தகத்தேர்ந்
தகத்தே யகந்தையைமுற் றக்கெடுக்கி லன்றி
முகத்தலில்லை மோன வுணர்வு.

1482. உடலிலகம் புத்தி யொழிந்தால் அறிவாச்
சுடர்சொருப வாழ்வு துலங்கும்—தொடர்புறுமவ்
வான்ம சொரூப வவிர்ச்சியே கைவல்யந்
தான்மடுத்த மோனத் தவம்.

1483. அகப்பே யறிவை யகற்றிலன்றிச் சற்றும்
இகப்பரிய பேத வியற்கை—இகப்புறவப்
பேயறிவை மாற்றிப் பிறங்கு சொரூபகுரு
நாயகமே ஞானப் பரம்.

1484. எல்லாமொன் ருக வியல்சொருபக் காட்சியே
யல்லா லுயிர்க்கோ ரரணில்லை—பொல்லாங்
குறுங்கலக்க மாக வுழல்பா ழகப்பே
யறும்பரிசே யுண்மை யறிவு.

1485. மோனப் புலமன்றி முத்தித் திறமாக
ஏனைப் புலமொன்று மில்லையென்பர்—மோனப்
பரிசுநா னென்னும் பகைப்பற் றொழிய
மருவு சொரூபவியல் வாழ்வு.

1486. மோனப் பரமான முத்திநிலை தன்சொருப
ஞானவெளி யாகவே நண்ணலால்—ஊனவுடற்
பாச மயக்கவகப் பற்றற் றொழியிலன்றி
ஆசறுமவ் வாழ்க்கை யரிது.

1487. போர்த்தொளிரப் பெற்றவருட் பூரணமே பொய்ய [கந்தை
நீத்தொளிரப் பெற்ற நிஜானுபவம்—மாத்துறவால்
ஆன்ரே ரடையவ் வமிர்தசொரூ பானுபவத்
தூன்றலே முத்தி யுணர்.

1488. ஞானங் கிளர்வது நா மல்லா வுடலிலந்த
மானங் கழிதலே மற்றன் று—ஊனமிலா
வவ்வொழிவு தானே யகிலதெய்வ சம்பத்தா
வொவ்வவிளங் குண்மை யுணர்.

1489. அறிவா லறிவா வறிந் தோர்க் குடலோ
டுறவா மகந்தை யொழிவாற்—பிறவாத
சுத்த சொரூபமாத் தோயு *முடன்முத்தி
நித்தசித்த மான நிலே.

*உடன் முத்தி - உடனடியான முத்தி.

1490. அவிச்சை யிருட்பா முறப்பீறி ஞானச்
சிவச்செஞ் சுடர்ப்பிழம்பாச் சேர்ந்தான்—சுவச்ச
[சமாப்
பொங்கு சொரூபானு பூதியிலென் னுள்ளத்து
மங்கிற் றகந்தை மதி.

1491. ஆட்டி யலேக்கு மகந்தைமுனேப் பானபேய்ச்
சேட்டையறச் செத்தமனஞ் சேர்ந்தொளிரும்—
[காட்டையுறு
மோனச் சிறப்பான முத்திப்பே ரின்பவருள்
வானத் தொருதன் மயம்.

1492. ஊனவு ற் பார்வை யொழிந்தால் விளங்குறுமெய்ஞ்
ஞான வருட்பரமா நட்பனுரு—ஈன
வுடலேநா னென் னும்பா ழூத்தையுணர் வற்றுக்
கெடலே சொரூபக் கிளர்வு.

1493. ஊன வுடலோ டொருப்பட் டுதித்தொடுங்குந்
தீனவகங் காரமறத் தீர்தலால்—ஞானமா
மோனப் பதத்தே முடிவது காண் சீவனுந்
தானியற்றும் பல்சா தனே.

1494. உடற்சடமே பற்றி யுதிக்குமகங் கார
முடிச்சற் றொழிதலே முத்தி—படிச்ச
படிப்பு முற்றப் பாழே பசுபாச மான
மடப்பழியற் றோயா வழி.

1495. அறிவிலே தோன்றி யறிவிலே வாழ்வுற்
றறிவிலே மாயு மனைத்தும்—அறிவுருவாந்
தன்மயமாச் சாருந் தரிசனஞா னனுபவத்
தன்மையென் பர் முத்தித் தகவு.

1496. வஞ்சக் கலக்கமற வைகும் பரிசுத்த
நெஞ்சத் தொளிர்சொருப நிஷ்டையே—செஞ்சொற்
பொருளான மோனவருட் பூரணமாந் தன்மெய்த்
தெருளான முத்தித் திறம்.

1497. முனைத்த வகந்தை முடிந்தொழிந்த மூலத்
தனைத்துமொன் றான வறிவே—தனித்தவருட்
கேவலமா மோனக் கிளர்ச்சிசேர் சாந்தசுக
ஜீவனமா முத்தித் திறன்.

1498. யானெனதற் றுள்ள வியல்பான தன்சொருப
மோனவருட் கேவலமே முத்திநிலை—ஊனமருட்
கேவலமாம் பாழைக் கிழித்தொளிர்சாந் தானுபவ
ஜீவனமா முண்மைத் திறன்.

1499. விவாதசந் தேக விபரீத புத்தி
நிவாரணமா மோன நிலைக்கண்—சுவானுபவ
வைப்பா வொளிர்சொருப வண்பதத்தில் வாதனை
கிறபாரே முத்திக் கிழார். [மாள்

1500. ஆன்ம சொரூப வறிவொளியா முண்மையிலே
யானென் றெழுமகந்தை யிற்றொழிய—மோன
வருட்கே வலத்தே யகமகமா வூன்றி
யிருக்கையே முத்தி யியல்பு.

1501. ஊனமனச் சுட்டுணர்வற் றோய்ந்தொழிய வுள்
[ளொளிரும்
மோனமே முற்றமுழு மூதறிவாய்—வானமா
மன்ற விளங்கு மகத்தான தன்னுண்மை
யொன்றலே முத்தி யுயிர்க்கு.

1502. ஒட்டுப்பற் றின்றி யுளத்துணர்வு மாத்திரமாக்
கட்டுப்பா டற்றொளிர்மெய்க் காட்சியே—கட்டுப்பட்
டாற்போற் கலங்கு மகங்காரப் பொய்ம்மயக்க
நீப்பான முத்தி நிலை.

1503. சனன மரண சமுசார பந்தம்
எனது நா னென்னுமய லெண்ணம்—அனையவிரண்
டெண்ணங் களுமற் றிருப்பான வெற்றறிவே
நிண்ணயமா முத்தி நிலை.

1504. நாட்டமுறக் கூட்டுசிவ ஞானத்தா லாவரண
மூட்டமற வுள்ளத்தே மூண்டொளிரும்—கோட்ட
சீவ சுபாவச் செருக்கா மகந்தைதீர் [மாஞ்
தாவாமா முத்தி யியல்.

1505. தோன்று மகந்தைத் துடிப்பற் றொழியவுளத்
தூன்றுமதி யோக வுரத்தாலே ஆன்றோர்க்
கறிவொளிவாழ் வாக வகத்தே விளங்கு
நிறைவெளியே முத்தி நிலை.

1506. அங்கமகம் புத்தி யறக்கெட் டொழிதலாற்
பொங்கியமெய்ஞ் ஞானப் பொலிவாலே—எங்கும்
பரந்த சொரூபவருட் பாதநிழல் வாழ்வே
நிரந்தரமா முத்தி நிலை.

1507. ஊன்மருவு மோக வுணர்வா முனைப்பகன்று
தான்மவுன மாட்சி தழைத்தலுற—ஆன்ம
சொரூபவருட் போதச் சுடர்விளக்கத் தாற்றேர்
விரூபவெளி வாழ்க்கையே வீடு.

1508. புந்திப் புலத்திலே பொங்குங் குருபாத
சந்திப்பா மோன தரிசனத்தால்—முந்தைக்
கலக்கமாம் பேதமனக் கற்பனைதீர் சாந்தித்
துலக்கமே முத்தி சுகம்.

1509. மோகமனக் கற்பனையின் மூழ்கா தொடுங்கியுளத்
தோர்கவன மாத்தன்மெய் யோர்தலான்—மோக
முனைப்பற் றுளிர்சொருப மோனமே பந்த
நினைப்பற் றொழிமெய்ந் நிலை.

(கொச்சகக் கலிப்பா)

1510. உறக்கவொ ணு நுட்ப வுணர்வா லுசாவி
மறக்க வொணுத் தன்னியற்கை வல்லியஞா
உறவுதுற வற்ற வுதாசீனங் கூரப் [னத்தால்
பிறவிக் கலக்கமறப் பேர்தல்காண் வீடே.

1511. தெளிந்து விளங்கு சிவஞான மோனம்
அளைந்தவகந் தானே யவிர்சொருப முத்தி
உளைந்துழல்வெம் பாச வுணர்வா மகந்தை
விளிந்தொழியப் பொங்கு வியன்பரமா மெய்யே.

1512. இரண்டற்ற வுண்மை யியல்பான மோனந்
திரண்டொளிர் வாழ்வு சிவானந்த முத்தி;
உருண்டுபுரண் டுனே வுருவெளித்தோற் றத்து
மருண்டழுங்கல் பாச வலைப்பட்ட வாழ்வே.

1513. பாசவலைப் பட்டுப் பதைக்கும் பசுத்துவம்
மூசு(ம்) மயக்க முனைப்பா மகந்தையே
தேசுறு தன் னுண்மைத் தெளிவாற் செருக்
[கொழிதல்
வேசறுவெம் பாச விமோசனமா முத்தியே.

1514. உகந்துடலை நானென் றுதித்த வகப்பா
முகந்தையே பந்தவுண்மை யாதலாற் சீவர்
முகந்துகொள வேண்டுவதோர் முத்தியின்மெய்
வகந்தையுணர் வானமய லற்றொழிவு தானே. [அந்த

1515. நுனிப்புற்ற கேவலமெய்ந் நோக்கால் அகப்பேய்
முனைப்பற்ற தன்னியல்பே முத்தி தனின்மற்
றெனைப்பற்று மற்ற வியற்சிற் பரமாய்
நினைப்பற் றொழிகை நிஜானந்த வாழ்வே.

1516. களிசே ரகந்தை கழன்றொழிய வுள்ளத்
தொளிசே ருணர்வா லுசாவித் துரீய
வெளியே வடிவா விளங்கலென்பர் உண்மைத்
தெளிவான முத்தித் திளைப்பான வாழ்வே.

1517. அகமாக வுள்ள வருட்சிற் பரத்தைத்
தகவே தெளிதல் சதாசிவமா முத்தி
செகமாயஞ் சேர்ந்தசெட தேகமகம் புத்தி
நிகழ்வேவெம் பாச நிகளத் தியல்வே.

1518. ஒத்த சமத்துவநோக் குள்ளமுறப் பொங்குசுப
வித்தகமெய்ஞ் ஞான விமுத்திநிலை நானெனும்
சித்தக் கலக்கந் தெளிந்து சிவோகமா [பொய்ச்
மெய்த்தகவு தன்னியல்பா மேவுசற் பாவமே.

1519. மிஞ்சுவதொன் றுண்டுபர மெய்யா; விசாரத்தால்,
விஞ்சைசே ரந்த வெளித்திரையில் யானிதுவென்
றெஞ்சியவாத் தோன்று மிரட்டையெலாஞ் சாயை
நெஞ்சமுறக் காண்கை நிஜானுபவ முத்தியே [களா

குறிப்பு:—விசாரந்தால் காண்கை என வியையும்.

1520. செத்தபிண மென்றே தெழிக்கக் கடவஜட
மித்தைகளில் வஞ்சகமா மேவியதோர் யானென்
புத்திக் கலக்கமறப் போதலே சுத்தபர [னும்
முத்தித் துலக்கமென மூதுணர்வோ ரோதுவரே.

குறிப்பு:—மித்யாஜட மென்பது ஜடமித்தை யென
முன்பின்னாகத் தொக்கது.

1521. களிசே ரகப்பேய் கரக்கவென் னுள்ளத்
தொளிசெய் பரசொருப வுண்மைப் பிரான்பாற்
றெளிசேர் சிவானுபவச் சீர்மைசேர் மோனந்
திளேதல் பரமார்த்த சித்தி முத்திப் பேறே.

1522. களங்கமற்ற வுள்ளக் கருவான வுண்மை
விளங்கலுற்ற வாற்றல் விசுத்தான்மா வாக
வளங்குலவு சுத்தவருள் வாரிவேகாண் உள்ளந்
துளங்கலறப் பொங்கு துரியவியல் வீடே.

1523. குருபதமே மோனக் குறிக்கோளா வுள்ளம்
மருவுதவத் தாலே மயக்கமற்று, வீட்டி
னுருவ மருவ முருவருவ மாயு
முருவகப்பேய்க் கட்டற் றொழிவதியல் வீடே.

குறிப்பு:—உருவ மருவம் எனவரும் உள்ளது நாற்
பதின் 40வது செய்யுள் ஈண்டு கவனிக்கத்
தக்கது.

1524. உன்னி யெழுந்தபா ழூத்தை யகந்தையறத்
தன்னை யறிந்துதான் றானாத் தழைத்தலே
மன்னியமெய்ஞ் ஞானவருள் வாழ்வான முத்தி
[யெனப்
பன்னுவார் உண்மைப் பயன்கண்ட பண்டிதரே.

1525. சுத்தவருள் வித்தை துலங்கலா லுள்ளத்திற்
புத்தமுத மோனனு பூதிப் புலந்தெளியில்
வித்தகவாழ் வாக விளங்கும் பரமார்த்த
மெய்த்தகவே பாச விமோசனமா முத்தியே.

1526. ஏனையறி வெல்லா மிகந்தொழியத் துன்றுசுப
மோன வுணர்வே முடிவான முத்திநிலை;
ஊனவகங் காரமுனைப் போயவொளிர் சுத்தவருள்
வானவியல் வாழ்வுகாண் மன்னுபர மார்த்தமே.

1527. எப்பரத்தின் பாலமற் றெல்லா மியல்வனவோ
அப்பரமே யுண்மை யகமா வகந்தெளிந்தாற்
சிற்பரமோ னனுபவச் சீர்சாலவ் வத்துவிதத்
தற்பரவாழ் வேகாண் சதாமுத்தி யாவதே.

1528. நுண்மைசேர் விட்புலமா நோக்கங் கிளர்சொருப
வுண்மைமோ னனுபவ முள்ளத் தியல்பாக
வண்மைபெற வாய்த்தவருள் வாழ்வென்பர் மெய்ஞ்
[ஞானத்
திண்மைசேர் தெய்விகமாஞ் சீவன்முத் திச்சிறப்பே.

1529. கற்பனைசேர் மோகக் கனவினின்று தன்னருளாற்
றற்பரமா வுள்ளவதிட் டான நிலை சார்வதா
லெப்பொழுது முள்ளத் தியல்பா வொளிர்சொருபச்
சிற்பரமோ னனுபவஞ் சீவன்முத் தித்திறமே.

## 100. மெய்க் காட்சி

1530. ஏனை யயலா வெதிரப் படுவதன்றித்
தானே யறிவொளியாத் தானவிர்கை மெய்க்காட்சி
ஊனமற்ற சுத்த வொளிவெளியாந் தன்னிடத்திற்
றானறியத் தன்னினுமெய்த் தத்துவம்வே றில்லையே.

1531. மித்தையே தோன்றுபல வேற்றுமைகள்; சுத்தவருள்
வித்தையிலே யின்றி வெறுவெளியாப் பொய்த்தலால்
ஒத்தியல்சற் போத வொளிவெளியே தன்னுருவாப்
புத்தியோ கத்தாற் புணர்வதுமெய்க் காட்சியே.

1532. காண்பா னிலாதவியற் காட்சியே கைவல்ய
மாண்பாக வுள்ளசிவ மாட்சியென்பர்; கற்பனையிற்
காண்பான்போற் றூன்றுமகங் காரவகப் பேய்
மாண்டா லகத்து மலர்தருமக் காட்சியே. [முனைப்பு

## 101 மோகம்

(குறள்)

1533. உடலே வடிவா வுழலு மகப்பேய்
நடலையே மோக நவை.

## 102 மோனம்

1534. வெளியாக வுள்ளம் விளங்கலே உண்மை
யொளியான மோன வுணர்வு.

1535. சுட்ட வொண்ணு சொரூபவருட் பார்வைகூர்
நிட்டையே மோன நிலை.

1536. அறிவா வகந்தெளிந் தான்றமைந்த வாழ்வே
நிறைவான மோன நிலை.

1537. முகிழ்மனக்கட் டான முரண்கெட் டியல்பாத்
திகழ்மலர்ச்சி மோனத் திறன்.

1538. வெளியே வடிவா விளங்கு சொரூப
வொளியே மவுன வுணர்வு

1539 நினைக்க வொண்ணு நினைவே அகந்தை
முனைக்கலற்ற மோன வுரு

குறிப்பு :— நினைக்க வொண்ணு நினைவென்றது சொரூப
வியல்பான சுத்தப் பிரஞ்ஞையை.

1540. அழுத்தமா மோன வுணர்வே அரிய
விழுத்தவமா மிக்கோர் திறத்து.

1541. அகந்தைமுனைப் பற்ற வருந்தவமே ஆன்றோர்க்
கிகந்தொழியா வுண்மை யியல்.

குறிப்பு :— அகந்தையறலே உண்மையில் அருந்தவ
மாக அறிதற்பாலது.

1542. அறிவான வுண்மையா வான்ற சொரூப
நிறைவேகாண் மோன நிலை.

1543. ஏக சொரூப வியற்சிற் பரவெளியே
*கூகமா மோனக் குறிப்பு.

*கூகம் - இரகசியம்.

(வெண்பா)

1544. ஊனமயற் பேயகந்தை யோய்ந்தொழியக் காண்டலால்
ஈன விளிவரல்சேர் சிந்தையிலா—ஞான
வொளிகூ ருபசாந்த வுள்ளத் தியல்பே
தெளிவான மோனத் திறன்.

1545. அருள்விளக்க மாக வகத்தே படர்மெய்ப்
பொருள்விளக்கம் மோனானு பூதி—மருள்வளர்க்கும்
சித்தக் கலக்கமாஞ் சீவபோ தச்செருக்குப்
பொய்த்தொழியக் காண்மெய்ப் புலம்.

(கொச்சகக் கலிப்பா)

1546. அருட்பரமா வுள்ள வனந்த சிவத்தில்
விருப்பெழலால் வேட்கைமற் றெல்லாம் விளிவுற்
றிருப்பளவா வுள்ள வியற்சிற் பரமாப்
புரிபதுகாண் மோனானு பூதிப் புலமே.

1547. எங்கு மௌனவற்று முள்ளும் புறமுமாத்
தங்குமதி நுட்பவொட்பத் தன்மைசே ருண்மையே
துங்க சொரூபமாத் தோய்ந்தமனப் பான்மை
பங்கமற்ற சுத்தப் பரமார்த்த மோனமே. [காண்

1548. மனத்தைக் கடந்த மகோந்நதமா முண்மை
தனித்து விளங்குபர தத்துவமா மோனம்
அனர்த்தமா மோக வகப்பேய் மனத்தை
எனைத்தென் றுசாவி லிலைமனமென் றென்றே.

1549. சித்தத் தெளிவிற் சிறப்பதே நித்தசுத்தப்
புத்தமுத மானவருட் பூரணமோ ரனுபவம்
மெய்த்தத் துவமா விளங்கும் பரசொருப
*முத்தத் துவவுணர்வே மோனமெய்ஞ் ஞானமே.

*முத்தத்துவம் - முத்தத்தன்மை.

1550. வெற்றிசே ருண்மை விசுத்தப் பரவெளியா
முற்றுவதால் அந்நிலையின் மோனமன்றி ஞான
[மில்லை
கற்றறிப யாவு(ம்)மனக் கற்பனை சொப்பனமா
அற்றொழிவே சுத்த வருட்பரமெய்ஞ் ஞானமே.

1551. பத்தியுணர் வானவருட் பார்வைமீக் கூர்தலாற்
புத்தியொளி மங்கவருட் போதவொளிப் பூரணமாய்
நித்தியவாழ் வான நிரதிசயா னந்தசுப
முத்தியுணர் வாவகத்து மூள்வதுகாண் மோனமே.

1552. உடங்குபுல வேட்கையற்ற வுள்ளுணர்வால்,
[யானென்
றடங்கெழுமோ கப்பா ழகந்தைமூ லந்தேர்ந்
தொடுங்கலுற்ற வுள்ளத் தொளிர்சொருப வுண்மைத்
திடங்கெழுமோ னங்காண் சிவத்துக் குருவே.

குறிப்பு :—உடங்கு - ஒருங்கு, முழுதும்; உள்ளுணர்
வால் தேர்ந்து என வியையும்.

1553. செறிவான சுத்த சிவக்கே வலமெய்
யறிவா விதயத் தவிர்சொருப மோன
நிறைவே பரமார்த்த ஞேயானு பூதி;
குறைவா மகந்தையற் குற்றமங் கின்றே.

## 103. யோகம்

(வெண்பா)

1554. ஊனமயல் வாழ்வா முலகியற்பற் றுக்களுக்கோ
ரீனப் பிறப்பிடமா மேதுவால்—யானெனுமப்
பற்றற் றொழிதல் பரயோகம் போதவருட்
புற்றே குகையின் பொருள்.

1555. அறிவுருவாந் தானேதா னாகவகத் தோன்றல்
உறுதிசேர் சிற்பரமா யோகம்—அறுதியா
மோகவகங் கார முனைப்பாஞ் சிதாபாச
வேகமறல் யோக விளைவு.

குறிப்பு :—சிற்பரமா யோகம் - சிற்பரமான மகா யோகம்; அறுதி - முடிவு.

1556. தெளிவாக வுள்ளவருட் சிற்பரமா மோன
வொளியுணர்வே மெய்ஞ்ஞான யோகம்—வெளியாக
நீடு சுபாவ நிரதிசய சாந்தியுளங்
கூடு சொரூபக் குலா.

## 104. வித்தை

(கொச்சகக் கலிப்பா)

1557. சுத்த வறிவுத் துலக்கமா மோனவருள்
வித்தையே வித்தைமற் றல்லா தவையவித்தை
சித்தமுத்தி யாகச் சிறந்து விளங்குறுமவ்
வித்தையொடு மற்றவையும் வித்தையெனல்
[வெட்கமே.

1558. நல்லசிவ ஞானவொளி நண்ணினு லன்றியகத்
தல்லிருள்சேர் பொல்லா வகப்பே யகல்வுறுர்;
சொல்ல வொணுதபடு சூதா மவிச்சையறக்
கல்லுவதே ஞானவருட் கல்விக் கறிகுறியே.

## 105. விரதம் (உண்ணு விரதம்)

1559. உண்ணு ரமுத வுணர்வுருவே யன்றிமற்றென்
றெண்ணு விரதமே *யெல்லோர் கடைப்பிடிப்பர்;
உண்ணு விரத மிருப்ப ருலகோர்தாம்
உண்ணுநின் றேமனத்தா லூனப் புலன்களே.

*எல்லோர் - அறிவுடையோர் (எல் - ஒளி, அறிவு).

1560. உண்ணு விரதத்தி னுண்மைநோக் கந்தேருர்
உண்ணு விரதத்தா லுண்மைப் பயன்சேரார்;
உண்ணு விரதவுண்மை யோர்ந்தொழுக லூற்று
பண்ணுநின் றுரன்னுர் பாரப் பெருந்தவமே; [ரேற்

## 106. வெற்றி

(வெண்பா)

1561. அஞ்ஞானக் கற்பிதமே யாகலா லிவ்வகிலம்
மெய்ஞ்ஞான வெற்றியே வெற்றியன்றி—அஞ்ஞான
நித்திரையி னூடே நிகழ்சொப் பனத்திலுறு
வெற்றியன்று வெற்றித் திறன்.

## 107. ஜீவன்

1562. எங்கெங்கு முள்ள விருப்பான யோனவுணர்
வங்கங்கு மந்தக் கரணந்தோ—றங்கமக
மென்றென் றுபாதிபற்றி யெண்ணு மகந்தைகளே
தூன்றும்பல் ஜீவத் தொகை.

## 108. கதம்பம்

1563. நண்ணக் கடவதுமெய்ஞ் ஞானவருட் செம்பதமே
பண்ணக் கடவதொரு பத்தியே—வண்ணவருட்
சின்மயமா மோனச் சிவசொருபத் தன்புபட்டுத்
தன்மயமா நிற்கை தவம்.

1564. மாணக் கடவதொரு மங்கலமா மன்னுயிராற்
பூணக் கடவதுசற் போதநிட்டை—காணக்
கடவதோ ருண்மைக் கடவுளே தானுச்
சுடர்வதோர் துப்புர வால்.

1565. தரிக்கவுயிர்க் குள்ளதோ சாந்தியே பாரம்
பரிக்கவோ வுள்ளான் பரமன்—சரிக்க
மருட்பா முலக மயக்கறுக்கு ஞான
வருட்பாதை யுண்டே யகத்து.

1566. பாசமறக் காண்டல் பரவித்தை சிற்பதத்து
நேசமுறு நீர்மை நிஜபத்தி - ஆசையறக்
கற்றொழுகல் சீலக் கலைமாட்சி நானெனும்பொய்
யற்றமற லுண்மை யறிவு.

1567. ஓர்மையா லன்றி யுணர்வில்லை சாந்திவளர்
நீர்மையா லன்றி நிறைவில்லை—சீர்மைசேர்
சீலத்தா லன்றிச் சிறப்பில்லை யில்லையருட்
கோலந்தா லன்றிக் குணம்.

1568. தேடத் தகுவதுமெய்ஞ் ஞான திரவியமே
நீடத் தகுவதுதன் னிட்டையே—கூடத்
தகுவதோ சித்தோப சாந்தியே பூணத்
தகுவதோ மோனத் தவம்.

(கொச்சகக் கலிப்பா)

1569. காயக் கடவது காம வெகுளியே
மாயக் கடவதுபொய்ம் மாய மயக்கமே
ஓயக் கடவ துநத்தவகப் பேய்முனைப்பே
ஆயக் கடவதுசுத் தான்ம சொரூபமே.

1570. ஓர்படவே தக்கதுதன் னுண்மையே; கூர்மதியா
லீர்படவே தக்கதுயா னென்னுமகப் பேய்முனைப்பே;
சீர்படவே தக்கதுதன் சித்தமே; சிற்பரமா
நேர்படவே தக்கதொரு நித்தமுத்தித் தன்மையே.

1571. கழிக்கக் கடவதுவெங் காமாதி; *தேர்வா
லொழிக்கக் கடவ துடலகந்தை மோகம்;
மழிக்கக் கடவதுபாழ் வாதனைவேர்; வாழ்வாச்
செழிக்கக் கடவது சிற்பரயோ கத்தெளிவே.

* தேர்வு - விசாரணை.

1572. நட்கக் கடவதுமெய்ஞ் ஞான சொரூபமே;
உட்கக் கடவதுபா ழூத்தையகப் பேய்முனைப்பே,
மட்கக் கடவதுபொய்ம் மானபி மானமே;
வெட்கக் கடவதுமின் ஞர்காம வேட்கையே.

1573. பேரக் கடவதகப் பேய்மானம்; பேதமறச்
சேரக் கடவதுசச் சித்தான தன்சொருபம்;
சாரக் கடவதுப சாந்தநிலை; சாதனையாக
கூரக் கடவதருட் கோமான்மோ னக்குறியே.

1574. ஆரக் கடவதுசுத் தான்மானு பூதியே
ஓரக் கடவதுதன் னெட்பநுட்ப வுண்மையே
பேரக் கடவதுநா னென்னுமகப் பேய்முனைப்பே
சாரக் கடவதோ சற்பத்தி சாதனையே.

குறிப்பு :—'சாரக் கடவதோ சான்றோர்சற் சங்கமே' எனவும் பாடம்.

1575. தூற்றக் கடவதெதிர் தோற்றும் புலன்களே
ஆற்றக் கடவதுசொந் தான்ம விசாரமே
மாற்றக் கடவதுபொய்ம் மானுபி மானமே
போற்றக் கடவதுசற் போத சொரூபமே.

1576. ஆற்றக் கடவதுமிக் கான்ற தியாகமே
தேற்றக் கடவதுதன் சிற்சொரூப வுண்மையே
மாற்றக் கடவதுபொய்ம் மானுபி மானமே
போற்றக் கடவதுசற் போதவருட் பொன்னடியே.

1577. ஓரக் கடவதுதன் னெட்பநுட்ப வுண்மையே
ஈரக் கடவதோ யானென்னுஞ் சிச்சடமே
தேரக் கடவதுசச் சிற்பரமா வுள்ளவருட்
பூரணமோ னனுபவப் புண்ணியன்செம் பொன்
[னடியே.

1578. கல்லுவது மோகவகங் காரப் படுகிழங்கே;
புல்லுவது சுத்தசற் போதானு பூதியே;
சொல்லுவதென் னுண்டான் சொரூபவருள்
[வண்புகழே;
வெல்லுவது ஞானவருள் வித்தகன்பே ராட்சியே.

1579. எண்ணக் கடவ திறைவன் சொரூபமே;
பண்ணக் கடவதுசற் பத்தியே; பாக்கியமா
நண்ணக் கடவதுமெய்ஞ் ஞானமே; நல்லமுதா
வுண்ணக் கடவ துபசாந்த போகமே.

1580. வலையியல்பு நானெனும்பொய்ம் மானமே முத்தி
நிலையியல்பு விட்புலமா மோனமே நில்லார்
கலையறிவு கல்விக்கோ ரீனமே கற்றார்
தலையியல்பு நானுதியாத் தன்னிழப்புத் தானே.

1581. உண்மை யொளியாக வுள்ளதுசற் போதமே
தண்மைசேர் மெய்யுணர்வுத் தேர்ச்சி சிவோகமே
வண்மைசேர் வாழ்வாக வைகுவது சாந்தியே
தண்மைசேர் சாந்திமனத் தாபந் தணிதலே.

1582. ஊடலோ கூடலோ வுள்ளுமனேல் லாசமே;
விடுபே றுள்ளமே வித்தகமா வொத்தவியல்;
நீடகமா வுள்ளமெய்ஞ் ஞேயத்தில் யானென்ற
மூட வகந்தைமதி மூலப்பா மூணவமே.

1583. சிவமா வதுசுத்தச் சிற்சொருபத் தன்மை;
அவமா வதுபா முகந்தைமனத் தன்மை;
தவமா வதுசிச் சடவேறு பாடு;
விவசாய வுண்மை விசார வுழைப்பே.

**குறிப்பு :—*சிச்சட வேறுபாடு* - *மித்யாக் கிரந்தியான சிற்சடங்களை விசாரத்தால் வேறுபடக் காண்டல்.***

1584. ஆக்கமெனக் காண்டா னருளே; அபரிமிதத்
தேக்கமெனக் கான்றமைந்த சித்தோப சாந்தியே;
ஊக்கமெனக் குட்சே ருபரதியே; உண்மைசெழு
மோக்கமெனக் கொட்பநுட்ப மோனப் பரவெளியே.

1585. ஆற்றக் கடவதுஞா ஞான்ம விசாரமே
மாற்றக் கடவதுபொய்ம் மாஞுபி மானமே
போற்றக் கடவதுசற் போத சொரூபமே
தேற்றக் கடவதுயர் சித்தோப சாந்தியே.

1586. உள்ளத் தருவதுதன் னுண்மையே உள்ளுணர்வா
லுள்ளத் தருவதுசாந் தானுபவ மோனமே
தள்ளத் தகுவதெல்லாச் சார்புமே நெஞ்சினின்
றெள்ளத் தகுவதுயா னென்னுமகப் பேய்முனைப்பே.

1587. பாடிப் படிப்பதநுட் பார சொரூபமே
கூடிக் களிப்பதகக் கோட்டமற்றூர் கூட்டமே
நாடித் திளைப்பதுமெய்ஞ் ஞானப் பிரான்பதமே
சூடிப் பதத்தைத் துலங்குவதென் சென்னியே.

1588. அற்பசொற்ப மல்லா வகந்தைமுனைப் பற்றியல்பா
நிற்பதுநெஞ் சத்து நிராலம்ப நிஷ்டையே
சிற்பரமா நீடு தியானுஞ் பூதியாற்
கற்பதருட் காந்தக் கமனீயப் பொற்பதமே.

## 109. நிலை மாட்சி

1589. நிறைந்த சுபாவமெய்ஞ் ஞேயநிலை சுட்டி
யறிந்திடவொன் றற்றசுத் தான்மநிலை உள்ளந்
திறந்தவெளி யாகத் திகழ்ந்தநிலை நானற்
றிறந்தொழிய மிஞ்சும்பே ரின்பநிலை தானே.

1590. எற்றென் றியம்பவொணு வின்பநிலை எல்லோருங்
கற்றறிந்து நிற்கக் கடவநிலை தன்னியல்பிற்
ருேற்றுமற்ருென் றற்ற துரியநிலை தொந்தமொரு
சற்றுமறத் தானுத் *தனித்தநிலை தானே.

* தரித்த நிலை எனவும் பாடம்.

1591. தள்ளரிய தன்னியல்பாத் தங்குநிலை மோனவருள்
வெள்ளமாத் துன்று வியோமநலை சுத்தசிவத்
தெள்ளமுத மாகச் சிறந்தநிலை நானெனு மபொய்
யுள்ளலற வுள்ளதன் னுண்மைநிலை தானே.

1592. வழிவழியா வந்தபெரு வாழ்வுநிலை பாவப்
பழியொடுசே ராதவருட் பண்புநிலை அற்ருர்க்
கொழிவறவென் றென்றுமுள வுண்மைநிலை [உள்ளத்
திழிவுடல்யா னென்ன விகந்தநிலை தானே.

1593. தன்பதமே நம்பியசச் சந்தத் ததீயரகத்
தன்புசிவ மாக வமைந்தநிலை மற்ருேரை
வெம்பவாழ் வாக வெதுப்புலகில் மெய்யன்பர்க்
கின்பவூற் ருக விளைந்தநிலை தானே.

1594. நோதகவு சேர வொண்ணு *நோன்மைநிலை
[தோய்தலின்மிக்
காதரமுற் றுருக் கணுக்கநிலை ஆய்தலரு
வேதவே தாந்த விளக்கநிலை கற்பனு
பேதமற்ற சுத்தப் பிரம்மநிலை தானே.

* நோன்மை - வலிமை

1595. அங்கமகம் புத்தி யகன்றொழிய என்னகத்திற்
பொங்குசுப வாழ்வாப் புணர்ந்தநிலை தானிருப்ப
திங்கங் கெனவொண்ணு தெங்கெங்கு மாகவொளிர்
துங்கமெய்ஞ் ஞான சொரூபநிலை தானே.

1596. அசுத்தப் பழமலக்கா ராணவஞ்செற் றென்னுள்
விசுத்தத் தெளிவா விளங்குநிலை என்றும்
பசுத்துவமோ ராதவருட் பார சொரூப
நிசத்தவவாழ் வாக நிலாவுநிலை தானே.

1597. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிவா யொழுகலுறு நிஷ்டைநிலை *சுத்த
வறிவான தன்னின்மற் றன்னியமொன் றில்லாச்
செறிவாக வுள்ளபர தெய்வநிலை தானே.

*சுத்த வறிவு - திரிபுடி வடிவான கற்பனு பேதக்கலப்
பின்றிப் பரமார்த்த வுண்மையளவாக வுள்ள அறிவு.

1598. விரவுமலப் பாறில் விசைத்தெழுந்து தானென்
றிரவைப் பகலா வெதிர்ந்தேன் மயக்கக்
கரவகலக் கண்டவருட் காட்சிநிலை ஞானப்
பரவெளியாத் துன்றுசிவ பானுநிலை தானே.

1599. விளங்கலுற்ற ஞானவருள் வெற்றிசேர் தன்மாட்
டுளங்கலந்த மோனவுணர் வூற்றமே நிஷ்டை
வளங்குலவு சுத்த வசீகரவாழ் வாகத்
துளங்கலற்ற வுண்மைத் துரீயநிலை தானே.

1600. தறையிலெனக் குற்றபரந் தாமநிலை தன்மெய்
யறிவிற் பிரியா வதீதநிலை என்றே
டுறவு கலந்தபர வுண்மைநிலை சித்தஞ்
செறிவுபடத் துன்றுசிவச் சீர்மைநிலை தானே.

1601. வீடாக வுள்ள விசேடநிலை கேவலமெய்த்
தாடாளன் றன்னருளாற் றுனே தனக்குக்கண்
கூடாக வுள்ளங் குலாவுநிலை கற்பனையூ
டாடா வதீதசுத் தான்மநிலை தானே.

1602. *தொடாதபர யோக சொரூபநிலை உள்ளத்
தடாமலகப் பேயை யகற்றுநிலை பாச
விடாயணுகா வின்பவருள் வீட்டுநிலை மட்கிக்
கெடாதசிவக் கேவலநிக் கேபநிலை தானே.

**தொடாதபர யோகம் - அஸ்பர்சம் என்னும் பரஞான யோகம்.**

1603. நேரா விளங்குபர ஞேயநிலை தன்னுண்மை
யோராதா ருள்ளத் தொளிக்குநிலை ஓர்த்தாருக்
காரா வமுதாவண் ணிக்குநிலை என்னறிவிற்
பூராய மாகப் புணர்ந்தநிலை தானே.

1604. விருப்பான சாந்தி விளக்குநிலை ஞான
நெருப்பா லகந்தையை நீறுக்கி மோனத்
திருப்பாத மாகத் திளைக்கவென் னுள்ளத்
திருப்பாக வுள்ள விபல்புநிலை தானே.

# IV. கதம்பக் கருத்து

## 1. அடியார் மாட்சி

(வெண்பா)

1605. பத்தருக்கே யன்றிப் பாம சுதந்தரவாழ்
வித்தரைக்கண் மற்றூர்க் கியல்வதன்று—கர்த்த
யாட்பட்ட வாற்று லறிவுகர்த் தத்துவத்தாற் [னுக்கே
பாட்படார் பந்தப் படார்.

1606. வேதியா நின்றவருள் வித்தகன்மெய் யன்பர்க்குப்
போதியா நின்றவருட் போதனையால்—கோதிலா
ஞானவருட் காட்சியிந் நானிலத்திற் பெற்றெளிரும்
மானவர் மாணப் பலர்.

## 2. அபேதவுண்மை

(வேறு)

1607. பொன்னி லணிகலம்போல், வன்ன வருள்வெளி [யாந்
தன்னி லகந்தையறில், மின்னு மபேதமெய்யே.

## 3. அர்ப்பணம்

(வெண்பா)

1608. அப்பனொடு பிள்ளை யபேதமா முண்மையறி
வற்பநட ஞெமென் னகத்திலே—செப்பமுறச்
சேர்த்தமெய் யப்பனுக்கென் ஜீவியமே யர்ப்பண
சேர்த்தலன் றிச் செய்வதுமற் றென். [மாச்

## 4. அருட்பாதம்

1609. அன்பு மறிவுமொன் றுனவருட் கேவலப்பே
ரின்பமா மோன வியற்பதத்தே—அன்பறிவாத்
தூன்றுபர பத்தி சொரூபானு பூதியா
மன்றவிளங் கிற்று மனத்து.

குறிப்பு :—**அன்பு - பக்தி; அறிவு - ஞானம். ஒன்றுன இயற்பதத்தே எனக் கூட்டுக.**

1610. முயன்று வருந்தாத மோனப் பெருவாழ்
வியன்றெளிர வுள்ளத் தியல்பா—நயன்றருசச்
சிற்பரமா வாண்டகுரு தேவனருட் பாதமே
தற்பரமா வுள்ளவியற் சார்பு.

1611. பழுதற்ற மோனவருட் பாத வுணர்வே
அழிவற்ற வாழ்வென்ப ராய்ந்தோர்—ஒழிவற்
றெளிர்சொருப மாமவ் வுலப்பில்பே ரின்பக்
களிபெரு வாழுங் கருத்து.

## 5. அருட் பூரணம்

1612. பொது வுடைமை யானவருட் பூரணமாப் பொங்
[கும்
அதுசொருப மாக வடைந்தேன்—முதுபுணர்ப்பா
மோகக் கலக்கமற்று மோனப்பே ரின்பவுணர்
வாகத் துலங்கு மது.

1613. புந்தியிலே யோங்குசிவ போதவருட் பூரணமே
விந்தைசேர் வாழ்வா விளங்கலால்—சிந்தையில்பே
ரின்பமே யுண்மை யியல்வடிவ மாகமெய்
யன்புமே லிட்ட தகத்து.

## 6. அருள் வாழ்வு

1614. விந்தையாத் தோன்று விசித்திரமாம் பந்தமுத்தி
தொந்த மயக்கமறத் தூர்தலால்—சிந்தையகன்
றேல விளங்கு மிதயமாங் கைவல்ய
வாலறிவே சுத்தவருள் வாழ்வு.

குறிப்பு :—பந்தமுத்தி தொந்த மயக்கம் - பந்த முத்தி முதலான தொந்தங்களுக்குக் காரணமான மயக்கம்.

1615. வேதாந்த வுண்மை விளக்கமுற வென்னுளிறை
போதாந்த வாழ்வாப் பொருந்தினன்—சூதார்ந்த
மோகக் கலக்கமற்ற மோனவருட் கேவலவாழ்
வாகத் துலங்கிற் றகம்.

## 7. அருள் வெளி

1616. அதுவே சொரூபமா வாய்ந்தறிந்து மோனப்
பொதுவான வாழ்வு புணர்ந்தோர்—அதுவா
வதிலமுந்த லன்றி யயலார்போல் வேறெக்
கதியிலுந்தாஞ் சென்றுகலங் கார்.

குறிப்பு :—மோனப்பொது - அருள்வெளி, இதயவெளி.

1617. போத வருள்வெளியிற் பூரணமாப் பொங்குசொரு
பாதவனு மென்றன் னறிவொளியே—பேதமயற்
கற்பனு ஜாலக் கருமாயம் பொய்க்கக்காண்
கிற்பதோர் விஞ்சைத் திறம்.

1618. அருள்வெளியைக் கண்டா ரருள்வெளியே யாவரர்
அருள்வெளியிற் றம்முருவே ருகார்—அருள்வெளியிற்
பொய்த்தொழியப் பொய்த்தன்மை பொங்குசிவ
மொய்த்தொளிரும் முத்த ரவர். [பூரணமா

## 8. அறிவு

(குறள்)

1619. அறிவான தன்மெய் யறியிலன்றி யார்க்கும்
அறிவான சாந்தி யரிது.

1620. அறிவுண்மை யான வமைதிசேர் மோனச்
செறிவன்றி யில்லை சிவம்.

(வெண்பா)

1621. தங்கவொளி சூழ்ந்த துரீயவெளி யேயுருவா
அங்கமகம் புத்தி யகன்றதால்—எங்குமெனக்
கின்பமா மோன வியற்பரவாழ் வோங்கவுளத்
தன்புமே லிட்ட தறிவு.

1622. உள்ளந் திறந்துவிளங் குண்மையா லூத்தை
கள்ளங் கரவு கழன்ருழிய—அள்ளுந் [மனக்
துரியவெளி யானவருட் சூழலிலே தோன்றிற்
றரியபரந் தாம வறிவு.

1623. நிகிலங் களுக்கு நிலையா யுலைவற்
றகளங்க மாநீ டறிவே—அகம்பொருளாத்
துன்றுமே கான்ம சொரூபமா முண்மையுணர்
வொன்றியது வாழ்வா வுளத்து.

அறிவே சொரூபமாம் உண்மை யுணர்வு எனக்கூட்டுக.
அகம் பொருள் - அகம்பத லக்ஷ்யார்த்தம் தானென்
னுஞ் சொல்லின் முடிந்த பொருள்.

1624. அகமென் றிதமென் றயல்களைப் பற்று
தகமகமா முண்மை யறிவே—அகமிதமென்
றெல்லாவற் றுக்கு மியற்பரமாந் தன்னுருவா
நல்லாங் கறிவர்நல் லோர்.

(கொச்சகக் கலிப்பா)

1625. அறிவுதாய் தாக வவிர்ந்திடப்பெற் றுல்அவ்
வறிவினும்வே றாக வரும்பரமொன் றில்லை
மறவியாத் துன்றுபிர மாத மனத்தை
மறவியா வெண்ணியருள் வாளாற் றடிகவே.

(வேறு)

1626. அன்புமய மின்பமயம், இன்பமயம் சாந்திமயம்,
சாந்திமய மறிவுமயம், அறிவுமய முண்மைமயம்.

## 9. அநுபூதி வாழ்வு

(குறள்)

1627. தனுவாதி மோகந் தணத்தலே தன்மெய்
யனுபூதி ஞான வடைவு.

(வெண்பா)

1628 பூரணமெய்ஞ் ஞானப் பொலிவா மனுபூதிச்
சீரணவ வென்னுட் செழித்தபிரான்—காரணவும்
பாழவிச்சை காணுப் பரஞ்சோதி யானபத
நீழலிற்சார் புண்மை நிலை.

1629. அற்புதமெய்ஞ் ஞான வருட்பரமே யாக்கமுறுங்
கற்பகமா வுள்ளங் கலத்தலால்—அற்ப
மனக்குறைசேர் வாழ்க்கை வறுங்கனு வாக
எனக்கிறைவாழ் வெய்திற் றினிது.

1630. நல்லாங் கடைந்தசிவ ஞானநு பூதியெனக்
கெல்லா நலங்களுமா வின்புற்றேன்—பொல்லா
மனக்கலக்க மான மயற்பிறவித் துன்பம்
எனக்கிலையென் றென்று மினி.

## 10. ஆண்டவன் மாட்சி

1631. யாதுமோ ரூனமில்பே ரின்பவருட் பாற்கடலாப்
போதுவதாம் போதபரி பூரணத்தின்—சேதுவா
மன்னுயிர்க்கு வாழ்வளித்த மாட்சிசே ராண்டவ
றன்னுயிர்க்கு வாழ்வாஞ் சதம். [னென்

1632. சும்மா விருக்கவருள் சூழ்ச்சியா லென்னையென்
னம்மா னடிக்காண் டருளினன்—செம்மாண்
பொருளேநா ஞகப் புணர்ந்தவனு பூதித்
தெருளேயென் சிந்தைத் திறம்.

1633. உடையா னுணர்வுருவா *வுள்ளமுற மோகப்
படையான தெவ்வ ருடைந்தார்—தடையற்
றருள்விளங்கு சொந்தவர சாட்சியா லின்பப்
பொருள் வளம்பொங் கிற்றுப் பொலிந்து.

***உள்ளம் - இதயம்; அதுவே ஆத்மீக ஸ்வராஜ்ய ஆதி பத்யப் பீடம் என்றறிக.**

1634. ஈண்டவெனக் கெப்பிறவி யெய்தினுமெங் கென்ன [ருமை
யாண்டவனுக் கன்றிநா ஞட்செய்யேன்—பூண்ட [வருட்
போதப் புலமையாற் புண்ணியன்செம் பொன்ன
ரோதித் திளைக்கு முணர்வு. [டிச்சீ

1635. ஆண்டவனே டுள்ள வருமைத் தொடர்பிலெனக்
காண்டவனே டுற்றமெய் யன்புணர்வால்—ஆண்ட [வனை
என்னின்வே றுவுறழ்ந்த யானெனுமப் புன்மயல்
என்னியல்யா ஞமகிழ்கின் றேன். [போய்

1636. ஆண்டான் பெருமைதனக் காரியனுத் தன்னினயல்
ஈண்டாரு மின்றித்தன் னிற்றுனே—மூண்டாரும்
ஞான சொரூபமாய் நானிலத்துக் சோர்குருதான்
ஆன வதிசயமே யாம்.

1637. அடிகளான் மிக்க வமர நிலை பெற்ற
குடிகளோங் கும்பிடுங் கோயில்—உடலே
விமானமா வூர்ந்து விளங்கியபே ராண்டான்
சமாதியாந் தெய்வத் தலம்.

1638. குருவே யெனது குலதெய்வ மாகப்
பரவக் கிடைத்தவருட் பாங்கால்—குருசொருபப்
பூரணசற் போதப் பொலிவுபெற்ற வாழ்விலிருட்
சோரவகப் பேய்பொய்த் தது.

## 11. ஆண்டானருள் மாட்சி

1639. எண்ணிய வெல்லா மினிதுகை கூட்டுவிக்கும்
திண்ணியமெய்ஞ் ஞானவருட் செம்பிரான்—
[*புண்ணியமப்
போதுநான் செய்ததிப் போது விளைதலால்
சாதுவா வாண்டருள்செய் தான்.

*புண்ணியம் - **சிவபுண்ணியம்.**

1640. அருள் விளங்கு மோனஞா னனுபவத் தாலே
மருள்வழங்கு கற்பனையை மாற்றும்—இருளகல்சச்
சிற்பரமாம் பாதத் தியானமனு பூதியளித்
தற்புதமா வாண்டா னருள்.

1641. புகழா வுலகுமுற்றப் போர்த்துவிளங் காண்டான்
திகழ்வா லகத்தேசச் சித்தாய்—இகழ்சேர்
அவிச்சையிருட் போர்வை யறக்கிழிந்து மிக்க
சுவச்சமா நான்சுடர்கின் றேன்.

1642. வேண்டா விருப்பாய் வினையுடல்வாழ் வூடுமய
லீண்டாநின் றேங்கி யிளைத்தவெனக்—காண்டா
னருட்சீர் விலாசமே யாக வறிந்து
மருட்சியறப் பெற்றதவ் வாழ்வு.

1643. கனவிலே யானுழங் காற்பட்ட வென்னை
எனதியா னென்னுநீ யாவன்—உனது
சொரூபமென்சொல் லென்றான் சொரூபகுரு
விரூபவெளி யானேன் விழித்து. [நாதன்

1644. அகமே யகலாச்சிங் காதனமா வுள்ளான்
முகமே புரிந்தகுரு மூர்த்தி—அகமா
லகற்றியென் னுள்ளே யகமகமென் றுன்ம
சுகத்தியல்பா மோனஞ் சுரந்து.

1645. பரமான மோனவருட் பாக்கியமென் னுள்ளத்
துரமாகச் சேர்த்த வுடையான்—தரமாகக்
காணவுற்ற போதே கடவுட் பரமாக
மாணவுற்று னென்புன் மனத்து.

1646. தன்னடியே முற்றச் சரணு கதியாகத்
துன்னடியேன் மோனவருட் சூழலிலே—முன்னடி
துய்த்தவருட் போத சொரூபானு பூதிபெற [யார்
அத்தனளித் தானென் னகத்து.

குறிப்பு :—அடியேன் அருட் சூழலில் அநுபூதிபெற
அத்தனளித்தான் எனக் கூட்டுக.

1647. என்று மெவர்க்கு மியல்பா யிருக்கினுந்தான்
ஒன்றுகுரு நாத னுணர்த்திலல்—அன்றிமற்
றோர்தா ரகமான வுள்ளத் தறிவுநவை
யார்தா மறியவல் லார்.

(கொச்சகக் கலிப்பா)

1648. பெருமா னருளிற் பிறந்து வளர்ந்தேன்
பெருமா னருளிலகப் பேய்முனைப்பற் றேய்ந்தேன்
பெருமா னருளே சொரூபமாப் பெற்றேன்
பெருமாண் பிரம்மபதப் பெற்றியடைந் தேனே.

1649. பரமனருட் பாரமா யாவுமா பரிப்பான்
சிரமிசைநா மேற்கச் சிறிதுமில்லை யென்னும்
உரமதிகூ ருள்ளுணர்வா லுய்வித்த வாண்டான்
இரமியவாழ் வாக விதயத் துளானே.

## 12. இதயம்

(வெண்பா)

1650. இடமெங்குந் தாமா யிருக்குமுண்மை தேரு
துடலுருவாத் தம்மை யுனலால்—இடமெங்கும்
ஓடியுழன் றுடுமன வூசலா ரெங்கியன்றும்
பீடுபெற யாதும் பெறார்.

1651. இதயமே பற்றி யிருப்புணர்வா நிற்றல்
விதியைமேற் கொள்ளு முபாயம்—இதயமே
சத்தி நிபாதவ நட் சான்றோர் பயிற்றுபர
பத்தியா லெய்தும் பதி.

**குறிப்பு :—இருப்புணர்வே இதயமாக அறிதற் பாலதாம்.**

1652. ஆண்டவனுக் கேற்ற வடிமையாய் மெய்யறிவோ
டீண்டவிருக் கின்றே னிதயத்தே—வேண்டவெனக்
கொன்றுமின்றி யெல்லா மொளிர் சொருபப்
என்றுமுள்ளா னுள்ளத் திறை. [பூரணமா

## 13. இயல் வாழ்வு

1653. தானேதா னகத் தழைத்தொளிர்சற் போதவருள்
வானே சொரூபவியல் வாழ்வாக—ஊனேறு
பந்தவுணர் வானவெம் பாச மயக்கமறச்
சிந்தியது சித்தந் தெளிந்து.

1654. உண்மையியல் வாழ்வே யுறுதியா வாருயிர்க்கு
வண்மைசேர் சாந்தி வளைத்தலால்—கண்மயல்சேர்
தோற்றமாம் பொய்த்துவிதச் சுட்டறிவுச் சூழலிளின்
றுற்றவிடு பட்ட தறிவு.

## 14. இறை மாட்சி

(குறள்)

1655. எங்குங் கலந்த விறைவனே காண்களன்
னெங்கங் கலந்தவம் மான்.

1656. கல்லா வகந்தைக் கலக்கமறக் கண்டவருக்
கெல்லா மிறைவன் செயல்.

**கல்லா வகந்தைக் கலக்கம்** - மயக்க வடியான கர்த்
தத்துவ புத்திக் கலக்கம்.

(வெண்பா)

1657. பண்ணுவ தெல்லா மிறைபணியே பண்ணிமகிழ்ந்
தெண்ணுவ தெல்லா மிறைகுணமே—எண்ணி
யியம்புவ தெல்லா மிறைபுகழே யாக
நயம்பெறுமென் ஞருயிர்வாழ் நாள்.

## 15 உணர்வொளி

1658. ஒளியொளியென் ருன்ரே ருரைப்பதுசற் போத
வொளியெனவே யுள்ளமுறத் தேர்க—தெளிவா
முணர்வொளியே யுண்மையொளி காட்சிப் புலஞ
வணவொளியோ மாய வொளி.

1659. உள்ளதுபே ரின்ப வுணர்வொளிசேர் சுத்தவெளி
கள்ளமங்குக் காணக் கடவதன்று—கள்ளமனக்
காயவகங் காரக் கலக்கமறிற் றன்னுருவாத்
தோயவரு மத்தத் துவம்.

## 16. உலகமதி மித்தை

1660. அதாகவகஞ் சும்மா வமைந்தொளிர் மெய்ஞ் [ஞானத்
தெதாயிடினுங் கற்பனையே யென்று—நிதாகன்
கதையாற் றெளிவாகக் காணி னுலக
மதியனைத்தும் மாயா மயம்.

## 17. உள்ளுணர்வு

1661. உள்ளா னெருவ னெருகாலும் யாராலுந்
தள்ளவொணுத் தன்னுருவே தற்பரமாக்— கள்ள [மறக்
காண விழைந்தவருட் காதலோர்க் குள்ளுணர்வா
மாணத் தனையகத்தில் வைத்து.

## 18. ஏகான்ம சித்தி

(குறள்)

1662. தேகான்ம புத்தியறத் தீர்தலே தேற்றஞ்சே
ரேகான்ம சித்தி யியல்.

## 19. கடவுட் காட்சி

(வெண்பா)

1663. உள்ளமே யாக வுணர்விற் கலத்தலாற்
கள்ளமற நின்றான் கடவுளான்—வெள்ளமாம்
போத சொரூபனையிப் போது புணர்ந்துநின்றேன்
ஓர்தசம ளுக வுளத்து.

## 20. குருசந்நிதி மாட்சி

1664. அருந்தவ மாட்சியா லானந்த மாக
இருந்த விடத்தி லிருந்தே—பொருந்த
உலகோரைத் தன்றிருமுன் ளென்றுபடக் கூட்டி
மலவா தனைகழித்தான் மன்.

## 21. குரு சொரூபம்

1665. வரம்பிலா மோனவருள் வாழ்வளித்த வள்ளல்
பரம்பரமா வோங்கும் பகவன்—நரம்பயின்ற
வேடத்த ளுக வெளிநோக்கா லுள்ளுணர்வாற்
கூடத்த ளுக்காண் குரு.

1666. விளங்கு சொரூபவருள் விஞ்சையா லாண்டான்
உளங்குளிர நோக்கு முடையான்—வளங்குலவு
வாலறிவா மோன வயிரப் பருப்பதமாத்
தாலந் தரித்துநின்ற தான்.

1667. உணவாகப் புக்கா னுடையான் பதத்துக்
குணர்வான சாந்தி யொளிரும்—புணர்வாற்
சிவசொருப மானவருட் சித்தாக மோகக்
கவர்சருவு சித்தங் கழன்று.

சித்தங் கழன்று சித்தாகப் புணர்வால் எனக்கூட்டுக.
மோகக் கவர்சருவு சித்தம் - (ஜீவபோதச் சேஷ்டைக் கிடமாக) ஆவரணமும் அதனின்று விளைந்த விக்ஷேபமுஞ் சேர்ந்த சித்தம்.

1668. வயிரமலை போல வளர்சொருபன் பாசச்
செயிரகற்று மெய்ஞ்ஞான தேவன்—உயிர்பலவற்
றுள்ளு மொரேமெய் யுணர்வொளியாஞ் சாட்சியாக்
கள்ளமரு மோனக் கரு.

## 22. குரு பாதம்

(குறள்)

1669. ஒளிவெளியா வுள்ளத் துறைசொருபன் பாதத்
திளிவரல்யா னற்றெழுந் தேன்.

(வெண்பா)

1670. அவனன்றிச் சற்று மிவன்வே றலாமல்
இவனவனே யான வியைபால்—இவன்றன்
கனமெடுத்துக் கூறல்போற் காணப் படினும்
கனமடுத்த லாண்டான் கழற்கு.

1671. இரண்டற்ற வுண்மை யியல்பான மோனந்
திரண்டொளிர்வாழ் வுள்ளஞ் செழிக்க—மருண்ட
கற்பனையை மாற்றிக் கலந்தகுரு நாதனடி [மனக்
நிற்பதென் னெஞ்சு நிறைந்து.

1672. நேயமுறப் பெற்றவென் னெஞ்சினின்று மாயமா
மாயவகப் பேயகன்ற மாட்சியால்—நாயகன்செம்
பாதவொளி யெங்கும் பரந்தவருட் சிற்பரவாழ்
வோதவொணு வுண்மை யியல்.

(கொச்சகக் கலிப்பா)

1673. *தணவலுக் கேதுவாச் சார்ந்தமனத் †தஞ்ச
வுணர்வே தனக்குகந்த வூணாக வுட்கொண்
டணவலுற்ற மோன வருள்வெளியாம் ‡பாத
வுணர்வே சிறந்த வுபாசனையென் பாரே.

*தணவல் - பிரிதல் †தஞ்சவுணர்வு - எளிமையான உணர்வு என்றது 'நான்' என்னும் அகந்தை வடிவான ஜீவபோதத்தை ‡பாதவுணர்வு - பாதவடிவான உணர்வு.

1674. அத்தகநிற் கின்றோரா லன்றிமனக் கற்பனைசே
ரெத்தரா லோரவொண்ணா வெம்பிரான் சிற்பதத்திற்
செத்தொழிந்தேன் செத்துச் சிவமா வுயிர்க்கலுற்
அத்தனடிக் காளா வடைந்த வடியேனே. [றேன்

## 23. குருபாத மாட்சி

(வெண்பா)

1675. திறந்தவெளி யாகத் தெளிந்த சிவத்தை
மறந்தொழிய வொண்ணா மனத்தாற்—சிறந்த
பரங்கருணை வைப்பாம் பதவை பவத்தி
லிரங்கலெவன் யான்மற் றினி.

1676. குறிகுணமற் றுன்றவருட் கோலவொளிப் பாதத்
தறிவுமய மானமெய் யன்பால்—மறவியற்ற
மாட்சிசேர் மோன வசீகரப்பே ரின்பநிலை
யாட்சி விளைந்த தகத்து.

1677. கண்டுகொண் டென்னைக் கழலுக் கடிமைபுகத்
தொண்டுகொண் டாண்டபரஞ் சோதியருள்—கண்டுகொண்
டுள்ளுணர்வு பற்றி யுடையான் பதவொளியிற்
கள்ளமனம் வெள்கிற்றுக் காண்.

1678. தவத்தியல்வாழ் வாகத் தழைத்தலா லென்னுட்
பவித்திரமா மோனவருட் பாதம்—விவர்த்தமாத்
தோன்றுலகு சொந்த சொரூப விலாசமா
வூன்றியதென் னுள்ளத் துணர்வு.

குறிப்பு: பாதம் தழைத்தலால் என்க; விவர்த்தமாகக் கண்டு என அவாய் நிலையால் வருவித்து முடிக்க

1679. விளங்குசிவ ஞானவருள் வேள்வித்தீ யாக
உளங்கிளர்செம் பாத வொளியால்—களங்கமணப்
பாச மயக்கப் பழிபாவம் மோசனமாய்த்
தேசமைந்த தென்சீ வியம்.

1680. சித்திப் பயன்சிறக்கச் சேர்த்தகுரு பாதவருட்
பத்தியே மிக்கபெரும் பாக்கியமாய்—நித்தியப்பே
ரின்பவாழ் வாக வியல்சொருபம் பொங்கவகத்
தன்புமே விட்ட தறிவு.

1681. மோனஞ் சுரந்தகுரு மூர்த்தி யருட்பதமே
யான சொரூப வறிவொளிமேல்—வானளவப்
பெற்ற நிறைவாற் பிரம்மானு பூதியெனக்
குற்றதுவாழ் வாக வுளத்து.

1682. ஒருசொல்லா லென்னை யுணர்த்தினன் பாதத்
தொருகலுற்ற வுள்ளத் தொளியால்—கருவிற்
கலந்த வவிச்சையிருள் கால்வாங்கி யோட
அலர்ந்ததுபே ரின்ப வகம்.

1683. உடையா னருட்பதத்தி லொப்புவிக்கப் பெற்ற
அடியேன்றன் பார மனைத்தும்—உடையா
னருட்சத்தி தாங்கலா லப்பதத்தே முற்ற
வொருப்பட்டு நின்ற துணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

1684. கடக்க வொணாத கருத்தா மகப்பாழ்
கடக்கப்பெற் றேன்கடவுட் கண்ணூர் கழலால்;
நடக்கமெய்ஞ் ஞான நடை தன்னியல்பா வுள்ளத்
திடக்க வொடுக்க வழுத்தமீக் கூர்ந்ததே.

1685. உலகப் புலநோக் குருதே சொரூப
நலனிற் பழுத்தமெய்ஞ் ஞானு பூதி
இலகக் கருத்தை யிதயத்தா டுய்த்தோன்
மலர்சிற் பதமே மனமா யினதே.

## 24. குருவருட் குறி

(வெண்பா)

1686. பொருள் விளங்கு போதப் புலரியா வுள்ளத்
திருளகற்றி யாண்ட விறையோன்—அருளின்
நினைவுக் குறியெனது நெஞ்சமே யாகக்
கனிவுற்ற தென்றன் கருத்து.

**பொருள் விளங்கு போதப் புலரி - விளங்குகின்ற மெய்ஞ்ஞான சூரியன்.**

1687. அருள்வெளியாத் துன்று மனுபூதி ஞானப்
பொருள்வளமென் புந்தியிலே பொங்கத்—தெருள்
[விழியாற்
கூர்த்தவருட் கோமான் குருரமணன் சிற்குறிப்பே
யோர்த்தொழுகத் தக்க துயிர்க்கு.

## 25. குருவருட் பார்வை

1688. நேர்வழியா லென்னை நிறைபதத்துக் குய்த்தவருட்
சீர்வளவ னைகுரு தேவனென்பாற்—கூர்விழிநோக்
கென்ற னிதயம்பே ரின்பவெளி யாகவொளிர்
வென்றிசார் வித்த தெனக்கு.

1689. உய்யு முபாய முணரா துழன்ற மடப்
பொய்யனை நன் காண்டகுரு புங்கவன்றன்—தெய்வ
வெள்ளம் படைத்த விழியாலே பக்குவமா [வருள்
வுள்ளம் பழுத்த தெனக்கு.

1690. குருவருட் பார்வையுளங் கூடலான் மோக
வெருவரற் பாசம் விடுபட்—டருவருப்பா
மூத்தையுட லுள்ளுயிர்த்தே யொட்டா வதீதபர
மார்த்தசுக வாழ்வுற் றது.

1691. கள்ளமனக் கற்பனை காணு தொழியவுளத்
துள்ளபொரு ளாக வொளிர்சொரூபன்—வெள்ள
[வருட்
பாற்கடலா வென்னிதயந் தானேர் பனிமதியா
நோக்கலுற்று நின்று னெதிர்.

1692. முத்தனுத் தன்றுகுரு மூர்த்தியருட் பார்வையால்
பெத்தனு னென்னுமடம் பேர்ந்தொழிய—நித்தசித்த
புத்தமுத்த னைகவருட் பூரணவாழ் வுள்ளொளிரச்
சித்தமொத்துச் சஞ்சரிக்கின் றேன்.

1693. பாசமற வீசும் பரங்கருணைப் பார்வையாற்
கோசமற செற்ற குருநாதன்—வாசமா
வுள்ளத் தொளிர்சொருப வுண்மையொளி யோம்
வுள்ளதனு பூதிநா லுக்கு. [படையா

1694. மூர்க்க வகந்தை முனைப்பற் றொளிர் சொருப
நோக்கமார் சாந்திமுக நுட்பவொட்பம்—யார்க்கும்
படைக்கலரு மந்தவருட் பாக்கியவாழ் வென்னுட்
கிடைக்கலுற்ற தாண்டா னருள்.

1695. ஒன்றுன வுண்மையெனக் கூதியமா வுள்ளத்துத்
தொன்றுன வாழ்க்கை துலங்கவே—ஒன்றும்
பராற்பரமோ னுனுபவப் பார்வையா லந்தப்
பராற்பரமே யாயிற்றுப் பற்று.

1696. போத விழிப்பாப் பொருந்தியவென் னேக்கத்திற்
பேத மயக்கமறப் பேர்தலால்—வேதகமார்
கைவல் லியமாக் கலந்தவருட் பார்வையிலென்
மெய்யல்ல தில்லை பிற.

1697. தமங்கடந்து பொங்கு சதோதயமாம் பெம்மான்
அமைந்த வருட்பார்வை யாலே—தமஞ்சூழ்
அவக்கே வலங்கெட் டழிய விளங்கு
சிவக்கே வலஞ்சேர்ந் தது.

1698. ஊத்தை மடவே னுளத்தி லொளிவளரச்
சேர்த்தவருட் பார்வையே தீர்த்தமா—ஆர்த்தியால்
ஆட்டிஞ ஞட்டி யருட்செம்பொற் பாதமுடி
சூட்டினன் தன்னியனு னேன்.

1699. கண்ணேக்கா லென்னைக் கலந்தான் சொரூப
[வருள்
விண்ணேக்க மென்னுள் விளைவித்தான்—
[விண்ணேக்கம்
தானே யபேத சதாசிவஞா னனுபவம்
தானேதா னைபரந் தான்.

## 26. கேடுகண் டிரங்கல்

1700. அனைத்தும் விளக்கு மறிவருவாந் தன்னை
எனைத்துமறிந் துய்யத்தா மெண்ணூர்—முனைத்த
உடலகந்தை யாற்றேன் றுலகமா மாயக்
கடலமிழ்ந்து கண்கலுழ்கின் றூர்.

குறிப்பு :—எனைத்தும் எண்ணூர் எனக் கூட்டுக.

## 27. சற்போதனை

1701. வழிபடு தெய்வமா வாய்த்தகுரு வாயாற்
பொழிவுறுசற் போதனையே போற்றி—விழையும்
எனக்கினிக்க வாய்த்ததுநல் லின்னமுத மாக
மனக்கிலே சந்தீர் மகிழ்.

1702. புத்தியிலே சுத்தவருட் பூரணமாப் பொங்குசிவ
பத்தியளித் தாண்ட பரஞ்சோதி—சித்திகளுக்
கெல்லா மடிப்படையா வென்றுமுள்ள
சொல்லால் விளைத்தா னுளத்து. [வாழ்க்கையொரு

## 28. சிவ சொரூபம்

1703. சிவமாத் திகழ்சொருப தேவதையே பேணுந்
தவஞான வாழ்வொளியின் சார்பால்—அவமா
முயற்சிசேர் மோக முனைப்பற்ற சாந்தி
உயர்ச்சிபெற வோங்கிற் றுளத்து.

## 29. சிவ பக்தி

1704. சுத்தவறி வாகத் துலங்கு சொருபசிவ
பத்தியிலே யூறிப் பழுத்தமனம்—மெத்த
வருட்காம தேனுவா வார்ந்த வெனக்கு
மருட்காம மற்றது மன்.

## 30. சிற்பரம்

1705. சிற்பரமே மெய்யாத் தெளிதலா லெண்ணறிவிற்
கற்பனைபோய் யாகக் கழன்றவுடன்—சொப்பனமாத்
துன்று முலக சுகதுக்கத் தொற்றற்று
நின்றதுநெஞ் சுண்மை நிலை.

## 31. சொருப மாட்சி

(குறள்)

1706. ஆளன் சொருப வழகிலமுந் துற்றமனம்
மீளுந் தரத்ததன்றென் பால்.

(வெண்பா)

1707. சாட்சியா வுள்ளவொரு சைதன் னியசொருப
மாட்சியா லுள்ளுணர்வு வாய்த்தலால்—பாழ்ச்செய்
விளாவுலக வாழ்வில் வெறித்தவகப் பேய்சேத்
தளாவியது சாந்தி யகத்து.

1708. உலகங் கடந்ததோ ருண்மை யுணர்வால்
அலகில் சொருபமே யாகக்—குலவும்
அனுபூதி வாழ்வளித்த வாண்டா னடிக்கீழ்
அனபாய தீரமடைந் தேன்.

1709. மறக்கவொணுத் தன்சொருப மாட்சிசேர் மோனஞ்
சிறக்கவொளிர் வாழ்வு செழிக்க—உறக்கமாத்
துன்று மவிச்சைசேர் சொப்பனமாஞ் சாக்கிரத்தா
டொன்றியது சுத்த வுணர்வு.

1710. உள்ளதன்றி யில்லை யுணர்வவ் வுணர்வுருவா
வுள்ளதொன்றே யுள்ளமா வுள்ளபொருள்—உள்ளமா
வுள்ளபொரு ளாக வொளிர்சொருபத் தூனமனக்
கள்ளவிவ காரங் கனு.

குறிப்பு :—கனு - மனமயக்காத்தாலுற்ற கனுப்போல மாயாசத்தி விலாசமாகத் தோன்றுங் கற்பனை ; உண்மையன்று என்றபடி.

1711. அன்னியமற் றுன்ற வருட்பரமாம் பூரணமே
துன்னியசற் போத சொரூபமா—என்னிதயத்
தன்னியமல் லாதமெய் யன்பா லிடைவிடா
தென்னியல்பா வெண்ணுகின் றேன்.

1712. துணையிலே னல்லேன் சொரூபவருட் சோதித்
துணையே பெருந்துணையா வுள்ளேன்—துணையாமஃ
தாருயிர்க்குக் காப்பா வரண்செய்ய வென்றுமெனக்
கோருயக்க மேனோ வுளத்து.

உயக்கம் - வருத்தம்.

1713. உண்மையே வாழ்வா வுறப்பெற்ற மெய்யுணர்வுத்
திண்மையா லென்சொருபஞ் சிற்பரமாய்—வண்மை
[சேர்
நித்தமுத்தி யான நிஜானுபவப் பேரொளிசேர்
சுத்தவித்தை யுண்டே துணை.

1714. விளங்கு சொரூபவருள் வெற்றியிலே யாதோர்
களங்குமுமின் றுகநான் கண்டேன்—உளங்கிளர்
[சற்
போதவருட் பூரணமாப் பொங்குசிவக் கேவலத்தில்
ஓர்தவறு மின்றென் னுயிர்க்கு.

## 32. சொரூப வாழ்வு

(குறள்)

1715. கைவல்ய வாழ்வாக் கலந்த தெனையாண்ட
வையன் சுரந்த வருள்.

(வெண்பா)

1716. ஏனைக் குறிகளி ருக்க வுளத்திலுற்ற
மோனவொளி சேர முகத்திலே—ஊன
வுடற்பற் றொழிந்த வுணர்வே சொரூப
திடப்பட்ட வாழ்க்கைத் திறன்.

1717. மடமை யறுத மனத்தா லடியேன்
அடர்வா தனைத்திரளுக் காளாய்—உடலுருவா
வூழ்க்கையுறு துள்ளத் துறுதிசேர் சிற்சொருப
வாழ்க்கையெனக் குண்டு வளம்.

1718. வாழ்வே சொரூபமா வைகு மனுபவத்தால்
ஏழேழ் பிறப்புமெனக் கின்பமே—ஊழால்
உறுமின்ப துன்ப முபாதிக்கே யன்றி
யுறுவதன்றென் னுண்மை யுயிர்க்கு.

## 33. தலைவி கூற்று

1719. நட்புரிமை பூண்டு நடக்கலுற்றுள் காதலனென்
றொட்பமுடை யாள்போ லொருமடமான்—கொட்புற்
றுரியபெருந் தாய ருணர்வு கலங்கப்
பெரிய பிராளுெருவன் பின்.

1720. ஆசையறப் பெற்றமெய் யன்பரகம் பேராப்பே
ராசையுறப் பற்றியுறை யாண்டவன்பால்—ஆசையாற்
பிச்சியா வூரிற் பிறர்நகைக்கப் பேர்பிதற்றிக்
கொச்சையா ளுள்குலப் பெண்.

1721. சிறுகச் சிறுகச் சிறுமியா மென்னோ
டுறவுகலந் துள்ள முருக—நிறையுணர்வா
மோன வொளிபெருக்கி முற்றமுழுத் தானேநா
னுென வுரிமையளித் தான்.

உள்ளமுருக உறவுகலந்து என்பது இடக்கரடக்கல்.

(கொச்சகக் கலிப்பா)

1722. அரங்கமா வுள்ள வதீதப் பரத்திற்
குரங்குபோற் சீவன் குதிக்குமதென் னேடி?
பொருங்கலக்க மான புணர்ப்பா மகப்பேய்க்
குரங்குமதி யாற்குதித்தல் கூர்த்துக்கா ணேடி.

## 34. திருவடித்தியானம்

(வெண்பா)

1723. திருவடியே யெண்ணுந் தியானத் திறத்தால்
உருவுபெய ரெல்லா மொளியாய்—மருவுமியற்
சிற்பரமா மோன சிவாத்துவிதக் கேவலவாழ்
வொப்பமா வுற்ற துளத்து.

## 35. துவித மோகம்

1724 ஒருதானே யுண்மையென் றுள்ளுணர்வாற் காண
அரிதான சுத்த வகத்தோர்—இருதான் [பார்
உளவெனவே பார்த்த வுடலுணர்வாற் றன்மெய்
தெளியவொணு மோகத் திறம்.

## 36. நிட்டை

1725. நிற்குங் கருத்திலுறு நிஷ்டானு பூதியொளி
கற்குங் கலையறிவிற் காணுமோ—ஒற்கமறச்
சித்தம் பரவெளியாச் சேருமகண் டானுபவம்
புத்தகத்தா லெங்ஙன் புகும்.

**புத்தகம் - சாஸ்திரம், சாஸ்திர ஞானத்துக் காகுபெயர்.**

1726. முற்றத் துறந்தகுரு மூர்த்தியருட் பார்வையிலே
பற்றற் றொளிர்மெய்ப் பதங்கண்டேன்—பற்றற்
றொளிர்சொருப வாழ்வாக வோங்கிற் றருட்சீர்
வளர்சகஜ நிஷ்டை மனத்து.

1727. உள்ளலற்ற வுள்ளுணர்வா வுள்ளத் துறைதலே
துள்ளலற்ற மோன சொரூபநிஷ்டை—எள்ளலற்றுத்
தன்னியல்பா வஃது தரிக்குமட்டுந் தன்னிழப்பின்
முன்னிலைச்சுட் டற்று முயல்.

1728. தன்னியலைச் சாரத் தலைப்பட்ட சாதனையின்
முன்னிலைச்சுட் டான முனைப்பழியும்—தன்னினைவா
முள்ளுணர்வே பற்றி யுதாசீன மாப்பிறவற்
றுள்ளதே தாஞ வுறை.

1729. உள்ளதே தாஞ வுறையிலுளத் தானமனக்
கள்ளவகங் காரங் கரந்தொழிய—உள்ளம்பே
ரின்பவெள்ள மான வியற்பரமான் மானுபவத்
தன்புருவா விள்ளு மகம்.

குறிப்பு :—விள்ளுதல் - விகசித்தல், மலர்தல்

1730. எள்ளுமா றில்லா வியல்பாம்பே ரின்பவுணர்
வுள்ளமா வுள்ளவோ ருத்தமனைத்—தெள்ளிதா
உள்ளாதே யுள்ளு முணர்வாம்பே ரின்பநிஷ்டை
விள்ளாது மேவிற் றுளத்து.

1731. உள்ளதே வாழ்வுக் குறுதியா வுள்ளத்துத்
தெள்ளிதாச் சேர்ந்த சிவானுபவம்—உள்ளுமனக்
கள்ளமறத் தன்பாற் கரைக்கும்பே ரின்பவருள்
வெள்ளமய மான வெளி.

## 37. பக்தி—பரபக்தி

1732. ஆகாய மாக வவிர்சொருபத் தன்புபாட்டு
நீகாய மென்ற நினைப்பொழியிற்—பாகா
வுருகிமனம் பாச வுணர்வழிந்து மோன
வுருவெளியாக் காணு முலகு.

1733. உரிமையளித் தாண்ட வுடையா னடிக்கீழ்
அருமைசேர் மோன வறிவால்—இருமைசேர்
சிந்தையறச் சித்தந் தெளிந்தபர பத்தியொளி
விந்தையா வீசிற் றுளத்து.

## 38. பர வித்தை

(கொச்சகக் கலிப்பா)

1734. துள்ளுமகப் பேய்முனைப்பாற் சுட்டி யதுவிதுவென்
றுள்ளவொ ணு வத்துவித வுண்மையாந் தன்னியல்பால்
உள்ளலற்ற வுள்ளமா வுள்ள வுணர்வொளிகாண்
கள்ளமறத் தேறக் கடவபர வித்தையே.

## 39. பர வெளி

(வெண்பா)

1735. சுத்தவறி வான சொரூபப் பரவெளியிற்
சிந்தஞ் சிவமாச் செழித்தலால்—துய்த்த
சிவஞான சித்தித் திரஜீவன் முத்தி
பவமா லகற்றியதென் பால்.

பவமால் - பிறவி மயக்கம்.

1736. மிக்கநளு வாக விளங்கு மனுபவத்தாற்
பொய்க்கனவா மாறப் புலவுலகு—தொக்கவருட்
சூழலாம் போத சொரூபப் பரவெளியில்
வாழுமெனக் கில்லை மலைவு.

1737. உள்ளம் பரவெளியா வுள்ளவிறை யவ்வாறே
தெள்ளிதா வென்னையுந்தான் செய்தலால்—உள்ளம்
இரண்டன்றி யொன்று வியைந்தசிவ யோகந்
திரண்டதுமேன் மேலுஞ் செழித்து.

## 40. பாத மாட்சி

1738. பாதமெனப் போற்றிநான் பத்திசெய்வ துண்மையிலென்
போத சொரூபவருட் பூரணமே—பேதமனப்
பேச்சுமூச் சாகப் பிதிர்கற் பனைகடந்தோங்
காச்சரிய வுண்மை யது.

1739. புகலிடமோர் சற்றும் புலப்படக் காணேன்
அகலிடமா மிங்கில் வடியேன்—புகலடையக்
காட்டினு னண்டான் கருணைக் கழலெனக்குட்
பூட்டினேன் போகாப் புறத்து.

போகா (போகாமல்) - ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம்.

## 41. பாத வொளி

1740. சைதன் னியசொருபந் தன்னு லடியேனுக்
குய்தவெளி தாகவுணர் வுண்முகமாய்ப்—பொய்தவிர்
போதவெளி யாகப் பொருந்தியமோ ஞனுபவப் [சற்
பாதவொளி பற்றியது வாழ்வு

## 42. பெரியோர் சிறியோர்

(குறள்)

1741. போகா யதனவுடல் புத்த ரனுபவத்தில்
ஆகாயம் பௌதிக மன்று.

(வெண்பா)

1742. திருவருட்பே ரின்பச் செழுங்கடல்வா யாடப்
பெருவிருப்புக் கொள்வார் பெரியர்—அருவருப்பாத்
துச்சமென் றன்னுர் துறந்தொழிந்த புன்புலச்சிற்
றெச்சிலுண்ண வேட்பார் பிறர்.

## 43. பேரின்பம்

(குறள்)

1743. உலகை மறந்த வுபசாந்த போதத்
திலகும்பே ரின்ப விறை.

(வெண்பா)

1744. முனைப்பற் றொளிர்சொருப மோனத்தாற் பேத
நினைப்பான கற்பனை நீங்கத்—தனிப்புற்
றசங்கமா நின்ற வருட்சிற் பரமே
நிசங்கிளர்பே ரின்ப நிறைவு.

1745. சித்தமா மோகச் சிதாபாச ஜீவியத்தா
டெய்த்தவிளைப் பாற விதயத்தே—சுத்த
வறிவா விளங்கு மனுபூதி வாழ்வே
நிறைவாம்பே ரின்ப நிலை.

(கொச்சகக் கலிப்பா)

1746. உற்றுநா னுள்ளத் துஞற்றிலேன் சாதனையொன்
றற்றிலேன் மோகப்பா ழாசாபா சச்சிந்தை
கற்றிலேன் கற்கக் கடாவ கலைஞானம்
பெற்றதென்ன விந்தை பிரானருட்பே ரின்பமே.

## 44 முத்தி

(வெண்பா)

1747. புரணமே மோனவருட் பூரணமாப் பொங்கக்
கரணங் கழன்றொழிந்த காலே—மரணமுறுஞ்
சீவபோ தத்திற் சிறக்கவளர் சாந்தியே
கேவலமா முத்திக் கிடை.

1748. திறந்தவெளி யாகத் திகழ்மனத்தா லின்பஞ்
சிறந்தொளிருஞ் சீவியமே முத்தி—மறந்த
மனக்கலக்க மாகநிகழ் மாஞைபி மானத்
துனிக்கவலை வாழ்வு துயக்கு.

1749. முத்தி நிலைசொருப மோனமே யாகவென்
புத்தியிலே பொங்குமனு பூதியால்—முத்தியெனக்
கென்றுமுள்ள வுண்மை யியல்பா விதயத்து
மன்றவளர் கின்றது வாழ்வு.

1750. உடலோ டுறவுகழன் றோங்கு சொரூப
திடஞான மோனத் தெளிவே—உடலு
வொளிர்ஜீவன் முத்தி யுணர்வாம்பே ரின்ப
வளமே வுறுநேர் வழி.

(கொச்சகக் கலிப்பா)

1751. அறிவான வுண்மையா வாண்டான் பதத்திற்
செறிவதே முத்தித் திறமா நிறைவுணர்வு
பொங்கு சொரூபானு பூதியா லுள்ளத்து
மங்கியது பந்த மயக்கம்.

1752. தெளிந்து விளங்கு சிவஞான மோனம்
அளைந்தவகந் தானே யவிர்சொருப முத்தி
உளைந்துழல்வெம் பாச வுணர்வா மகந்தை
விளிந்தொழியப் பொங்கு வியன்பரமா மெய்யே.

1753. நுண்மைசேர் விட்புலமா நோக்கங் கிளர்சொருப
வுண்மைமோ னனுபவ முள்ளத் தியல்பாக
வண்மைபெற வாய்த்தவருள் வாழ்வென்பர் மெய்ஞ்
[ஞானத்
திண்மைசேர் தெய்விகமாஞ் சீவன்முத் திச்சிறப்பே.

## 45. மெய்க்கல்வி

(வெண்பா)

1754. மருட்கலக்கம் மாய மனைதீத மான
வருட்கல்வி கற்க வவாவில்—அருட்பகவன்
ஜீவியமே சாலச் சிறந்தமெய்ஞ் ஞானவருட்
காவியமாக் கற்க கனிந்து.

## 46. மெய்ப் பூரணம்

1755. வைத்தவருட் காதல் வளர்சொருபச் சிந்தையே
புத்தமுதக் கைவல்ய போகமாச்—சித்த
விருத்திக்கு வேறு விஷயமின் றுகப்
பொருத்தியது மெய்ப்பூ ரணம்.

## 47. மோகச் செருக்கு

1756. ஜீவனைத் தன்னைச் சிறுகக் குறுக்கியுடல்
வாழ்வினைச் சிந்தை வருந்துவது—ஜீவன்றன்
சொச்சொருப வுண்மை துலங்கலுறச் சோதியாச்
சிச்சடமா மோகச் செருக்கு.

**குறிப்பு :—சிறுகக் குறுக்கி** என்றதால், உடல் வாழ்வு சிறை வாழ்வென்று குறிப்பாலுணர்த்தப் பட்டதாம்.

1757. வீடுபே றுக விளங்குறுசற் போதவருட்
பீடுசால் சுத்தப் பிரம்மத்தே—மூடும்
மயக்கம் மடமையால் மன்னுயிர்தம் பாச
மயக்கம் மனமயக்க மே.

## 48. மோக மறல்

(கொச்சகக் கலிப்பா)

1758. களங்கலந்த பாழ்மயக்கக் கற்பனையூ டாழ்ந்து
துளங்குமனச் சுட்டறிவாஞ் சூதற் றொழிய
விளங்கலுற்ற சுத்த விபூதிநிலை நானற்
றுளர்கிளர்வாழ் வாவோங் குதாரசிவ மாண்பே.

1759. மடந்தருநா னென்னும் மயக்கமுனைப் பாகப்
படர்ந்த மனக்கற் பனைபேதம் பொன்றக்
கடந்தேன் சொரூபவியற் காட்சியாற் கண்ணுந்
தொடர்ந்தபர மார்த்தத் துரியப் பதத்தே.

1760. யானென்ற மோக வெழுச்சியற் றுலன்றித்
தானென்ற ஞானசாட் சாற்காரங் கிட்டாது
ஊனென் றுருவகப்பே யூக்கமறப் போக்கினன்
மோனந் தவாதகுரு மூர்த்திஅதன் மூலத்தே.

## 49 மோனம்

(குறள்)

1761. கலங்கவென்று மற்றவருட் கைவல்ய மோனம்
துலங்கலுற்ற தாண்டா னருள்.

(வெண்பா)

1762. அனைத்துங் கவர்வா லறிவான மோனம்
இனைத்தென் றுரைக்கரிது யார்க்கும்—தனித் [தொளிரும்
முற்றமுழுத் தன்மையிலே மோகமுனைப் பற்றொழிய
வெற்றிகண்ட சுத்த வெளி.

1763. அற்றமில்சற் போத வருட்குருவா விவ்வடியேன்
உற்றசிவ பாக்கியவாழ் வுள்ளத்தே—அற்றமாஞ்
சிவபோ தப்புன் செருக்கற் றொளிர்சொருப
பாவமோ னுறு பவம்.

1764. தளர்ச்சி வளர்ச்சியறத் தங்கு சொரூபக்
கிளர்ச்சிசேர் மோனவருட் கேண்மை—வளர்ச்சியுற
வுள்ளத் தொளிபெருக்கி யுள்ளமா யுள்ளவருள்
வள்ளலுக்கே யாயிற்றென் வாழ்வு.

1765. ஈனப் பிறப்பிறப்புக் கேதுவாம் பொய்ம்மயக்க
வூனமனக் கற்பனையை யோட்டலால்—மோனப்
பதவொளியே சுத்தப் பரமபத வாழ்வா
விதயமுறப் பற்றிற் றினிது.

1766. மோன சொரூபமா மூதறிவின் முப்படிசே
ரேணையறி வெல்லா மிளிவரவே—ஊனமனக்
கற்பனைசேர் மோகக் கனவறிவாய் மெய்யறிவிற்
புற்கென் றொழியு மவை.

1767. அறிவொளியா வுள்ளத் தலர்ந்த சொரூப
நிறைவெளியா மோன நிகழ்வால்—உறவெனக்கு
மற்றொன் றிலாத மகத்துவஞ்சேர் பூரணமா
வுற்றதென் னுண்மை யுரு.

1768. நேர்மையுறக் கூட்டியென் னெஞ்சத்து நல்லவருட்
சீர்மையளித் தாண்ட சிவசொரூபன்—கூர்மைசேர்
மோனக் குறியே முழுமுதலாந் தன்மையிலென்
னூனமறக் கூட்டிற் றுணர்வு.

1769. மோன சொரூபகுரு மூர்த்தியருட் பாதவொளி
வானளவ மூற்றும் வளர்தலால்—ஊன
வியாமோகந் துன்றுமன விட்சேபந் தீர்ந்து
சுயாதீன வாழ்வுதோய்ந் தேன்.

1770. மோனவறி வேசொருப முத்தியுரு வென்றடியர்க்
கூனமற வுள்ளத் துணர்த்தியே—வானளவத்
துன்று மகண்ட சொரூபஞா னனுபவக்
குன்றமா நின்றான் குரு.

1771. சுத்தமா மோன சொரூபவொளி சூழ்தலாற்
சித்தக் கலக்கமறத் தீர்ந்திடவே—சுத்த
வெளியே யுளமா விளங்கலா லூன
விளிவாலுக் கில்லை யிடம்.

1772. கலங்காத மோனவருட் கைவல்ய வுண்மை
துலங்கார் பரமார்த்தந் தோயார்—கலங்குந்
துவிதமனக் கற்பனைசேர் சூனியத்துக் கப்பால்
அவிர்தன் சொரூப மது.

1773. கலக்க மறவே கழியக் கருத்திற்
றுலக்கமா வோங்கு சொரூபம்—இலக்கியமாக்
கற்றறிந்து மோனங் கடைப்பிடித்த காட்சியால்
உற்றது சாந்தி யுணர்வு.

1774. நிரந்தர மான நிகழ்ச்சியா லென்று
ளிருந்தொளிர் கின்ற விறைவன்—கரந்தருள்சற்
போதமோ ஞனுபவம் பொங்கலா லென்னுயிர்க்குப்
பாதமே யாயிற்றுப் பற்று.

1775. பொன்றாத மோனவருட் போத சொரூபவொளிக்
குன்றான வாண்டான் குறிவழியே—நன்றா
வறிவு தெளிந்தா லருட்பரமா மோன
நிறைவேதன் னுண்மை நிலை.

1776. சிற்றறிவாஞ் சுட்டறிவு தீர்ந்தொழிய வென்னுணர்
[வில்
வெற்றறிவா முண்மை விளக்கினான்—முற்றறிவா
மோனப் பெரும்புலவன் மூதறிவாங் கேவலத்தே
நானடைந்தேன் ஞானத் துயில்.

1777. அகத்துறவா முண்மை யறிவொளிசேர் மோன
மகத்துவமார் சுத்த மனத்தே—தகத்துயில்சற்
போத சொரூபவருட் பூரணவாழ் வென்னுயிர்க்கு
நாதனா லுற்ற நலன்.

1778. நிற்பவர்க்கு மோன நிறைவிலே தாமறியக்
கற்பதற்கு ஞானக் கலைபிறிதேன்—கற்பனையா
முற்றுங் கழியவொளிர் மோனவருட் கைவல்ய
வெற்றறிவாந் தன்னுருவே மெய்.

முற்றும் - ஏகான்ம சொரூபமான தன்னைத் தவிர்த்துப்
பிறவனைத்தும்.

1779. கல்லாத கல்வியாற் கைவல்யச் செம்பொருளைப்
புல்லாது புல்லியருட் பூரணமாய்—எல்லாமொன்
றான வியர்பர மான்மசொரூ பானுபவ
மோனவொளி மூண்ட தகத்து.

**ஒன்றான** - ஒன்றாக விளங்குகின்ற.

1780. வெளியாக வுள்ளே விளங்குகின்ற மோன
வொளியாறு பாய வுலகில்—எளியேற்
கிமையவரின் மிக்கபே ரின்பவருட் சீர்மை
யமையவளம் பெற்ற தறிவு.

1781. மோனக் கருத்தே முடிந்த சிவசொருப
ஞானவருட் காட்சியா நானறிந்தேன்—ஊன
வுருப்பற் றியபொய் யுணர்வொழியச் சும்மா
விருப்பே கடவு ளியல்.

**மோனக் கருத்து** - அகம் இதம் என்னும் பேதக் கலக்க மறச் **சும்மா** இருந்தொளிரும் சுத்தவறிவு; கருத்தே **காட்சியாக வறிந்தேன்** என்க

1782. மோன வுணர்வொளியே முக்கியமாப் போற்றி
ஞான சொருப நடுநிலையில்—வானளவப் [மெய்ஞ்
புந்தியிலே பொங்குசிவ பூரணசாந் தானுபவ
விந்தையிலே வீடுகண் டேன்.

1783. அகந்தைமோ கத்தை யறக்களைந்து தன்மெய்
திகழ்ந்தபோ ததுவே சிவமாய்—திகந்தமுறத்
தன்சொரூப மன்றிச் சராசரம்வே றின்றியெல்லாந்
தன்மயமா மோனந் தரும்.

1784. விஞ்சைத் திறமா விளங்கு சொரூபவருட்
கஞ்சப் பதத்திற் கருத்துமுற்றத்—தஞ்சத்
திறத்தா லொடுங்கித் திளைத்தலுறு மோனம்
உறைத்தலே பத்தி யுணர்வு.

1785. தெளிவா விளங்கு சிவானுபவச் சீர்மை
அளியே னகத்தி லடைதல்—களிசேர்
உணர்வான மோன வொளிப்பிழம்பாம் பாதப்
புணர்வேயென் புத்திப் புலத்து

1786. உள்ளபடி நிற்பா ருணர்வொளிசேர் தந்நிலைநின்
றெள்ளளவும் பேரா திதயத்தே—கள்ளமனப்
புன்கலக்க மற்றவருட் பூரணவாழ் வேயுருவாத்
தங்கலுற்ற மோனத் தவர்.

1787. வீசியமெய்ஞ் ஞானவொளி வீரியத்தால் யானென [முன்
பேசியவீ ருப்புமுற்றப் பேர்ந்ததே—தேசியல்சுத்
தாத்துவித மோன வருட்சிற் பரசொருப
மாத்துரிய வாழ்வு மடுத்து.

1788. வென்றிசேர் மோனவருள் வித்தகன்சற் போதனை [யொவ்
வொன்றுமே யுண்மை யுணர்வொளியாய்—மன்ற
விளங்கு சொரூப விழிப்பிலே சாந்தி
வளங்குலவ வாழும் வழி.

1789. இன்பவருட் பார்வை யிதயத்திற் சேர்ந்தொளிரத்
துன்ப மனக்கலக்கஞ் சேர்ந்தொழிய—அன்பே
சிவமா வறிவு தெளிவடைந்து மோனத்
தவமா விளைந்தது தான்.

1790. தனித்த சொரூபவருட் சத்தியாற் கூடிற்
றினைத்தெனக்கூ டாத வியல்பாய்—மனத்தே
தருமார்த்த காமமோட் சங்கழன்ற மோனப்
பரமார்த்த சித்திப் பயன்.

குறிப்பு :—தருமார்த்த காம மோட்சம் என்றது அவற்றின் சிந்தையை; மோட்சத்தையும் ஈண்டுச் சேர்த்துக் கூறியதன் காரணம்.
'பத்தனு னென்னு மட்டே' என வரும் பகவான் பாட்டை ஆராயில் விளங்கும் சித்திப் பயன் அருட் சத்தியால் இயல்பாகக் கூடிற்று எனக் கூட்டி வினைமுடிவு செய்க.

1791. இன்பமா மோனவுணர் வெய்தினு லன்றிமனத்
துன்பமொரு காலுந் தொலையாது—நம்பனருட்
பாதமே தன்னுருவாப் பற்றிநின் றத்துவித
போதமா மோனம் பொருந்து.

1792. நின்று விளங்குசிவ நிஷ்டையா மோனமே
துன்றுசிவ ஞான சொரூபசுகம்—மன்றவருட்
சிற்பரவாழ் வான சிவானுபவ மேசொரூபத்
துப்புரவா வார்ந்தேன் சுபம்.

1793. எந்தமை நன் காண்ட விறைரமணன் சேர்ந் [தோரை
எந்தமுறை யாளுமுறை யென்னிலோ—உந்து [முனைப்
பூனமகன் றோங்கு சொரூப வுணர்வொளிசேர்
மோனமே யாளும் முறை.

குறிப்பு :—**சேர்ந்தோரை** ஆளும் முறை; ஓங்கு **மோனம்** எனக் கூட்டுக. **முனைப்பூனம்** - முனைப்பாகிய **ஊ**னம்.

(கொச்சகக் கலிப்பா)

1794. உளைந்துழன்ற பாசவுணர் வோய்ந்தொழியத் [தானுத்
தெளிந்தசிவ ஞானத் திறத்தால் அகத்தே
யளைந்தவரு பூதி அகண்டமா மோனம்
விளிந்திட நா னென்றெழுந்த வேகவகப் பேயே.

1795. அளவிலா வுண்மை யறிவான மோனத்
தெளிவே சுயசொருபச் செம்பொருளாத் தேர்ந்
களவா லறமயக்கிக் கற்பனையா லென்னைப் [தேன்
பிளவுசெய்த மாயவகப் பேயற் றொழிந்ததே

(வேறு)

1796. அறிவிலா வுண்மை யறிவே யமிர்தம்
பிழைபடா மோனம் பிரம்ம சொரூபம்.

## 50. வழிபாடு

(வெண்பா)

1797. அறிவுநிறை வானமெய் யன்பே வழிபாட்
டுறவுமுறை யாக வுணர்ந்தென்—மறவிக்
கிடங்கொடே னென்று மிருப்புணர்வா மோன
திடங்கண்டு கொண்டேன் சிவத்து.

1798. உள்ள முருகி யுருக்கெட் டொழிந்திடலவ்
வுள்ளம் பரவெளியா வோங்குமின்பம்—வள்ளற்
பரதெய்வ மாகவருட் பாதமே பாவித்
துருகுவதே போலு முணர்வு.

1799. புறக்கணிக்கப் பட்டவருட் போத வடிவே
மறக்கவடி வான மறலி—சிறக்கமெய்
யன்பால் வழிபட் டறியி லழிவறுபே
ரின்பவாழ் வாந்தன் னியல்.

குறிப்பு:—மறக்கம் - மறதி, **பிரமாதம்;**
**மறலி - மிருத்தியு, யமன்.**

## 51. விசாரம்

1800. வேசைபோல் யாதோர் விவத்தையற்றுப் பற்பலவற்
றாசையா லோவா வலமரல்சேர்—பாசவகப்
பேயா மகந்தைப் பிழைப்பறத்தன் மெய்யையுளத்
தோயா துசாவ லுணர்வு.

1801. துள்ளிப் படருமனச் சுட்டறிவாஞ் சேட்டையறத்
தள்ளிப் புலத்தினின்று தான்மடங்கி—உள்ளத்தில்
வெற்றறிவா மோன விளக்கமா நிற்றலே
நற்றவமா முண்மை நலன்.

1802. கதியிற் கலங்குங் கருத்துநா ஞரென்
றுதயத் தலமோர்ந் தொடுங்கில்—இதயத்
திருப்புணர்வா வோங்கு மியற்செம் பொருளே
விருப்பணவு தன்மெய் யுரு.

(கொச்சகக் கலிப்பா)

1803. சாதகரா வெண்ணிச் சரிக்குந்தாம் யாரெனவுள்
ளாய்தரலால் அந்தமுனைப் பற்றொழியத் தான்றுனைச்
சார்தருமோ ருநுபவச் சால்பான கேவலசற்
போதமே * சாத்தியமாப் போற்றக் கடவதே.

*சாத்தியம் - **சாதிக்கத் தக்கது, சாதிக்க வேண்டுவது.**

## 52. வீடு பேறு

1804. உறக்கவொண்ணு நுட்ப வுணர்வா லுசாவி
மறக்கவொண்ணுத் தன்னியற்கை வல்லியஞா னத்தால்
உறவுதுற வற்ற வுதாசீனங் கூரப்
பிறவிக் கலக்கமறப் பேர்தல்காண் வீடே.



# V. முடிவுரை

## 1. பாடுகின்றேன்

(வெண்பா)

1805. இனிக்க வினிக்கநா னெந்தைசீர் பாடி
மனக்கவலை யற்று மகிழ்ந்தேன்—நினைக்க
நினைக்க நினைக்கமெய்ந் நேயரகத் தென்றும்
இனிப்பதுகா ணெம்பிரான் சீர்.

1806. வாணுள் வழுப்பட்டு வீணு வொழியாது
வேணவாக் கொண்டு விழுப்புகழே—பேணலாய்
நாணுளுங் கீர்த்தி நலம்பாட வென்னையவன்
காணலாற் கற்றேன் கவி.

1807. காண்டலுறப் பெற்ற கருத்தாற்பே ரின்பவொளி
மூண்டொளிரப் பெற்று முகம்பொலியப்—பூண்ட
[மகிழ்
பொங்கிக் கிளர்ந்தவருட் பொற்புடைச்செஞ் சொற்
புங்கவனைப் போற்றுகின் றேன். [கொண்டு

1808. சித்திகளாந் தெய்வ மகளிர் திருநடஞ்செய்
முத்தியொளி பொங்குந்தன் முன்னின்று—நித்திய
பத்தியா மோனப் பரமோப சாந்திவளர் [சற்
புத்தியாற் போற்றுகின் றேன்.

(கொச்சகக் கலிப்பா)

1809. பேதலித்த மூடமதிப் பேதையேன் உண்மைநிலை
சோர்தலின்றித் தேறத் துரீய சொரூபமா
மூதலித்த வாற்றாலே மோனுனு பூதியாற்
காதலித்தேன் மெய்ஞ்ஞானக் கண்ணன் கழல்
[களே.

1810. கற்பனையே கண்டு கலங்கினே னுள்ளத்துத்
தற்பரமாங் கைவல்யத் தத்துவஞா னுனுபவத்
துப்பரவுண் டாகத் துரீய சொரூபமாப்
பொற்பவிளங் குற்றுன்செம் பொன்னடிகள் போற்
[றுதுமே.

1811. அசத்தான பாழி லகப்பட் டழுங்கும்
பசுத்துவமா மோகவெம் பாசமற வென்னுள்
விசுத்தவறி வாக விளங்கலுற் றுன்சீ
ரிசைத்துமகிழ் வாழ்வா லிறுமாக்கின் றேனே.

1812. இருட்பா தலத்திலமிழ்ந் தேங்காது ஞான
வருட்பார்வை நல்கி யகத்தகமா நின்றுன்
இருப்பா விதயத் தியானுன தன்சீர்
விருப்பா லுவந்து விளம்புகின் றேனே.

1813. இருட்பசுபா சங்கெட் டிகப்பவென் னுள்ளத்
தருட்பிரான் புக்காங் கருட்புலமை பெற்றேன்;
இருப்புணர்வா வுள்ள வியற்செம் பிரான்சீர்
விருப்பினுற் பாட விசைப்பதென் வாக்கே.

1814. தகவிலா வென்னுயிரைத் தான்பரிந்து தன்னே
டகல்வரிய வுண்மையா வாண்டவா நின்சீர்
புகல்வரிய தேனுமென் புன்சொல்லால் வாழ்த்த
வுவகைகொண்ட வாற்று லுளறுகின் றேனே.

1815. அவித்தைசே ராணவப்பா ழற்றெழிய வுண்மைத்
தவத்திலே யென்னறிவைச் சார்வித்த வாண்டான்
சுவத்தவியல் பான சொரூபத்தை நாளுங்
கவித்துவத்தாற் போற்றிக் களிக்கலுற் றேனே.

1816. என்னுனை யென்னரைய னின்னமுதென்
[றெண்ணியெண்ணிப்
பண்ணுட் டவருமன்பு பாராட்டுந் தம்பிரான்
பண்ணுளு மென்னைப் பணிகொண் டருளியசீர்
பன்னுகின்ற தோறும் பரவசஞ்சேர் கின்றேனே.

1817. பாழுக் குழைத்துவீண் பாடுபட்ட நாயேனைப்
பாழுக்கப் பாலாம் பரமபதம் சேர்த்திஞன்;
பாழிற் கிடந்து பதைத்தவெம் பாவமற
வாழக் கிடைத்தருளால் வாழ்த்தலுற்றேன் வள்ள
[லையே

1818. உள்ளுணர்வா வுள்ளத் தொளிர்சொருப வுண்மை
[யான்
கள்ளமன மின்மையாற் கண்பா டறியாதான்
பள்ளியயர் சொப்பனத்தேன் பாரப் பரம்பரனைப்
பள்ளியெழுப் பாடிமடம் பட்டதென்ன வெட்கமே.

1819. வித்தகமெய்ஞ் ஞானவருள் வித்தை யுதவுநல்ல
புத்தகங்காள்! உம்மை நான் போற்றிக்காப் பாற்ற
[வென்பால்
எத்தனங்கள் சற்றுமில்லா வேழைமையாற் காணீர்
குத்தமரா நும்பா லுதாசிபோல் கின்றேனே. [மிக்

குறிப்பு —எத்தனம் - கருவி, சாதனம்; உதாசி - உதா
சீனமானவன்; உதாசீனம் - அலட்சிய புத்தி.

## 2. ஸ்ரீ ரமண ஜயந்தி மங்களம்

(வெண்பா)

1820. தார்மிகவாழ் வோங்கித் தலையெடுக்கத் தாசரதி
பூமியில்வந் துற்ற புனர்வசுநாள் —சாமியமில்
போத சொரூபவருட் பூரணமாப் பொங்குகுரு
நாத னவதரித்த நாள்.

தாசரதி ......... புனர்வசுநாள் - தசரத சக்கரவர்த்தி
திருமக (ஞன ராம) ஞகத் திருமாலவதரித்த புனர்வசு
நக்ஷத்திரம்; சாமியம் - ஒப்புமை.

1821. சன்னிதிமுன் னின்று ஜயந்திவிழாச் சீர்விளங்க
மன்னவனை வாழ்த்துசுப மங்களங்கள்—என்ன
[கத்தே
மூண்டவெம் பாசமற முத்தியொளி வீசிமுன்னின்
றுண்டவா நன்கேற் றருள்.

1822. ஆண்டகுரு நாத னருட்பே ரமுதவொளி
யீண்டவளர் போக வியற்பதத்தே—வேண்டு
வதரிகே தார வழிபாடு முற்றுஞ்
சதிர்படவே சார்ந்த தெனக்கு

1823. ஆண்டான் ஜயந்தி யருள்விலா சத்திலுயிர்க்
கீண்டார்வம் பொங்கலுறு மெக்களிப்பால்—ஆண்
சதோதயவாழ் வான ஜயந்திவிழா நாளும் [டான்
இதேவிதமா நீள்க வினிது.

### 3 நூல்களின் பாயிரங்கள்

ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலைப்
பிரார்த்தனைப் பயன்

1824. பத்திக் கடலிற் படிந்து திளைத்தவருட்
சித்திக் கடலான சீரமணன்—துய்த்தபர
மானுபவம் பொங்க வளித்தமண மாலைசிவ
ஞானசுகம் நல்க நமக்கு.

**குறிப்பு :—பத்தி ஞான வடிவான பரபத்தி;**
**நல்க - அளிப்பதாக என வியங்கோள்.**

ஸ்ரீ அருணாசல பதிக அஷ்டகங்களின்
வரலாற்றுப் பாயிரம்

**(எழுசீர் ஆசிரிய விருத்தம்)**

1825. கருணையா லுயிரிற் கலந்தவா றுண்ட
கருத்தனு மருணமா கிரீசன்
கருணையா லென்னைக் கருணையா லென்னைக்
கருணையா லென்னையென் றேவாக்
கருணையா லுள்ளக் கருவனும் மதியைக்
கடாவலாற் றடுக்கலாற் றாது

கருணையா லென்னை யாண்டநீ யெனவே
கண்டனர் பதிகமட் டகமே.

1826. ஈண்டவே தன்னை யிழந்ததெய் வீக
ரமண மா முனிவா ருளத்தை
யாண்டபே ரருணா சலசிவக் கந்தை
யருட்பரா சத்தியா லரித்துத்
தூண்டவே மேன்மேற் றொடரவந் தாதித்
தொடையிலே யொவ்வொர்பா சுரமாக்
காண்டலா லந்தக் காட்சியை நமக்குக்
கண்டவா விண்டனர் தாமே.

உபதேசவுந்தியார்

(வெண்பா)

1827. வாழ்வா யுயிர்க்கு வடித்தளித்தா ணண்டவனே
ரூழா வுபதேச வுந்தியார்—சூழு
மவிச்சையினின் றுய்யுநெறி யற்புதமாத் தோற்று
சுவச்சமாம் போதந் தொகுத்து.

ஸ்ரீ ரமண சந்நிதி முறை

(கொச்சகக் கலிப்பா)

1828. வாதவூர் மாணிக்க வாசகரென் வாக்கிலிருந்
தோதலா லோதினே னோர்தகவு மில்லாதேன்
போத குருரமண புங்கவன்செம் பொன்னடிக்கு
நீதவொளி சேர்சந் நிதிமுறைநூ லன்பாலே.

ஸ்ரீ ரமணாநுபூதி

(வெண்பா)

1829. மாறுபி மான மயக்கமே மன்னுயிருக்
காறு வளர்த்தமுனை யாதலால்—யானே
ஏனதே யறக்கெட் டிலகுமியல் வாழ்வே
அநுபூதி சார மறி

1830. மனவா தனையை மடித்தென் னகத்து
டனுபூதி யாகவொளிர்ந் தாற்போல்—அனுவாதஞ்
சொல்லாற் புறத்துத் துலங்க விசித்திரமா
வல்லாளன் சொற்றருள் வான்.

ஸ்ரீமத் பகவத் கீதை

1831. அளத்தலருந் துன்ப வளக்கரு டாழ்ந்த
வுளக்கமைம் பார்த்தற் குரைத்தான்—திளைததனுறக்
காட்டும்பே ரின்பவருட் கண்ணபிரான் ஞான
மூட்டுமோர் கீதை மொழி. [வொளி

ஒழிவிலொடுக்கம்

1832. உண்ணனவா மோன வுணர்வொளியா லூடுருவிக்
கண்ணுடைய வள்ளல் கருத்தறிந்து—நண்ணுபர
வுண்மை யுணர்த்து மொழிவி லொடுக்கவுரை
வண்மை பெறக் காண்பனருள் வாய்த்து.

1833. இயற்றுவே ஞானெனக் கிட்டதோ ராணை
செயற்படவென் னுள்ளே தெரிப்பான்—மயர்த்துப்
பிழைபடா தாண்டான் பிறங்குவே தாந்த
வொழிவிலொடுக் கத்துக் குரை.

## 4. இறையடியவர்கள் மாட்சி

மணிவாசகர்

1834. சிந்தைமிகத் தேக்கித் திளைத்தற் குரியவருள்
விந்தைசேர் வாசகத்தின் மேன்மையால்—புந்தியூ
டாரமுதாப் பொங்கு மனந்த சிவானுபவ
சாரர் மணிவா சகர்.

1835. மணிவா சகர்சிவமே வாழ்வாக வுள்ளத்
தணிவா லணுத்தன்மை யற்றார்—துணிவா
வவரியல்பா முண்மை யருட்பரமாத் தேறி
யவரையுபா சிக்க வகத்து.

குறிப்பு :—அணுத்தன்மை என்றது மும்மலத்தில் ஆதி மலமான மூல ஆணவத்தை.

1836. மனமே சிவசொருப வாலறிவாய்ப் பொங்கும்
கனமோனக் காட்சிக் கோர் கண்ணுய்—மனமல்
வதீதசிவா னந்த வருட்பதத்தி லாழ்ந்த
ததீயர் மணிவா சகர்.

1837. நமவென் றகந்தை நசித்திறைவன் றுட்கீ
ழமைவொன் றனுபூதி யாட்சிக்—கிமயம்போற்
பொய்தீ ருதாரணமாப் பொங்குவோர் நம்மாழ்வார்
மைத்ர் மணிவா சகர்.

1838. கல்விப் பயனுங் கடவுட் பாபத்திச்
செல்வப் பெருவாழ்வு சேக்குவதிற்—செல்வத்
திருவா சகமுந் திருவாய் மொழியுங்
குருவா சகமாகக் கொள்.

1839. செய்யதிரு மேனிச் சிவத்தோ டபேதமாச்
செய்யமணி வாசகரைச் சிந்தித்தே—வைகறைத்தோ
றெம்பாவை யானவருட் செம்பாவை யோதிலுயிர்
வெம்பாவ முற்றும் விடும்.

திருநாவுக்கரசர்

1840. நாவுக் கரசு நவின்ற திருவிருக்கும்
பாவுக் கரசாப் பகர்வரே – ஆவிக்குப்
புத்தமுதம் போலும் பொருட்சுவையே யன்றியுயர்
பத்திமையும் வேண்டு பவர்.

(அறுசீர் விருத்தம்)

1841. கள்ளமாய் முன்னே யுள்ளக்
கருவனை வஞ்சித் தேன்பின்
னுள்ளுவா ருள்ளிற் றெல்லா
முடனுறை ந் தறிதல் கண்டே
அள்ளிய பத்தித் தொண்ட
ரடிப்பொடி யப்பர் போல
மெள்ளவே வெள்கி நானும்
விலாவிறச் சிரித்திட் டேனே.

1842. கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்
காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியே ளுகி நின்று
தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவா ருள்கிற் றெல்லா
முடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நாணும்
விலாவிறச் சிரித்திட் டேனே.

காளத்தியீசர்

(வெண்பா)

1843. நீளத் தியான நிகழ்த்துவார் நெஞ்சிலொளிர்
காளத்தி யீச ரருட்கழலே—வாளொத்த
கண்ணியர்தம் மோகக் கடல்கடந் துய்திபெறப்
புண்ணியர்மேற் கொள்ளும் புணை.

கம்பர், திருவள்ளுவர்

1844. ஆன்றமைந்த காட்சி யறவோரே மன்னுயிருக்
கீன்றதாய் தந்தை யிருவோரும்—ஊன்றுமுரத்
தம்பமே போலத் தமிழ்க்குக் கதியாவார்
கம்பர் திருவள் ளுவர்.

நாராயணர்

1845. சீராக நானிங்குச் செய்த நமஸ்காரம்
நாரா யணற்கங்கு நண்ணியதா—நேராகக்
காணும் பொழுது கவனமாக் கேட்டறிய
வேணுந் திருவன்னை மீர்.

நம்மாழ்வார்

1846. அமிர்தமய மான வருளிச் செயலால்
அமிர்த சொரூபர்நம் மாழ்வார்—சமரசமெய்ஞ்
ஞானனு பூதிக்கோர் நாயகமாத் தீஞ்சுவைசேர்
தேனுந் திருவாய் மொழி

1847. பகவனே டொன்றுப் படைத்தவனு பூகித்
தகவினர் தற்பரமாத் தக்கார்—தகவுரைக்கல்
எம்மா லியல்வதன்று யார்க்கும் மிகவரிது
நம்மாழ்வார் சீர்மை நலன்.

1848. அருள்வடிவா வுள்ளநம் மாழ்வாரைப் பேணில்
இருள்வடிவா மோக மிகப்பத்—தெருள்வடிவா
முண்மை புலப்பட் டொளிர்சொருபக் கைவல்ய
வண்மைசேர் வாழ்வு வரும்.

சடகோபர்

1849. தான்றன தென்ற விரண்டுமொரே தற்பரமா
வான்றபெரு மாட்சியா லற்புதராய்ப்—பூன்றவருட்
பேறுபெற்ற தெய்வப் பெரியார் சடகோபர்
வீறுபெற்ற மெய்வித் தகர்.

ஆண்டாள்

1850. திருப்பாவை யான தியானத்தா லாண்டா
னருட்பார்வை பெற்றவவ் வாண்டாள்—மருட்பாச
பந்தமறக் கண்டாள் பரந்தாமன் றன்னுருத்தன்
சொந்த சொரூபமாத் தோய்ந்து.

தொண்டரடிப் பொடியாழ்வார்

**(அறுசீர் விருத்தம்)**

1851. உள்ளத்தே யுறையும் மாலை
யுள்ளுவா னுணர்வொன் றில்லாக்
கள்ளத்தே னானுந் தொண்டாய்த்
தொண்டுக்கே கோலம் பூண்டேன்
உள்ளுவா ருள்ளிற் றெல்லா
முடனிருந் தறிதி யென்று
வெள்கிப்போ யென்னுள் ளேநான்
விலாவிறச் சிரித்திட் டேனே.

## 5. பகவான் உருக்கரந்தது

(வெண்பா)

1852. அருட்காயத் தேரூர்ந் தடியோமை யாண்டான்
அருட்காயந் தான்விட் டகன்றான்—வெருக்கொளா
தங்கப்ப ஞாக வணைந்தா னடியோங்கள்
பங்கப் படாமற் பரிந்து.

1853. வசமா வெனைத்தன் மயமாக்கி யாண்ட
சசரீரி போனாற்குரு சாமி—அசலத்
திரமா வொளிர்சொருப தெய்வ வருட்சிற்
பரமாக நின்றான் பரிந்து.

1854. அருள்வடிவு தன்னை யகண்டமா மோனப்
பொருள்வடிவு தன்னிற் புதைத்தோன்—தெருள்
[வடிவிற்
காணவே நானென் கணன்ம சொரூபமெய்த்
தாணுவாத் தாஞெளிர்கின் றான்.

1855. அருள்வெளிவீ டான வரும்பதத்தில் வற்றாப்
பொருள்வளஞ்சேர் சாந்திப் பொலிவால்—வெருள்
[வளர்சிந்
தாகுலங்க ளோய வகத்தே யகப்பொருளா
மேகலிங்க மாகவியைந் தான்.

1856. தொண்டரோ முக்குத் துலங்கினு னைம்புலத்தாற்
கண்டுகேட் டுற்றுக் களிக்கவே—பண்டுபோ
லென்னுக்கோ வெம்மை யிகத்தி லிருத்தித்தான்
மன்னினுன் றன்சொருப மாண்பு.

## 6. சுபம்

1857. என்றுங் கொலுவீற் றிருந்தொளிர்மெய்ஞ் ஞான
[வருட்
குன்றமா வோங்குங் குருரமணன்—வென்றிசேர்
செந்தமிழ்க்கோர் சீரரங்கர்ஞ் சேது பதிமுகவை
சொந்தமாச் சேர்ந்தான் சுபம்.

ஸ்ரீ ரமணர்ப்பணமஸ்து